# இலக்கியத் தோற்றம்.

(A History of Tamil Literature 250 to 1960 A. D.)







மு. கோவிந்தசாமி, M. A., B. O. L.

# இலக்கியத் தோற்றம்.

**(A History of Tamil Literature)**

**250 TO 1960 A.D.**



ஆசிரியர்:

**மு. கோவிந்தசாமி, M. A., B. O. L.**

*தமிழ் விரிவுரையாளர் (ஆராய்ச்சி)*

அண்ணமலைப் பல்கலைக் கழகம்.



*விற்பனை உரிமை:*

**பாரி நிலையம்,**

59, பிராட்வே, சென்னை.

மார்ச்சு 1960.



ஆசிரியரின் பிற நூல்கள்:

1. நல்ல நாடு
2. வள்ளுவரும் காந்தியும்
3. ஔவை
4. நக்கீரர்
5. இலக்கிய காலம்
6. பாரதி கவித்திறன்
7. பாரதிதாசன் கவித்திறன்
8. குறள் மனம்.

பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.

# முகவுரை.

சில்லாண்டுகட்கு முன்னெழுதிய 'இலக்கியகாலம்' என்ற எனது நூலின் திருந்திய இரண்டாம் பதிப்பு இவ் 'இலக்கியத் தோற்றம்' எனலாம். இலக்கிய காலம், இலக்கிய வரலாறு பற்றிய தனிக் கட்டுரைகளாகும். ஆனால் இது கடைச்சங்கத்திற்குப்பின் கி. பி. 250 முதல் இன்றுவரை, நூற்றாண்டு வரிசையில் எழுதப் பெற்ற செம்மையான இலக்கிய வரலாறாகும். அதனினும் இது மிகுந்த நீளமும் அகலமும் தெளிவும் மாறுதல் களும் உடையது.

இலக்கியத்தின் பொருளிலன்றி அதன்தோற்றம், காலம் ஆகியவற்றில் நேரத்தை வீணாக்குவது வீண், அறியாமை யென்றெல்லாம் பெசப்படுகின்றது. தமிழர் நாகரீகம் உலகில் முதன்மையானது, உயர்ந்தது எனப் பேசு வோரே இவ்வாறு கூறுதல் வியப்பையளிக்கின்றது. கால வாராய்ச்சியின்றி அந் நாகரீகத் தொன்மையை இவர்கள் எவ்வாறறிய முடிந்தது. 'உண்மைப்பொருளைக் காண்டல்' என்பது அறிவியலுக்குத்தான் (Science) என்பதில்லை, அதற்குமுன் வளர்ந்த சமயத்திற்கும் ஒத்த குறிக்கோ ளும் பயனுமாகும். காலவாராய்ச்சியென்பது ஒரு உண்மை காணும் அறிவு முயற்சியாகும். தொல்காப்பியர் உவமை முதலியவற்றையெல்லாம் 'பொருள் புலப்பாட்டிற்கே' கூறுகின்றார். எனவே நூலில் 'பொருள் புலப்பாடு' முதன்மையாகின்றது. அப்பொருள் புலப்பாட்டிற்கு நூலின் (தோற்ற) காலத்தையறிதல் இன்றியமையாத தாகும். இன்றேல் நூலுக்கு உண்மையாகப் பொருள் (உரை) செய்யவோ, உட்பொருளைப் புரிந்துகொள்ளவோ முடியாது. இதன் வழி நூலாசிரியன், அந்நூலைக்கற்போர்

கற்பிக்கும் ஆசிரியர் அனைவர்மீதும் தவறான எண்ணமும் உட்பகையும் வெளிப்பகையுங்கூட ஏற்பட்டு வருகின்றன; நூல்கள் மதிப்பிழந்தும் மறைந்தும் அழிந்தும் போகின்றன. இவ்வகையில் தொடர்ந்தேற்படும் வாய்ப் பூசல்களுக்கும் எழுத்துப் பூசல்களுக்கும் அளவேயில்லை. பகைமையும் வெகுளியும் ஆகாவென்பது வள்ளுவர் உரைத்த அறமாகும். அமைதி அறிவுயர்ச்சிக்கு முதல் தேவையென்பது அனைவர்க்கும் இசைந்ததாகும். இவ்வமைதியைத்தான் வள்ளுவர் 'நடுவுநிலை யென்றார்'. பல கோட்பாடுகட்கிடையேயும், அமைதியாகப் பேசாதிருந்து விடுவதன்று, ஆனால் அனைத்தையும் ஆராய்ந்து மனத்தில் உண்மையாகப்பட்டதனை விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக் கொள்ளுதலும், பொய்ம்மையை வெளிப்படையாக மரியாதையுடன் மறுத்துவிடுதலுமே அந்நடுவுநிலை யெனலாம்.

தொல்காப்பியர், திருவள்ளுவர், மாணிக்கவாசகர், கம்பர் ஆகியோரின் காலம் தெளிவுபடாமையால் ஏற்பட்டிருக்கும் பூசல்கள் எவ்வளவென்பதனை உலகமறியும். தொல்காப்பியர் 3000 ஆண்டுகட்குட்பட்டவரெனில் அவரைத் தமிழுக்குப் பகைவராகவும், மாணிக்கவாசகரைக் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டினரெனக் கூறுவிடில் அவரைச் சமயப் பகைவராயும், வள்ளுவரைக் கி. மு. முதல் நூற்றாண்டினரென்றுவிடில் அவரைக் கலைப் பகைவராயும் கருதுவோர் நாட்டில் இன்றும் உள்ளனர். ஒரு புலவர் காலத்தைப்பற்றி முற்போக்குக் கருத்துடையவர்களே மற்றொரு (அவர்க்குகந்த) புலவரைப்பற்றிப் பிடிவாதமாக இருக்கின்றனர்.

ஒரு நூலின் உட்பொருள் அதன் காலத்தே தோன்றிய மற்ற நூல்கள், வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவற்று

லேயே மிகப்பெரிதும் விளக்கமாகின்றது. எனவே நூலின் காலம் தெரியாவிடில் அக்காலத்தில் மற்ற நூல்களும் தெரிவதில்லை; எனவே மயங்கிய வேறோர் கால நூல்களுடன் பொருத்தி விளக்கஞ் செய்கையில் முரண்பாடும் தெளிவின்மையும் ஏற்படுகின்றன. நூலின் தோற்றத்தையும் காலத்தையும் வரையறுக்காதவரையில் இன்றுள்ள பெரிய உரை நூல்களைப் புரிந்துகொள்ளவும் முடியாது; புதிய விளக்கங்களைக் கூறவுமுடியாது; எனவே நூற்பொருள் புலப்பாடென்பது இல்லாமற் போய்விடும். அதனைத் தொடர்ந்து இன்றெழுதும் புதிய நூல்களிலும் தெளிவென்பதில்லையாய்விடும். எனவே மொழிப்பிணக்குகளும் பண்பாட்டுப்பூசல்களும் சமயச் சச்சரவுகளும் நீங்கி அறிவுள்ளத்தில் அமைதியும் ஆக்கமும் உண்டாக வேண்டுமாயின் அதற்குக் 'காலவாராய்ச்சி' முதன்மையானதாகும். இந்நூலுக்கணிந்துரைகள் அளித்து என்னை ஊக்குவித்த பேராசிரியர்கள் அனைவர்க்கும் எனது உளஞ்சேர்ந்த நன்றி உரியதாகும்.

# உள்ளுறை.

## அணிந்துரைகள்.

திரு: தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், M.A., B.L., M.O.L.,
தமிழ்ப் பேராசிரியர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

---

இந்த நூலாசிரியர் திரு. கோவிந்தசாமியார் அண்ணு மலைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் ஆராய்ச்சிப் பகுதியில் தொண்டாற்றும் ஆராய்ச்சியாளர். தாம் பெற்ற இன்பத்தை உலகமும் பெற்று இன்புற வேண்டும் என்ற எண்ணத்தால் தாம்கண்ட உண்மைகளை நூலாக எழுதுவதில் துள்ளிக் குதிக்கும் மனமுடையார். "இன்று இலக்கியத் தோற்றம் என்ற தமிழ் இலக்கிய வரலாற்றினைத் தமிழ் உலகிற்கு தம் அன்பின் காணிக்கையாகத் தந்துதவுகிருர். இன்றுள்ள நிலையில் தமிழ் இலக்கிய வரலாறு தமிழ் இலக்கியங்களின் கால வரலாருகவே முடிகிறது. நான்காவது சங்கம் என்று ஒன்றிருந்ததாக இவ்வாசிரியர் காண்கிருர். இதன் பயனுக இலக்கிய வரலாற்றுச் சிக்கல்கள் பல தீர்வதாக இவருக்குத் தோன்றுகிறது. நான்காம் சங்கத்தைப் பற்றிக் கனவு கண்டவர் பலர். சிலபல இலக்கியங்களை இந்தச்சங்கத்தோடு இணைத்து முறைப்படுத்துவதில் இவர் முந்தியுள்ளார். இந்தக் கொள்கையும் ஒருசில இடங்களில் ஒரு புதிராகவே எனக்குத் தோன்றுகிறது. இப்போது என் புல்லறிவிற்குத் தோன்றும் முடிபுகளோடு இந் நூலின் பல முடிபுகள் வேறுபடுகின்றன. ஒவ்வொருவருக்கும் இவ்வாறு தோன்றலாம். ஆனுல் எந்த முடிபினைத்தான் முடிந்த முடிபு எனக் கூறமுடியும். ஆனுல் பலப்பல முனைகளில் இருந்து அஞ்சாது பலரும் ஆய்ந்து வந்தால்தான் எல்லோரும் ஒப்புக்கொள்ளும் முடிபு ஒன்று ஒருநாள் வெளியாகும். ஆதலின் இந்த நூலை வரவேற்று உலகினுக்கு அறிமுகம் செய்வதில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி.

டாக்டர், அ. சிதம்பரநாதன், M. A., Ph. D., M. L. C.

---

புலவர் மு. கோவிந்தசாமி, பி. ஓ. எல்., எம். ஏ., அவர்களால் எழுதப்பட்டு, "இலக்கியத்தோற்றம்" என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள இலக்கிய வரலாற்று நூலினைப் படித்துப் பார்க்கும் வாய்ப்புப் பெற்றேன். இந் நூலினுள் கி. பி. 3-வது நூற்றாண்டு முதல் கி. பி. 20-வது நூற்றாண்டு வரை அமைந்த இலக்கியங்களின் வரலாறு நடுநிலையோடு அழகாக எழுதப்பட்டுள்ளது. இந்நூலினுடைய சிறப்பு, நூற்றாண்டு வரிசைப்படி இது எழுதப்பட்டுள்ளது என்பது. அந்தந்த நூற்றாண்டின் இலக்கியப் போக்கு நன்றாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இதனுட் காணப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்களின் காலவரையறை பற்றிய ஆராய்ச்சியும், மாணிக்கவாசகர் காலம் பற்றிய ஆராய்ச்சியும், நக்கீரதேவர் முதலியவர் பற்றிய ஆராய்ச்சியும் மேலும் ஆராய்ந்துகொள்ளத் தக்கவை.

இலக்கிய வரலாறுகளாக முன்னரே வெளிவந்துள்ள நூல்கள் பல இருந்தாலும், இதுபோன்ற நூல், ஒன்றுக்கு மேல் அதிகமாக வெளிவர வேண்டுமென்று கருதுகிறேன்; நாட்டில் இலக்கிய வரலாற்றினை அறிந்துகொள்ள வேண்டிய நிலையில் பற்பல படிநிலைகளிலுள்ள மாணவர்கள் இருக்கிறார்கள். ஆதலால், தமிழிலக்கிய வரலாறு என ஒன்றுதான் இருக்க வேண்டுமென்பது கட்டாயமன்று.

உண்மையை அறிந்துகொள்ளப் பலரால் எழுதப்படும் இலக்கிய வரலாற்று நூல்கள் வரவேற்கப்படும். அவ்வழியில், கற்றுத்துறைபோகிய ஆய்வுரைஞர் திரு. மு. கோவிந்தசாமியின் இந்நூல் வரவேற்கப்படும் என்று நம்புகிறேன். நான்காம் சங்கம் பற்றிய இவ்வறிஞரின் ஆராய்ச்சியை மாணவர் பலர் படித்துப் பயனுறுவார்கள் என்று நம்புகிறேன்.

டாக்டர், வி. ஐ. சுப்பிரமணியம், M. A., Ph. D.
தமிழ்த்துறைத் தலைவர்,
கேரளப் பல்கலைக் கழகம், திருவனந்தபுரம்

---

இந்நூல் ஆசிரியர் மு. கோவிந்தசாமி எனது நண்பர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் பயின்றபோதும், புதுடெல்லியில் பணியாற்றிய போதும், அவர் திறமையை நன்கறிவேன். பல நூற்களின் ஆசிரியராகிய அவரைத் தமிழகம் இப்போது நன்கறியும். அவர் எழுதிய ஏனைய நூற்களைப் போலவே இந்நூலிலும் அவருடைய தமிழ்ப் பற்றையும் சலியா உழைப்பையும் காணலாம்.

பரந்துகிடக்கும் தமிழ் இலக்கிய வரலாற்றை அள வாகச் சுருக்கி கோவிந்தசாமியார் தந்திருக்கிறார்'. பரந்து பட்ட ஒரு பொருளைச் சுருக்குவது எளிதன்று. சுருக்கும் போது பல எஞ்சும். எஞ்சும் வாதங்கள் பலருக்கு முக்கிய மானவையாய்த் தோன்றும். மற்றொரு தொல்லை, பொது மக்கள் விரும்பாத மறுப்புரைகளை, விலக்கி எல்லோ ருக்கும் உடன்பாடான கருத்துக்களைக் கூறுவதாகும். இது எளிதன்று. நுணுகிப் படிக்கின்றவர்களின் அதிருப் தியை சம்பாதிக்கவும் நேரிடும். இத்தொல்லைகள் இரண் டிலும் இருந்து இந்நூலாசிரியர் திறமையாகத் தப்பித் திருக்கிறார் என்று கூறலாம்.

தமிழிலுள்ள பழைய இலக்கியங்களில் பெரும் பாலானவையும் காலவரையறை பெறாதன. இவற்றிற் குரிய காலத்தைப் பழமைக் கண்ணோடு, பி. சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை, மு. இராகவையங்கார் முதலாய அறிஞர்கள் நிறுவினர். ஆனால், இவர்க ளுடைய கருத்தில் பலவற்றை எஸ். வையாபுரிப்பிள்ளை

மறுத்து வெவ்வேறு காலங்களை நிலைநாட்டினர். மறைமுகமாக வையாபுரிப் பிள்ளையின் காலநிலை ஏற்றுக் கொள்ளப்பட்டாலும் நேர்முகமாக பலர் மறுத்து வருகின்றனர். அவரை மறுப்பது எளிதன்று; அதற்கு அவர் மேற்கொண்ட ஆராய்ச்சி முறையே காரணம். இலக்கிய வரலாற்றை நிர்ணயிக்க அவர் மொழிநிலையைப் பெரிதும் பயன்படுத்தினர். அவரைப் போலவே எஸ். வி. இராமசாமி ஐயர் என்பாரும் அதே அடிப்படையில் பல முடிவுகளைக் கூறினர். வையாபுரிப் பிள்ளையும் இராமசாமி ஐயரும் நுணுக்கமான விவரண இலக்கண முறையைப் பின்பற்ருமல் அங்கங்கே கிடைக்கும் சொல்லுருவ வேறுபாட்டைத் தங்கள் முடிவிற்கு அடிப்படையாகக் கொண்டனர். தனிமனிதர்கள் இவ்வளவுதான் அந்தக்காலத்தில் செய்ய இயலும். ஒவ்வொரு இலக்கியத்திற்கும் விவரண இலக்கணம் காணும் முயற்சி கேரளப்பல்கலைக்கழகத்திலும் அண்ணுமலையிலும் முடிந்தவுடன் வையாபுரிப் பிள்ளையின் கருத்துப் பலவற்றை மறுக்க இயலும் என்பது இப்போது தெளிவாகி வருகிறது. மாறுபாடு ஆராய்ச்சிக்கு மிகவும் தேவையானது. ஆதாரத்துடன் அமைந்த எந்த மறுப்பையும் அறிவு வளர்ச்சியை விரும்பும் ஆராய்ச்சியாளர் எவரும் வெறுக்கமாட்டார்கள். நான் அறிந்தமட்டில் வையாபுரிப் பிள்ளையும் இதற்கு விலக்கல்லர். இந்நூலாசிரியர், வையாபுரிப் பிள்ளையின் கருத்தை ஏற்றும் மறுத்தும் இருக்கும் இடங்கள் சுவை தருவனவாக இருக்கின்றன.

பழைய நூற்களின் வரிசையில் எண்ணத்தகாதவையும் சங்க நூற்கள் என்று கருதிவருபவையுமான காவியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூற்கள் முதலியனவற்றை நான்காம் சங்க நூற்கள் என்று கூறி அதற்குரிய வாதங்களை இந்நூலாசிரியர் விரிவாக

அமைத்திருப்பதையும் கவனிக்க. இந்நான்காம்சங்கவாதம், தனித் தனியாக நிற்கும் பல சிக்கல்களை, முடித்து நிற்கும் ஒரு நாணுகப் பயன்படுகிறது. நடைமுறைக்கு மிகவும் உதவும் ஒரு கருத்து இது.

இந்நூலைப்போல் பல முயற்சிகளை ஆசிரியர் மேற்கொள்ள எல்லா வாய்ப்புக்களையும் தமிழ்த்தாய், என் அன்னை, அருளுவாளாக.



## துணை நூல்களும்
## சுருக்கப்பெயர் விளக்கமும்.

K. A. N ; Pan : Pandyan Kingdom:
K. A. Nilakanta Sastri,
,, ; I. H : Indian History ,,
,, ; F. N : Foreign Notices of S.India ,,
Dr. S. K.; S.C.O.S.I: Some Contributions of South
India to Indian Culture.
,, ; Vaishnavism: Early Vaishnavism of S. I.
,, ; Mani: Manimekalai in its Historical
Settings ,,
P. T. S ; H. O. T. : History of the Tamils :
P. T. Srinivasa Iyengar
Vincent A. Smith : Early Indian History
S. V. ; H O. T. L. : History of Tamil Language &
Literature: S. Vaiyapuri Pillai
Win ; H. O. I. L. History of Indian Languages
Winternitz.
Maraimalai : Manicka : Manickavasakar kalam :
Maraimalaiadigal.
R. S. Iyer : H. O. I : History of India :
R. Sathianathier.
K. S. Pillai : இ. வ : Ilakkiya Varalaru ;
K. Subramania Pillai.
K- Sri. Pillai : த. வ : Tamil Varalaru :
K. Srinivasa Pillai.
K. G. Chari : E. H. O. A ; Early History of
Andhradesa; K. Gopalachari.
M. V. K. Rao : G. O. T : Gangas of Talakad :

Prof, Dub : Pallavas: Prof. Dubreaul.
B. V. Rao : E D. O. A : Early Dynasties of Andhradesa : B. V. Rao.
Keith : H. O. S. L : History of Sanskrit Literature : Keith.
R. C. Mazumdar : Ancient Indian Colonies — Champa — R. C. Mazumdar.
T. V. S : History of Tamil Literature : T. V. Sadasiva pandarattar.
,, Later Cholas : ,,
மு. ரா. : Alwar Kalanilai : Seran Senguttuvan : M. Raghava Iyengar.
,, : Sasana Tamil Kavi Caritam; Peruntogai.
ரா. ரா. : Tamil Varalaru : R. Raghava Iyengar.
M. S. Purnalingam Pillai ; History of Tamil Literature.
Veerasami Chettiar : Vinodharasa manjari.
Kalai Kalanjiyam : T. P. Meenakshisundaranar.
Tamizha Ninaithupar: Mullaipattu ,,
Kalai Kalanjiyam : Dr. R. P. Sethu Pillai.
Avvai : Saiva Ilakkiya Varalaru : Avvai. Doraisami.
Dr. A. Chidambaranathan : Advanced Studies in Tamil Prosody.
Thaniladalgal ; Tamil navalar canitai.
K. Vellaivaranan : Tolkappiam.
Sentamil & Tamilppozhil.
Pulavar Pnranam - Dhandapani swami.

Prof. G. Subramania Pillai : History of Saiva Siddhanta.
Somasundara Desigar : History of XVI cen. Poets
Kumarasamy Pulavar : History of Tamil Pulavars
K. A. Ramasamy Pillai : Pulavar Varisai.
Pandikovai ; Tol : Silap: Commmentavies.
E. I : Vol. 17 : Ephigraphica Indica. (Velvikudi Grant).
J. O. M. S : Journal of Mythic Society.
J. O. R. M : Journal of Oriental Research, Madras.
S. I. Ins : Vol. II : Part IV & Indian Antiquary Vol. VII:
Dr. Meenakshi : Administrative Systems of Pallavas.
Gopalan : Pallavas.
H. J. Rose : Hand-Book of Greek Literature.
Warmington : Commerce between Rome & India.
Ptolemy : Ancient India.
Mahavamse ; Rajavali ; Rajaretnakari : Mahavamse of Ceylon.
Dr Raja : Thesis on Periapuranam : Dr. M. Rajamanickam.
T. G. Aravamudhan : Kaveri.
K. N. Sivaraja Pillai : Agastya in Tamil Land.
S. S. Bharati : Tiruvalluvar : S. Somasundara Bharati.
T. Chengalvaraya Pillai : Tiruvalluvar.
Nigantu; Parani; Akapporal. Comment.
Kanakasabai Pillai : Tamils 1800 Years ago.

# இலக்கியத் தோற்றம்

---

## முன்னுரை

### முச்சங்க காலம்.

நக்கீரர் தமது இறையனரகப்பொருளுரையில் கடைச் சங்கம் உக்கிரப்பெருவழுதி காலத்துடன் முடிந்துவிட்ட தாகக் கூறுகிருர். அக்காலம் கி. பி. 200—250 என்பது அறிஞர்களனைவர்க்கும் ஒப்பமுடிந்த கருத்தாகும். கி. பி. 200 அளவில் செங்குட்டுவன் வாழ்ந்திருக்கிருன். அவனுக்குப் பிற்பட்டுப் பாண்டியன் தலையாலங்கானத்து வென்ற நெடுஞ்செழியன் வாழ்ந்திருக்கிருன். அவனைப் பாடிய நக்கீரர் கடைச்சங்கத்துப் புலவருள் கடைசியாகலாம். அப்பாண்டியனும் கடைச்சங்ககாலத்துக் கடைசியரசனுகலாம். §எனவே கி. பி. 250 கடைச்சங்கத் திறுதிக் காலமென்பது பொருத்தமேயாகலாம்.

சங்ககாலமென்பது அதற்கு முற்பட்டு விளங்கிய மூன்று சங்கங்களுக்குரிய காலமாகும். தமிழரது தனிச் சிறப்புடைய வாழ்க்கையே இக்காலவெல்லையுள் வளர்ந்த தாகும். கலிங்கத்துக்குத்தெற்கே அசோகனும் வரவில்லை. குப்த அரசருள் சமுத்திரகுப்தனே நேரே தமிழகத்திற்குள் புகுந்து திரும்பியுள்ளான். அவுணர் (ஹூணர்) முதலிய அயல் நாட்டாரது கலப்பும் தமிழகத்தில் கி. பி. 4-ஆம் நூற்றுண்டுக்குப் பின்பே பேசப்படுகின்றது.

---

§ K. A. N: Pandyas: 36; S. V: H. O. T. L: 21.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட தலையாலங்கான நெடுஞ்செழியன், நக்கீரர், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலியோரது காலத்திற்றான் ஆரியக் கலப்பும் யவனர் கலப்பும் தமிழிலக்கியங்களுள் குறிக்கப்படுகின்றன. எனவே கி. பி. இரண்டாம் நூற்றாண்டு வரைப்பட்ட இலக்கியங்கள் தமிழரது தனிப்பண்பாட்டினை விளக்குவனவென்னலாம்.

தொல்காப்பியம் தெளிவாகச் சங்ககால நிலையையறிவிக்கக்கூடிய ஆதாரமெனக்கொண்டுவிடலாம். பத்துப்பாட்டு கடைச்சங்கத்திற்குச் சிறிது பிற்பட்டதெனப் பின்னர் ஆராயப்படும். எட்டுத்தொகையுள்ளும் சில, கலித்தொகை பரிபாடல் முதலியன பிற்காலத்து நூல்களாகலாமென்ற ஐயமுள்ளது. எனவே இவற்றை நீக்கி நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு முதலியவற்றை இக்கால வாராய்ச்சிக்குரிய கருவிகளாகக்கொள்ளலாம். வரலாற்றிற்குப் புறநானூறு மிக்க துணைசெய்யும். ஒரு புலவர் பல அரசருடனும் ஒரு அரசன் பல புலவருடனும் தொடர்பு கொண்டமை புறநானூற்றாலறிதலால் அவர்கள் அனைவரின் காலத்தையும் அறிதல் எளிதாகும். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு முதலியவற்றுள் வரும் புலவர்களும், அரசர்களும் புறநானூற்றிலும் குறிக்கப்படுபவர்களாகவே யுள்ளனர். சில பத்துப்பேர்களைத்தவிர, புறநானூற்றுப் புலவரையும், அரசரையும் 5—6 குழுக்களாக ஆக்கிவிடக்கூடும். அனைவரும் 100—150 ஆண்டு எல்லைக்குள் வாழ்ந்தவராகக் காணப்படுகின்றனர்.

இக்குழுக்களுள் அகப்படாத புலவருள் பலர் கடைச்சங்கத்திற்கு முற்பட்டவரும் ஆதல் கூடும், பிற்பட்டவரும்

ஆதல் கூடும். இவர்களைப் பிரித்தறிதலில்தான் அருமை யுள்ளது. சீத்தலைச்சாத்தனாரும், பாரதம் பாடிய பெருந் தேவனாரும், கோச்செங்கணானும் புறநானூற்றுப் பாடல் தொடர்புடையராகக் காணப்படுகின்றனர், ஆனால் அவர்கள் பிற்காலத்தவரெனப் பின்னர் ஆராயப்படுகின் றது. முதற்சங்கத்தவராகக் குறிக்கப்படும் முரஞ்சியூர் முடிநாகராயரும் இடைச்சங்கத்திற்குரிய ‡முடத்திருமாற னும் பாடிய பாடல்கள் அகப்புறநானூற்றில் உள்ளன. ஓரிரண்டேனும் முதல் இடைச்சங்கப் பாடல்கள் நமக் குக் கிடைத்துள்ளனவென்றே சொல்லவேண்டும். இங் ஙனம் கி. பி. 4-5-ஆம் நூற்றாண்டுவரைப்பட்ட பாடல்கள் தொகைநூல்களில் அகப்பட்டுள்ளன.

பிற்காலப் பாடல்களைத்தவிர்த்து முற்காலப் பாடல் களைக் குறித்துக்கொண்டு சங்க காலத்தைப்பற்றி யறிய வேண்டும். நல்லகாலமாகத் தொல்காப்பியம் வாழ்க்கைக் கும், இலக்கிய யாப்பிற்கும் இலக்கணங் கூறுதலால் அஃதொன்றே அழியாமல் நின்றது நமக்குப்போதியதாகும். அதனோடு தொடர்புடையனவாகக் கருதப்படும் ஐந்திரம், அதனுடன் தொடற்புற்ற காதந்திரம் முதலிய இலக்கணங் களும் இவ்வகையில் துணைசெய்யலாம். பாணினி முதலி யவும் இவற்றிற்கெதிர் நூல்களாக இருந்தமையின் அவை யும் ஆராய்ச்சிக்குத் துணைபுரியும். முதல் இடைச்சங்க விலக்கியங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால் அவை பற்றிய இலக்கணக் குறிப்புக்கள் தொல்காப்பியத்தில் உள்ளன. அவை போன்றே பிற்காலத்திலக்கியங்கள் அவற்றின் அமைப்பையுணர்தற்குக் கருவியாகலாம். அக் காலத்தே அவற்றைப் போன்று விளங்கிய வடமொழி

‡ முடிநாகராயர்: புறம்:2; முடத்திருமாறன் நற்றிணை: 105; 228.

இலக்கியங்களிலும் ஓரளவு ஆதாரங்கள் கிடைக்கலாம். நக்கீரர் கூறுதலால் முதலிடைச்சங்க காலத்தில் இலக்கண விலக்கியங்கள் தமிழிலும் வடமொழியிலும் எதிரெதிராக ஒரேமாதிரி வளர்ந்திருக்கக்கூடுமெனக் கருத இடமிருக்கின்றது. தொல்காப்பியர் காலம் பாணினிக்கொப்பாகக் கி மு. §4—5-ஆம் நூற்றுண்டாகலாமென அறிஞர் ஒப்புகின்றனர். தொல்காப்பியர் இடைச்சங்க காலத்தவராகக் குறிக்கப்படுகிறர். அதற்கு முற்பட்டது முதற்சங்கம். அங்கும் இலக்கண நூல்கள் இருந்தவாகத் தெரிகின்றது. தமக்கு முற்காலத்து ஆசிரியரை 'என்ப, என்பனுர் புலவர்' எனத் தொல்காப்பியர் குறிக்கிருர். அவர்களையெல்லாம் கற்றறிந்தும் தழுவியுமே தொல்காப்பியர் நூலியற்றினுர்.

எனவே முதற்சங்கம் கி. பி. 3-ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டுக் குறைந்தது 1000 அண்டுகளுக்கு முன் இருந்ததாகக் கொள்ளலாம். எவ்வளவு காலம் அது விளங்கியது என்பதுபற்றி யெல்லாம் இன்னும் முடிவு செய்யக்கூடவில்லை. நக்கீரர் கூறும் காலவெல்லைகளைப் பற்றிக் கணித்தறியும் முறை நமக்குத்தெரியும் வரையில் இவ்வகையில் இருள் சூழ்ந்தே கிடக்கும்.

சங்கங்கள் என நக்கீரர் குறிப்பவை உரிய அமைப்புடனும் நடைமுறையுடனும் விளங்கியவோவென்ற ஐயம் அறிஞரிடையுள்ளது. தொல்காப்பியப் பாயிரத்தில் 'நிலந்தரு திருவிற் பாண்டியனவையத்து' என்ற குறிப்புள்ளது. இதனுல் அரசரது கொலுமன்றங்களையும் அவர்களது காலங்களையுமே நக்கீரர் சங்கங்களாகவும் சங்ககால

---

§ R. S Iyer; H. O. I I. P. 151 — , கே. சி. : த வ II : 9.

மாகவும் குறிக்கிருர் என இப்போதைக்குக் கொள்ளலாம். அவ்வவைகளில் புலவர்களும் உறுப்பினராகவிருத்த லுண்டு. நூலேதும் அரங்கேற்றவோ, அன்றிப் பாராட்டுப் பாடல்களைக் கேட்கவோ அரசன் அப்புலவர்களை மட்டும் கூட்டி அச்செயல்களை நிறைவேற்றினனெனக் கருதலாம். †மற்றபடி நக்கீரர் கூறுவனவற்றுள் அக்கால வெல்லையுள் இருந்த புலவர்களும், அரசர்களும், நூல்களும் உண்மையேயாகலாம். எனவே சங்கவமைப்பு என்பதனைத் தவிர்த்து காலம், அரசர், புலவர், கடல்கோள் முதலிய நிகழ்ச்சிகள் பற்றிய நல்லாதாரங்களாக நக்கீரரது சங்கங்களைப்பற்றிய குறிப்புகளைக்கொள்ளலாம். கி. பி. 7-ஆம் நூற்ருண்டைய உரை, கோவை முதலிய நூல்களமைப்பிற்கும் 14—15-ஆம் நூற்ருண்டில் அவற்றினமைப்பிற்கும் அதிக வேறுபாடில்லை. 4—5-ஆம் நூற்ருண்டின் வெண்பா, அவற்றுள் கூறிய அறங்கள் ஆகியன 14—15-ஆம் நூற்ருண்டுகளிலும் அதிகம் வேறுபடவில்லை. கி பி. 6—7-ஆம் நூற்ருண்டுச் சைவசமயக் கோட்பாடுகளும் இசை நாடகக்கோட்பாடுகளும் 1000 ஆண்டுகட்குப் பின்பும் மிகுதியாக வேறுபட்டுவிடவில்லை. எனவே கடைச்சங்கத்திற்கு 1000-ஆண்டுகளின் ஆதார நூல்கள் நமக்குக் கிடைக்காவிடினும் அவை பெரிதும் கடைச்சங்க நூல்களுடன் தொடர்பும் தழுவலும் உடையனவாகவே இருந்திருக்கக்கூடும் எனக்கொள்ள இடமுண்டு. ஆகவே கடைச்சங்க நூல்களையும் தொல்காப்பியத்தையுங்கொண்டு பெரிதளவு முச்சங்ககால நிலைகளை

---

† P. T. S; H. O. T-252; 251; — Dr S. K. - S. C. O. S. I. 11
The legend of Three Sangam is not a genuine tradition handed down from one generation of scholars to another but a hotch-potch of vague memories of royal assemblies.

யறியக்கூடுமென்பது அறிஞர் துணிபு. ‡அவ்வாறே கொண்டு அவர்கள் ஆராய்ச்சி செய்துள்ளனர். தடைப் பட்ட இடங்களிலும் குறைப்பட்ட இடங்களிலும் இந்திய வரலாற்றினையும் தொடர்புற்ற பிற நாடுகளின் வரலாற் றினையும் துணையாகக்கொள்ளலாம்.

தொல்காப்பியக்காலமும், பாணினீயகாலமும் ஒன் றெனத்தெரிகின்றது. பாணினீயத்தில் அதற்கு முற்பட்ட ஆயிரமாண்டுகளினும் மேற்பட்ட ஆரியர்தம் வாழ்க்கை யைப்பற்றியும் வேதங்களைப்பற்றியும் இலக்கணமும் குறிப் பும் கிடைக்கின்றன வென்னலாம். அதேயியல்பினை யுடைய தொல்காப்பியமும் அதற்கு முற்பட்ட ஆயிரமாண் டுத் தமிழர்தம் வாழ்க்கையைப்பற்றிக் கூறுவதெனில் அது பிழையாகாது. அதுபோலவே இப்போது கிடைக்கும் சங்கநூல்கள் அவற்றுக்கு முற்பட்ட 600 – 700-ஆண்டுக் குறிப்புக்களையுடையன எனக் கூறுதல் பொருந்தும். தொகை நூல்களுள் அகப்பொருட் பாடல்கள் நூல்தோன் றிய காலத்தியல்புகளையும் பெரிதும் உணர்த்துவனவாகக் கருத இடமிருக்கின்றது. புறப்பாடல்கள் நகர நாகரீகம், கோட்பாடுகளாகியவற்றையும் அகப்பாடல்கள் நாட்டிற் கியல்பாகிய நாட்டுப்புறநாகரீகத்தையும் விவரிப்பனவாகக் கொண்டு ஆராயவேண்டும்.

அகத்தியரது மாணவர் தொல்காப்பியர் என எழுத் ததிகாரத்தில் நச்சினார்க்கினியர் கூறிய கதையில் உள்ள வரலாற்றுண்மையை ஆய்தல் இன்றியமையாதது. முதற் சங்கத்திருந்த அகத்தியர் இடைச்சங்கத்தும் இருந் திருக்கிறார். தொல்காப்பியர் அவரது மாணவரெனில்

‡ H. O. T; P. T. S.

அவர் ஆசிரியரது கோட்பாடுகளையும் அவரது காலமாகிய முதற்சங்ககால நிலையையும் அறிந்தே இலக்கணம் செய்திருக்க வேண்டும். எனவே கடைச்சங்கத்தும் நூலாயிருந்ததெனப்படும் தொல்காப்பியம் முச்சங்கத்திற்கும் விளக்கமுடையதாகக் கருதத்தக்கதாகும். தொல்காப்பியத்துக்கூறிய நூற்பொருள்கள் முச்சங்ககால இலக்கியங்களின் நூற்பொருளாதல் வேண்டும். அவ்வகையில் முதலிரு சங்கங்களின் இலக்கியங்கள் கிடைக்காத இடர்ப்பாட்டில், தொல்காப்பியப் பொருளதிகார முதலியவற்றால் அக்கால இலக்கியங்களின் நூற்பொருள்களை ஒருவாறறிதல் கூடும். அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருட் கோட்பாட்டினையே உடையது தொல்காப்பியம்; இது அந்நூலின் காலவெல்லைகளையும் நிலையையும் அறிதற்குரிய ஒரு நல்ல சான்றாகலாம்.

நாற் பேறுகளுள் வீடுபற்றிய உணர்வு தமிழிலக்கியங்களில் மிகுந்தது கி. பி. 3-ஆம் நூற்றாண்டிலென்னலாம். இக்கோட்பாட்டினைக் கடைச்சங்கத்தார் தொல்காப்பியரிடமிருந்து அறிந்தே இலக்கியம் இயற்றியிருப்பின் தொல்காப்பியம் கடைச்சங்கத்துக்கு முற்பட்டது இடைச்சங்கத்திற்குரியது என்பது பொருந்தாதாகின்றது. பொருளதிகாரச்சிறப்புப் பெற்ற தொல்காப்பியம், வாழ்க்கையில் பொருளே சிறந்ததெனக் கொண்டு அதனைக் கொண்டு அறமும் இன்பமும் பெருக்கவேண்டும் என்ற ஒரு சமூகக்கோட்பாடு மிகுந்த காலத்தில் இயன்றிருக்க வேண்டுமெனத் தெரிகின்றது. கடைச்சங்க நூல்களிலும் தொல்காப்பியத்திலும் காணும் கடவுட்பெயர்கள் ஒரு நல்ல காலக்குறிப்பாதல் கூடும். புறநானூற்றில் சிவன் திருமால், இந்திரன் முதலியவர்கள் பாராட்டப்பெறுகின்றனர். கூற்றுவன் பெயர் குறிக்கப்படுகின்றது. அகநூல்

களுள் முருகன் பெயரும், தொல்காப்பியத்தில் வருணன், மால், இந்திரன் முதலிய பெயர்களும் வருகின்றன. கந்தழி சிவவழிபாட்டைக் குறிக்குமென்பர். பிற்காலத்தே மணிமேகலையிற்றான் தெளிவாகக் கந்துநிலைக் கடவுள் குறிப்பு வருகின்றது. கொடிநிலை, வள்ளி என்பன பற்றியும் ஆராயவேண்டும். கண்ணன் என்ற பெயர் குறிக்கப்படாததையும் கருதவேண்டும். கி. மு.வில் இத்தகைய கடவுட்கோட்பாடுகள் சிறந்திருந்த காலமே தொல்காப்பியரது காலமென அறியலாம்.

தொல்காப்பியத்தில் பிற்காலச் சேர்க்கைகள் இருக்கலாமென அறிஞர் கருதுவாருமுளர். அவ்வாறாயின் அப்பகுதிகளைப் பிரித்து நீக்கியபின் மற்றவற்றைக்கொண்டு பார்க்கவேண்டும். முதற்சங்கத்திலும், இடைச்சங்கத்திலும் தோன்றிய பரிபாடல், கலித்தொகை முதலிய நூல் வகைகள் நமக்குக்கிடைக்காவிடினும் அவற்றின் மாதிரியாகக் கடைச்சங்கப் பரிபாடல் கலித்தொகை நூல்கள் கிடைக்கின்றன. கிடைக்கும் இவ்விரு நூல்களிலும் பிற்காலச் சேர்க்கைகளுண்டோவெனப் பார்க்கவேண்டும். முதலிடைச் சங்கத்திலும் பரிபாடல்கள் திருமால், சிவன், முருகன் வைகை போன்றவர்களைப் பற்றியவைதாமாவெனவும் நோக்கவேண்டும்.

அகப்பாடல்களில் சாதிக் குறிப்பில்லை யெனலாம். புறநானூறு முதலியவற்றில் பிரிவுகள் குறிக்கப்படுமளவில் உள்ளன. தொல்காப்பியத் தொடக்கத்தில் விவரமாகக் கூறப்படுகின்றது. தொல்காப்பியத்து எண்வகை மணம் பற்றிய குறிப்புள்ளது. அர்த்த சாத்திரத்திலும் காமசூத்திரத்திலும் எண்வகை மணங்கள் விவரிக்கப்படுகின்றன.

பண்டமாற்று முறையன்றி நாணயச் செலாவணி பெரிதும் குறிக்கப்படவில்லை. பொன்னுமணியும் குறிக்கப்படுகின்றன. கடலில் செல்லுதல், யார் யார் செல்லவேண்டும் யார் செல்லக்கூடாது என்பனபற்றியும் வரையறைகள் உள்ளன.

கி. மு. 8-ஆம் நூற்றுண்டிலிருந்து 5-ஆம் நூற்றுண்டு வரை இந்தியாவில் எழுத்து வடிவங்கள் தோன்றின வென்பர். தொல்காப்பியர் எழுத்துக்களைஎழுதும் வடிவம் பற்றிக்கூறுகிருர். இசைபற்றித் தொல்காப்பியத்தில் கூறப்படுவதாக உரையாசிரியர்களும் அறிஞரும் கூறுகின்றனர். மொழியியலில் இங்நிலைகள் எப்போதேற்பட்டிருந்தன என்பதைக் காணவேண்டும். வடமொழி, திசை மொழிகள் (சொல்) பற்றிய குறிப்புக்கள் உள்ளன. தொல்காப்பியத்தில் வேங்கடம் குமரியென்ற நாட்டெல்லைகள் குறிக்கப்படுகின்றன. காடுறைப்பகுதி (முல்லை) மலைப்பகுதி (குறிஞ்சி) என மக்கள்வாழ்பகுதிகள் பிரிக்கப்பட்டிருத்தலால் நகரம் ஊர், உழவு முதலியவற்றிற்காக இயற்கை மிகுதியாக அழிக்கப்படாத காலம், போக்கு வரத்து நெறிகள் மிகவாக ஏற்படாத காலம் இது என உணரவிருக்கின்றது. தொல்காப்பிய முழுவதற்கும் குறைவற்ற மேற்கோள்களாகக் கடைச்சங்கப் பாடல்களையே உரையாசிரியர்கள் காட்டுதலால் முச்சங்கங்களின் யாப்பமைதியும் நூற்பொருளமைதியும் ஒன்ருகவே இருந்திருக்கலாம் எனக்கருத இடமிருக்கின்றது. முதலிரு சங்கத்தின் முதிர்ச்சியே கடைச்சங்கமாதல் கூடும்.

# கடைச்சங்க காலம்

கடைச்சங்க காலத்திற்குப் பிற்பட்ட இலக்கியங்களின் வரலாற்றினை ஆராய்ந்து வரிசைப்படுத்துவதே இந் நூலின் நோக்கமாகும். கடைச்சங்க காலமும் அதற்கு முற்பட்ட முதல் இடைச்சங்க காலமும் இன்னும் மிகுதியும் தெளிவுபடவேண்டி யிருத்தலாலும் அக்காலங்களைப் பற்றிய சமூகவமைப்பு ஓரளவு தெளிவாயிருத்தலாலும் அப்பகுதியினை இங்கு எடுத்துக்கொள்ளவில்லை. முன்னுரையாகக் கடைச்சங்க காலத்தின் இறுதியெல்லையைத் தெளிவுபடுத்திக்கொண்டு அக்கால அரசியல் சமூகம் பாவியல் அமைப்புக்களை மனத்துட்கொண்டு வருவது ஈண்டு இன்றியமையாததாகும்.

முதற்சங்கத்திற்கு முரஞ்சியூர் முடிநாகரும் இடைச் சங்கத்திற்கு முடத்திருமாறனும் காலவாராய்ச்சிக்குப் பெரிய வழிகாட்டிகளாகக்கூடும். கடைச்சங்கத்திற்குக் கழாஅத்தலையாரும் பரணர், ஔவை, நக்கீரர் போன்றோரும் காலவரிசையை யறிதற்குக் கைகாட்டிகளாக நிற்கின்றனர். ‡வரலாற்றாசிரியர் கடைச்சங்க காலவளவினை கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகளென்பர். கி. பி. 75 கி. பி. 225-க்குட்பட்ட காலமென வரையறுப்போருமுண்டு. கடல்சூழ் இலங்கை வேந்தன் கயவாகுவின் காலம் இவ்வகையில் பெரிதும் பற்றுக்கோடாகின்றது. அவன், செங்குட்டுவன் பத்தினிக்குக் கோயிலெடுக்கும் போது வஞ்சிக்கு வந்திருந்ததுடன் அவ்வழிபாட்டினை

‡ கே. சி : த. வ. II. 5. ; K A. N: Pandyas 36; S. V. 21.

இலங்கைக்குக் கொண்டுசென்று பரப்பியவனுமாவான். அவனது காலம் கி. பி. 173—195-ஆகும். எனவே கி. பி. இரண்டாம் நூற்றுண்டினிறுதியில் வாழ்ந்த செங்குட்டுவனைப் பாடிய பரணர் வாழ்ந்தவராவார். பரணருடன் அதிகமான் நெடுமானஞ்சியைப்பாடிய ஔவையும் ஒரு காலத்தவராவர்.

கடைச்சங்க காலமறிதற்குரிய கடைசிப் புலவர் நக்கீரர். அவர் தலையாலங்கானத்து வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை நெடுநால்வாடையில் பாடியுள்ளார். அப்பாண்டியன் ஔவையைப் புரந்த வள்ளல் அதிகமானின் மகனாகிய பொகுட்டெழினியைப் போரில் வென்றிருக்கிறான். எனவே நக்கீரரும், நெடுஞ்செழியனும் கி. பி. மூன்றும் நூற்றுண்டிற்குரியராவர். இவர்களே கடைச்சங்கத்திறுதியிற் சிறந்த புலவரும் புரவலரும் என்னலாம்.

மற்றும் ஔவையார் தொண்டைமானைப்பாடிய பாடலொன்று புறநானூற்றிற் காணப்படுகின்றது. §தொண்டைமான் இளந்திரையன் தானே பாடியதாகிய பாடல் ஒன்றும் அங்கு காணப்படுகின்றது. வேங்கடத்துக்குக் கிழமை பூண்ட அரசர் சிலரும் புறநானூற்றில் போற்றப்படுகின்றனர். ஆனால் கடைச்சங்கப் பாடல்களுள் †வேங்கடம் மொழி பெயர் தேயமெனவும் அப்பகுதியைப் புல்லியென்பவன் ஆண்டானெனவும் காணப்படும் குறிப்புக்கள் பலவாயுள்ளன. புல்லியென்பவன் ஆந்திர சாதவாகன அரசனான புலிமாயியே யாகவேண்டும். அப்

§ புறம்—185

† புல்லி அகம்: 61 ; மொழி பெயர் தேயம்: அகம்: 31.

பெயருடையோர் மூவருள் கடைசியானவன் §கி. பி. 213—220-இல் ஆண்டிருக்கிறுன். எனவே மூன்ரும் நூற்ருண்டின் தொடக்கம் வரையில் வேங்கடம் சாதவாகனரிடமிருந்திருக்கிறது. புல்லி என்பவன் காளவர் என்ற ஒரு தனிக்குடிக்குத் தலைவனெனினும் அவனும் ஆந்திரவரசர்க்கு உட்பட்டவனுகவே இருந்திருக்கவேண்டும். சாதவாகனர் கி. பி. மூன்ரும் நூற்ருண்டுத் தொடக்கத்தில் நிலைகலங்கிய பின்னரே அவருடைய நாட்டுப் பகுதிகள் பல்லவர் முதலியோரால் பிரித்துக்கொள்ளப் பட்டன. இக்காலத்திற்ருன் தமிழரசர் சிலரும் வேங்கடப் பகுதிக்குக் கிழமை பூண்டவராக விளங்கியிருக்கக்கூடும்.

எனவேதான் கடைச்சங்கவெல்லையை ஆசிரியர் கி. பி. 250 எனக்குறிப்பாராயினர். இந்திய வரலாறு முழுவதற்குமேகூட இம்மூன்ரும் நூற்ருண்டும் இரண்டாம் நூற்ருண்டும் வரலாற்றெல்லைகளாக உள்ளன. ‡மௌரியர் காலம் கி மு. 325—கி. பி. 188 எனவும் அயலார் கலப்புக்காலம் கி. பி. 200—கி. பி. 300 எனவும் குறிக்கப்படுகின்றன. இவ்வெல்லைகளுடன் கடைச்சங்ககாலமும் ஒத்துவருவது ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாகும்.

இனி இக்கால நிலையை ஓரளவு அறிந்துகொள்ளுதல் அடுத்தகால நிலைகளை ஆராயும் முயற்சியில் பெருந்துணை புரியும். நாட்டின் அரசியல் சமூக வரலாறுகள் இலக்கிய வரலாற்றினின்றும் பெரும்பான்மையும்வேறுபட்டனவல்ல. அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து ஆகிய நூல்களே கடைச்சங்க நிலைகளையறிதற்

§ R. S. Iyer ; H. O. I. I : 183.
‡ Ibid - 94.

காம் உண்மையான நூல்களாகக்கூடும். சமய நிலையைப் பொறுத்தமட்டில் அகநூல்களில் முருகன் அடிக்கடிப் பேசப்படுகிறுன். புறநூல்களில் இந்திரன், திருமால், பலதேவன், சிவன் முதலானேர் குறிக்கப்படுகின்றனர். மக்கட் பெயருள் புத்த ஜைனப் பெயர்கள் காணப்படுவனவாக உணர்கிறேம். கி. மு. 3-ஆம் நூற்றுண்டிலேயே ஜைன பௌத்தர் தென்னுட்டிற்கு வந்துவிட்டதாக வரலாறுரைக்கும். தனி மனிதனுக்குரியவாகவோ அரசியலுக்குரியவாகவோ இந்து, பௌத்தம், ஜைனம் ஆகிய எச்சமயமும் இக்காலத்துப் பரவவில்லையென்பதே புலனுகின்றது. ஆனல் †இவையெல்லாம் அருகருகே அடங்கியிருந்தன, அமைதியாய் வாழ்ந்தன எனக்கூறலாம்.

அரசியலில், மூவேந்தரும் சிறந்து விளங்கிய காலம் இதுவேயாகும். இக்காலத்தில் எழுமுடித்தாயங்கள் அடிக்கடி பேசப்படுகின்றன. நெடுஞ்செழியன் எழுவர் அரசரைத் தலையாலங்கானத்து வென்றிருக்கிறுன். வள்ளல்களும், வேளிரும், எருமையூரரும் இவருட்குறிக்கத் தக்கவராவார். மூவரசருக்குள் அடிக்கடி போர்கள் நிகழ்ந்துள்ளன. இப்போர்களைப்பற்றியும் அரசர் புலவர்க்குப் பரிசில் அளித்ததுபற்றியுமே புறநானூறும் பதிற்றுப்பத்தும் பெரும்பான்மையாகப் பேசுகின்றன. இக்காலத்தில் சமயத்தைவிட அரசுக்கே தலைமையிருந்துள்ளது. மூவேந்தரும் ஒற்றுமையாயிருந்த காலங்கள் மிக அருமையாகவே காணப்படுகின்றன, §அவை புலவரால் பெரிதும் மகிழ்ந்து பாராட்டப்பெறுகின்றன.

---

† R. S. Iyer ; H O. I. I—188
§ புறம் - 58 : 367.

சமூக நிலையில் சாதிகளே இன்னும் பிரியவில்லை. நானிலக்குடிப்பிரிவுகளே வழக்கிலிருந்தன. கி. பி. 2-ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே சாதிகள் தலைதூக்கிப் பார்க்கின்றன. மக்கள் அரசரால் நன்கு புரக்கவும் முறை தவறாமல் ஆளவும்படுகின்றனர். இக்காலமக்கள் வாழ்வு மிகவும் செழிப்பானதாகும். உறுபசியும் செறுபகையும் இல்லாததோர் அமைதிநிலை இருந்ததென்னலாம். பகை பிறநாட்டார் பகையன்று. ஆதலால் போர் அரசுகளை யலைத்தன்றிச் சமூகங்களை அலைக்கவில்லை. நாட்டுவளமும் போரினால் தமிழகத்தில் ஒரு மூலையிலிருந்து மற்றோர் மூலைக்கு மாறிற்றன்றி வெளிநாடுகளுக்குச் சென்றுவிட வில்லை. குடும்ப நிலையில் அமைதியும் இன்பமும் இருந்தமை உணரப்படுகின்றது.

வரலாற்றிற்காதாரமாகிய இலக்கியப் படைப்பில் ஆசிரியப்பாவே கருவியாக இருந்துள்ளது. நமக்குக் கிடைக்கும் சங்கநூல்களெல்லாம் இவ்வகைப் பாவினால் இயன்றனவே. ஒரு கோவையான கதையைக்கொண்ட தொடர்நிலைச் செய்யுட்கள் தோன்றவில்லை. கி. பி. 3-ஆம் நூற்றாண்டில் வெண்பாவகை வழக்கத்தில் முகிழ்த்திருக்கக் கூடும். நூற்பொருளில் பெரிதும் தமிழக வழக்காறுகளை யும் சொற்களில் தமிழ்ச்சொற்களையுமே இக்கால நூல் களில் எதிர்ப்படக் காணலாம். ஆசுகவிகளும் மதுர கவிகளும் நிறைந்த காலம் இதுவாகும்.

# நான்காம் சங்கம்

## (கி. பி. 250—550)

**கால நிலை:**

தமிழ் இலக்கிய வரலாற்றில் இஃதோர் பொற்கால மாகும். †இந்திய வரலாற்றில் கி. பி. 300—600-க்குட் பட்ட காலத்தைக் §குப்தர் காலமெனக் குறிக்கின்றனர். ‡தமிழகத்தில் இக்காலம் வரலாற்றில் ஓர் "இருண்ட காலம்" எனக்கருதப்படுகிறது. சேர சோழ பாண்டியரது வரலாறெதுவும் இக்காலத்தில் தெளிவாகக் கிடைக்க வில்லையென்பதே அதற்குக்காரணம். ஆனால் இலக்கிய வளர்ச்சியில் ஒளிநிறைந்த காலம் இதுவெனத்தோன்று கின்றது. இவ்வொளியைக் காண்பதற்கு ஆசிரியர்களிடை யிருக்கும் கருத்துவேற்றுமைகள் அகலவேண்டும்.

சைவசமய வரலாற்றில் குறிக்கப்படும் 'கொங்குதேர் வாழ்க்கை' யென்னும் பாடலுக்கு நக்கீரர் குறைகூறிய தமிழ்ச்சங்க நிகழ்ச்சி இக்காலத்திலேயே நிகழ்ந்ததாகும். இக்குறுந்தொகைப் பாடல் கடைச்சங்கத்ததாகலாம், அதுபற்றிய சங்க நிகழ்ச்சியே இக்காலத்திற்குரியது. அன்றி இறையனார் என்ற புலவர் இந்நாலாஞ்சங்க வுறுப்பினராகலின் இப்பாடல் இக்காலத்ததெனவே கொள்ளுதல் பொருந்தும். தொகைநூற்றொகுப்புக்காலத் திணைந்த பாடல் பலவற்றுள் இதுவுமொன்றாகலாம். திருவிளையாடற்புராணத்தில் குறிக்கப்படும்சங்கம் இதுவே. சிவபெருமான் தலைமைதாங்கி நடத்தியதும் உக்கிரப்பெரு வழுதியென்ற பாண்டியன் புரந்ததுமாகிய சங்கம் இது

---

† R. S. Iyer : H. O. I. I § K. A. N: Pandayas 36.
‡ P. T. S. 238 ; கே. சீ: நாலடியார்.

தான். இறையனுரகப் பொருளுக்கு உரை இங்குதான் காணப்பட்டது. இச்சங்கத்தில் திருக்குறளுக்குப் பாராட்டுரைகள் வழங்கப்பட்டு அது திருவள்ளுவமாலையாக உருப்பெற்றது. மணிமேகலையியற்றிய சீத்தலைச்சாத்தனுரும் கல்லாடம்இயற்றிய கல்லாடரும் இச்சங்கத்துப்புலவர்களாவர். சிலப்பதிகாரமும் கலித்தொகை பரிபாடல் முதலிய நூல்களும் இக்காலத்தில் தோன்றியன. மற்ற கீழ்க்கணக்கு நூல்களும் இப்போது மலர்ந்தனவே யாகும். இச்சங்கத்லத நாம் நாலாஞ்சங்கம் எனக் குறிக்கிறோம். கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் விளங்கிய மூன்றும் (கடைச்) சங்கத்தினும் இதுவேறுபட்டதாகும். கடைச் சங்கமும் இந்நாலாஞ் சங்கமும் ஒன்றேயென்ற மயக்கம் தெளிவுபெறவேண்டும்.

இச்சங்கம் கி. பி. 5—6-ஆம் நூற்றுண்டில் விளங்கியிருக்கிறது. இக்காலத்திற்றுன் (கி. பி. 470) வச்சிரநந்தியென்ற சமண முனிவர் மதுரையில் சங்கமொன்று நிறுவினுர். இந்நாலாஞ்சங்கமாகிய நக்கீரர் சங்கம் அச்சமண சங்கமேயெனக் கருதுவாரும் உளர். †நுட்பமாக ஆராய்கையில் இந்நாலாஞ்சங்கம் அதேகாலத்தில் வச்சிரநந்தி சங்கத்திற்கெதிராகச் சைவசமயத்தை வளர்ப்பதற்கென ஏற்படுத்தப்பட்டதாகும். எவ்வாறுயினும் வச்சிரநந்தி

---

† P. T. S: H. O. T: 251. "The Tamil Sangam was first imagined as a religious body in imitation of a Dravida Sanga established by Vajranandi in 470. A D.

மறைமலை: கொங்குதேர் வாழ்க்கையென்னும் செய்யுளுக்குக் குற்றங்கூறிய நக்கீரர் கடைச்சங்கத்திற்குப்பின் கி பி 5-ம் நூற்றுண்டில் மதுரையில் மற்றையொரு தமிழ்ச் சங்கத்தில் சமண்புலவர் பலரோடிருந்து தமிழ் ஆராய்ந்தவராவர். மாணிக்க—410.

சங்கம் கடைச்சங்கத்தினும் வேருனதென்பது அனைவர்க்கும் உடன்பாடாகும்.

கி. பி. 250-600-க்கு உட்பட்ட சுமார் முந்நூருண்டுகளும் ஒரு அரசியல், சமூக அமைப்பினைக் கொண்ட வரலாற்றுக்காலமாகும். இச்சங்கம் உருவாதற்கு இம் முந்நூருண்டுகளும் காரணமாகியுள்ளன. இக்கால வெல்லையின் நிகழ்ச்சிகளெல்லாம் இச்சங்கத் தொடர்புடைய நூல்களில் இடம்பெற்றுள்ளன. இக்காலவிலக்கியங்கள் இச்சங்கத்துடன் ஏதோவொரு வகையில் தொடர்புற்றுள்ளன. இதனைப் பௌத்த சமண சைவ 'சமயவளர்ச்சிக்' காலமென்னலாம். கடைச்சங்ககாலம் அரசியல் தலைமைபெற்றுவிளங்கியது. இக்காலம் சமயத் தலைமை பெற்றதென்னலாம்.

**நான்காம் சங்கம்**

§ 'நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி, நற்கனகக் கிழி தருமிக்கருளினேன் காண்' என அப்பர் பெருமான் ஒரு சங்கத்தைக் குறிக்கிருர். எனவே அப்பர் காலமாகிய கி. பி. 7-ஆம் நூற்ருண்டுக்கு முன், ஒரு சங்கம் இருந்ததென்பது உறுதி. 'அந்தண் மதுரைத்தொகை யாக்கினும்' எனச் சம்பந்தர் குறிப்பதும் இதனையே யாகும். எனவே இந் நாலாஞ் சங்கம் கி. பி. ஆரும் நூற்ருண்டில் விளங்கியதாகக் கருதுவது பொருத்தமாகும். தருமிக்குப் பொற்கிழி யளித்ததாகவும் அதனில் அப்பர் குறிப்பிடுகிருர். † அந்நிகழ்ச்சியைத்தான் கல்லாடமும் திருவிளை

---

§ திருத்தாண்டகம் : திருப்பத்தூர் - 66-3

† திருவிளையாடல்; சங்கப்பலகையிட்டது; கல்லாடம் '34'
'இறையோன் பொருட்குப் பரணர் முதல்கேட்ப
பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவனும்'.

யாடல் புராணங்களும் விரித்துரைக்கின்றன. தருமி யென்ற அந்தணனுக்குப் பொன்னுதவவேண்டி இறைவன் 'கொங்குதேர் வாழ்க்கையஞ்சிறைத்தும்பி' என்ற பாடலைப்பாடி பாண்டியனிடம் அனுப்ப, அப்போது அவையிலிருந்த நக்கீரர் அதற்குப் பொருள் குற்றம் உண்டெனமறுத்தார். இதனைத் தருமி இறைவனிடம் உரைத்து முறையிடவும், இறைவன் வெகுண்டு நக்கீரரைப் பொற்ருமரைக் குளத்தில் வீழச்செய்தார். அப்போது கபிலபரணர் முதலிய புலவர் வேண்டுதலாலும், நக்கீரர் இரங்கிப்பாடிய அந்தாதிப்பாடல்களின் வழிபாட்டினுலும் இறைவன் அருள் சுரக்க, நக்கீரர் உய்ந்து கரையேறினர்.

இந்நிகழ்ச்சி யெதுவும் கடைச் சங்கத்திற்குத் தொடர்புடையதன்றென்பது வெளிப்படை. அச்சங்கத்திற்கு இறைவனே தலைவனுக விருந்தானென்பதும் ஆதாரமற்றதாம். கடைச் சங்கப் புலவரது பாடலெதனுள்ளும் இந்நிகழ்ச்சிக்குரிய குறிப்பு எதுவுமில்லை. திருவிளையாடல் புராணம் குறிக்கும் இச்சங்கத்திலிருந்த நக்கீரர் பாடிய †அந்தாதிப் பாடல்கள் திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி முதலியவென அறிகிறேம். நக்கீரரது மற்ற பாடல்கள் கோபப்பிரசாதம், திருக்கண்ணப்பர் திருமறம் எனப் பதினேராந் திருமுறையால் உணர்கிறேம்.

இவ்வாற்ருல், இச்சங்கத்தைப் பற்றியும் அங்கு நிகழ்ந்த வரலாற்றைப் பற்றியும் ஒரு தெளிவும் உறுதியும்

---

† கல்லாடம்: 52.

அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல்
வாவியில் கேட்ட காவியங் களத்தினன் - கல்லாடம்.

பரஞ்சோதி திருவிளையாடல்:

கயிலை காளத்தி, சகமெலாம் புகழ்தருமொ
ரந்தாதியு முரைத்தான் -

ஏற்படுகின்றது. இச்சங்கத்திற்கும் பதினோராந் திருமுறையிலுள்ள நக்கீரரது பாடல்களுக்கும் வரலாற்றுத் தொடர்புண்டென்பது மறுக்க வியலாததாகும். கொங்குதேர் பாடலுக்குக் குற்றங் கூறியதும் அந்தாதி முதலிய பாடல்களைப் பாடியதும் ஒரே நிகழ்ச்சியின் இருபிரிவாகும்.

§நக்கீரரது பாடல்களிற் காணும் குறிப்புக்களால் இச்சங்கம் மூன்றுஞ் (கடைச்) சங்கத்தினும் வேறுபட்டதென்பது தெளிவாகிறது. நக்கீரர் அங்குத் தனக்கு முற்பட்ட நாயன்மாராகக் கண்ணப்பர், சாக்கியர், சண்டேசர், முதலியோரைக் குறிக்கிறார். இவர்கள் எப்படியும் கி பி. இரண்டாம் நூற்றாண்டிலோ அதற்கு முன்போ இருந்தவரெனக் கூறமுடியாது; நாயன்மார் காலத்தை (கி. பி. 7-ஆம் நூற்) யொட்டிக் கடைச் சங்கத்திற்கும் ஏழாம்

---

§ நக்கீரர் 11-ஆம் திருமுறை; கோபப் பிரசாதம்:

> " மானுடனாகிய சண்டியை வானவனாக்கியும்
> கற்கொண்டெறிந்த சாக்கிய னன்பு
> தற்கொண் டின்னருள் தான்மிக வளித்தும்
> சீர்மலி சிலந்திக் கின்னர சளித்தும் "

$ S. V: 34; 113. He bears the name of Nakkirar. But there are strong grounds for holding that he was different from and lived far later than any of the Poets so for mentioned ....... We can hardly identify the two. $Thiruthondathogai mentions also a group of poets under the general name Poyyadimai - illada Pulavar and Nambiandar Nambi names three Poets specially and they are Kapilar. Paranar and Nakkirar. These names occur among the Poets whose Poems are collected in the II Thirumurai and are different from the Sangam poets who were great literary luminaries of the ancient period - P. T. S.

நூற்ருண்டிற்கும் இடையிற்ருன் விளங்கி யிருக்க வேண்டும்.

எனவே இவர்களைக் குறிக்கும் §நக்கீரர் கடைச்சங்க நக்கீரரினும் வேறுபட்டவர், அவரிருந்த சங்கமும் கடைச் சங்கத்தினும் வேறுபட்டது என்பது தெளிவாகும். ‡கண்ணப்பர், சாக்கியர், சண்டேசர் முதலியோரை கி. பி. 6-ஆம் நூற்ருண்டிற்குச் சற்று முற்பட்ட நாயன் மார்களாகவே ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இச்சங்க நூல்களாகக் கருதப்படும் கல்லாடத்திலும் திருமந்திரத் திலும் காரைக்காலம்மையும் பதஞ்சலியும் (வியாக்ர பாதரும்) குறிக்கப்படுகின்றனர். §கண்ணப்பர் காரைக்கா லம்மையார் ஆகியோர் கி. பி. 5-ஆம் நூற்ருண்டினரென அறிஞர் கருதுவர். வெள்ளியம்பலத்தில் திருக்கூத்துக் கண்ட இப்பதஞ்சலியும் ஐந்தாம் நூற்ருண்டினரே யாவர்.

இங்ஙனம் இச்சங்க நூல்களில் குறிக்கப்படுவோர் பலர் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டிற்கும் அதன் முற்பட்ட காலத்திற்கும் உரியோராகலின் இச் சங்கம் ஐந்தாம் நூற்ருண்டிற்கும் பிற்பட்டதாகவேண்டும். ஆகவே கடைச் சங்கத்திற்குப் வேருனது என்பது தெளியப்படும். இது கி. பி- 5-ஆம் நூற்ருண்டின் கடைசியில் வச்சிரநந்தி சங்கத் தோற்றகாலத்தில் நிறுவப்பட்டு கி. பி ஆரும் நூற் ருண்டின் பிற்பகுதிக்குமேலும் விளங்கியிருக்க வேண்டும்.

---

‡ Dr. Raja: Thesis on Periapuranam.

§ T. V. S: H O. T. L. of 300-60 K. S. Pillai. இ வ. II. 341 *மறைமலை-மாணிக்கவாசகர் 700* Dr. S. K 236.

†இச்சங்கத்தில் 49-புலவர் இருந்தனர் எனத் திருவிளையாடலும் நம்பியாண்டார் திருவந்தாதியும் குறிக்கும். இப்புலவர்களையே சுந்தரமூர்த்திகள் தம் திருத்தொண்டத் தொகையுள் 'பொய்யடிமை யில்லாத புலவர்' எனக் குறிக்கிறார். நம்பியாண்டாரும் தரணியிற் பொய்ம்மை யிலாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர், பரணர், நக்கீரர் எனக் குறித்தலால் இந்த 49-புலவருள் நக்கீரர், கபிலர், பரணர் ஆகிய மூவரும் தலைமையானவர் என்பது புலனாகிறது.

இம்மூவரையும் ‡இச்சங்கத்திற்குரியவராகக் கல்லாடமும் திருவிளையாடலும் பாராட்டுகின்றன. பதினோராந் திருமுறையிற்காணப்படும் கபிலதேவநாயனார் பரணதேவ நாயனாரது பாடல்கள் இக்கபில பரணர்களால் பாடப் பட்டனவேயாம்.

†திருவள்ளுவமாலை இச்சங்கத்தில் தோன்றியதே யாகும். 49-புலவர்களின் பெயரும் இந்நூலிலன்றி வேறெந்த தமிழிலக்கியத்திலும் குறிக்கப்பெறவில்லை. மாலையில் காணப்படும் 53-பெயர்களுள் சிவபெருமான், நாமகள், அசரீரி, உருத்திசன்மன் ஆகிய பெயர்களை

---

† S. V. 113; நம்பி. திரு. சங்கப்பலகை 10; 4 பாடல்; நம்பியாண்டார் திருவந்தாதி-33

திருவிளை: அதர்பட நாற்பத்தொன்பது பேரென், றறைந் திடக் கடவம் - 10

நம்பி: தரணியிற் பொய்ம்மையிலாத் தமிழ்ச்சங்கமதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர்-35.

‡ நம்பியாண்டார் : திருவந்தாதி. 65; கோயில் விருத்தம்-68.

† கல்லாடம்-14 "வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர்முன் முதற்கவிபாடிய முக்கட் பெருமான்"

நீக்கிவிட்டால் மற்றையோர் இறையனார் முதலிய 49 பேராவர். திருவள்ளுவ மாலையை ஐயப்படுவோர் (ஆசிரியர்) பலர். கி. பி ஆறும் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலக்குறிப்பெதுவும் அதனில் காணப்பெறவில்லை. மேற்குறித்த நால்வரது பாடல்களையன்றி மற்றவை அவ்வப்புலவரால் பாடப்பெற்றனவேயாகும். 'உலகெலாம்' என இறைவன் அடியெடுத்துக்கொடுத்ததாலேயே பெரிய புராணத்தை யாரும் வரலாற்றாதாரமற்றதெனக் கூறிவிடுதலில்லை. †நம்பியது பாடல்கள் மாணிக்கவாசகர், திருமுறை கண்ட சோழன் முதலியோரது வரலாற்றிற்கு அரிய ஆதாரங்களாகின்றன. அதனில் 'பொய்யடிமையில்லாதவர்' 49-புலவர், கபிலர் பரணர் நக்கீரர் முதலோரென்பது காணப்படுகின்றது. §திருவிளையாடல் போன்ற புராணங்கள் வரலாற்றிற்கு எவ்வளவோ துணையாகின்றன. சாதவாகனர், குப்தர் வரலாற்றினையறிய வாயுபுராணமும் விஷ்ணுபுராணமுமே பெருங்கருவியாயுள்ளவென ஆராய்ச்சியாளர் போற்றுகின்றனர்.

---

§ E. H. I: V. A. Smith: "Naturally the Puranas received some attention as sources of ancient Indian History."
"Introduction: Cultural History of Vayu-Purana: "It was Purgitar who put the Puranic studies on a sound basis and the credit of rescuing the Puranas from the morass of mythology and of convincing the learned world of ther historical value must essentially go to him."

†" .....சிற்றம்பலமுகடு
கொங்கிற் கனகமணிந்த ஆதித்தன்"
"வருவாசகத்தின் முற்றுணர்ந்தோனை வண்தில்லைமன்னை
திருவாதவூர்ச் சிவபாத்தியன்செய் திருச்சிற்றம்பலப்
பொருளார்தரு திருக்கோவை"

49-புலவர் கடைச்சங்கத்தில் இருந்தனரென நக்கீரர் தமது இறையனாரகப் பொருளுரையில் எழுதியுள்ள மையாலும் நக்கீரர் முதல் பல பெயர்கள் கடைச் சங்கப் பாடல்களுள்ளும் காணப்படலாலும் இது கடைச் சங்கமே யென்பர் பலர். கடைச்சங்கப் புலவரது சமயங்களைப் பற்றித் தெரிந்துகொள்ளும் குறிப்புக்கள் கிடைக்கவில்லை. மற்றும் அவர்கள் தொண்டத்தொகையுள் போற்றுதற் குரிய சைவர்கள் என்பதற்கு எவ்விதச்சான்றுகளும் இல்லை. மற்றும் மாலையில் பாடிய உருத்திரசன்மரும் உப்பூரிகிழாரும் கடைச்சங்க நூல்களுள் பாடவில்லை. குலபதி நாயனர், நக்கீரதேவ நாயனர், கபிலதேவ நாயனர், பரணதேவ நாயனர் என நாயன்மார் காலத்தை யொட்டிய பெயர்களே இங்குக் காணப்படுகின்றன. கடைச்சங்க நக்கீரர் கபில பரணரை யாரும் (தேவ) நாயனர் என்ற அடைமொழியுடன் குறித்தலில்லை. எனவே கடைச்சங்கப் பெயர்களையுடைய இச்சங்கத்து நக்கீரர் முதலோர், கடைச்கங்கத்திற்கு 300 ஆண்டுகட்குப் பின் அதே பெயர்களுடன் விளங்கிய இரண்டாவது வரிசை யினராவர். கபிலர், ஔவை, வரகுணன் முதலிய பெயர்களையுடையோர், பலர் இருந்தமை தமிழ் வரலாற்றி னரால் ஒப்புக்கொள்ளப்பட்ட செய்தியாகும்.

†அகநானூறு முதலிய நூல்கள் உப்பூரிக்கிழார் மகன் உருத்திரசன்மரால் தொகுக்கப் பெற்றவெனவும் அத் தொகுப்பு கி. பி. 4—5-ஆம் நூற்றுண்டில் நிகழ்ந்ததென வும் அறிஞர் கூறுவர். அந்த உப்பூரிக்கிழாரும் உருத்திர சன்மரும் இச்சங்கத்தில் உறுப்பினரெனில் அது ஐந்தாம் நூற்றுண்டினது, கடைச்சங்கத்தினும் வேறுனது என்பது

† S. V. Ho. T. L 49.

திண்ணம். சங்கம் என்ற சொல்லே தமிழிலக்கியத்துள் முதன் முதலில் மணிமேகலையிற்றான் (30-3) காணப்படு கின்றது. முச்சங்க இலக்கியங்களுள் 'அவை' யென்ற சொல்லே வழங்கப்படுகின்றது; (நிலந்தரு திருவிற் பாண்டியனவையத்து). முச்சங்கங்களைப் பற்றி இறைய னரகப் பொருளுரையில் கூறப்படினும் சங்கம் என்பது அதற்குரிய அமைப்புடன்நிலவியது இந்நாலாஞ்சங்ககாலத் திற்றான் எனத் தோன்றுகிறது. சங்கத்திற்குரிய உறுப் பினர், தலைமை, கூடும் முறையான காலம், நூல்களை வெளியிடுமுறை அரங்கேற்றுதல் போன்ற திட்டங்கள் எதுவும் முச்சங்க காலத்துள் இருந்தனவாகத் தோன்ற வில்லை. கடைச்சங்கநூல்கள் எதிலும் இத்தகைய குறிப் புக்கள் இல்லாமை நோக்கத்தக்கதாகும். மதுரையைப் பற்றியே சிறப்பித்துப்பேசும் சிலப்பதிகாரம் மணிமேகலை பரிபாடல் போன்ற நூல்களும் ஒன்றும் பேசாமலே இருக் கின்றன.

‡ஆனல் அரசர் அவையுள் புலவர்கள் அமர்ந்திருந்து அறிவும் அறமும் உரைத்தலும், நூற்பொருள்களைப் பேசு தலும், தாமே விரும்பிவந்த நூல்களை அரங்கேற்றுதலும் போன்ற வழக்குகள் இருந்திருக்கலாம். ஒவ்வொரு சங்கத் திற்கும் அகப்பொருளுரையால் குறிக்கப்பட்ட கால வெல்லையுள் விளங்கிய புலவர் அரசர் ஆகியோரின் எண்ணிக்கை உண்மையாகலாம். அங்குக்குறித்தகால வெல்லை ஏதோவொருவகைக்கணக்கின்படிமெய்யாகலாம். மூன்று சங்கங்களும், அவற்றிற்குரிய காலமும் பாண்டியர் கடல்கோள் முதலிய இயற்கைத் தீமையால் இடம் பெயர்ந்தமையைக் கொண்டு வகுக்கப்படனவாதல்

‡ P T. S. 247; 248.

வேண்டும். ஆனல் இத்தகைய அமைப்புக்களை முறைப் பட அமைந்து செயலாற்றிய சங்கங்கள் எனக் கூறிவிட லாகாது. எனவேதான் நக்கீரர் தமது அகப்பொருளுரை யில் ‡அக்காலத்து நிலவிய நாலாஞ் சங்கத்தினை நினைவு கொண்டு முச்சங்க வரலாறுகளைக் கற்பனை செய்திருக்க வேண்டுமென அறிஞர் பலர் கருதுகின்றனர். மற்றும் புத்தரிடையேயும் ஜைனரிடையேயும் அக்காலத்தில் (கி. பி. 5-ஆம் நூற்) 3—4 புத்த-ஜைன சங்கங்கள் கூடியமைப் பற்றிய வரலாறுகள் பெரிதும் பேசப்பட் டுள்ளன. †இவையே முச்சங்க வரலாறெழுதுதற்குரிய தூண்டுதலை நக்கீரர்க் களித்திருக்க வேண்டும்.

இந்நாலாஞ்சங்க எண்ணிக்கையை நினைவுகொண்டே கடைச்சங்கப் புலவர் 49-பேர் என நக்கீரர் கணக்கிட்டிருக்க வேண்டும். கடைச்சங்க நூல்களில் பாடிய புலவர் தொகை இன்று கிடைக்கும் அளவுப் படியும் 400-பேருக்கு மேற்பட்டதாகும். மற்றும் 49 என்ற எண்ணில் நக்கீரர்க்கு ஒரு பற்றுதல் உள்ளது. இதனை முச்சங்க வரலாற்றுள் §49-என்ற எண்ணைப் பலவிடங்களில் வழங்குவதினின்றும் காணலாம். அன்றி கடைச்சங்கத்தும் 49-பேர் ஒரு காலத்தில் இருந்திருக் கலாம்.

---

‡ K. A. N. Pandyas. 17: S V. 10-11.

† Winternitz : II-7; K. A. N: I. H. 160.

‡K. A. N: But the existence of an association of poets modelled on the Buddhist Sanga for the promotion of Tamil literature can be easily understood if it is referred to an age when Buddhist influence was rather strong in South India

§ களவியல் உரை-பாயிரம்: சங்ககாலம்.

இக்கால நூலமைப்பிலும் பொருளாலும் யாப்பாலும் வேறுபாடுகாணப்படுகிறது. கடைச்சங்கத்திற்குரிய ஆசிரியப்பா வகையே தொடர்கிறது. ஆனால் தொடர்நிலைச் செய்யுளிலக்கியங்கள் இக்காலத்தில் கிடைக்கின்றன. வெண்பா யாப்பே பாடலுக்குப்பெரிதும் கையாளப்பட்டுள்ளது. கீழ்க்கணக்கு நூல்கள் இக்காலத்திற்குரியனவே. இவை கீழ்க்கணக்கென ஒரு வேறு பிரிவாகக் குறிக்கப்படுதலை நினைக்கவேண்டும். பாடலுக்குரியபொருளிலும் சமயத்திற்குரிய நிகழ்ச்சிகளும் கருத்துக்களும் பெரிதும் இடம்பெறுகின்றன. கடைச்சங்கத்தில் அரசியல் தலைமையுற்றதுபோல இப்போது சமயம் தலைமையுற்றிருக்கிறது. பௌத்த சமண சைவ வைணவக் குறிப்புக்கள் நிரம்ப இக்காலவிலக்கியங்களில் பேசப்படுகின்றன. ‡நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடும் பழக்கம் தொடங்குகின்றது. அரசியலிலும் அமைதியற்றதோர் நிலை; அரசர் பெயர்களோ பெரிதும் குறிக்கப்படுதலில்லை. சமூகத்தில் (புலவர்) உரிமையுடன் இரத்தலும் ஒப்புரவுசெய்தலும் போய், இழிவுள்ளத்துடன் ஏற்றலும் கரத்தலும் பரவியுள்ளமை புலப்படுகின்றது. பஞ்சத்தைப்பற்றிய குறிப்புக்கள் அடிக்கடிப் பேசப்படுகின்றன. இவ்வாறு ஒருகால நூல்களெல்லாவற்றுள்ளும் காணப்படும் பொதுவான யாப்பமைதி பொருளமைதி, சொல்லுமுறை முதலியன வேறுபடுகின்றன. கையாளப்படும் சொற்களும், உவமைகளும், பழமொழிகளும் இக்காலத்திற்குரியவேயென வரலாற்றால் அறிகின்றோம், அவையும் காலவேறுபாட்டைப் புலப்படுத்துகின்றன.

---

‡ S V 57;

மணிமேகலை, திருக்குறள் போன்ற நூல்களைக்கடைச் சங்கத்திற்குரியவாகக் கருதுகின்றனர். அனால் நக்கீரர் இவற்றைக் கடைச்சங்க நூல்களைப்பற்றிப் பேசுகையில் குறிக்கவில்லை. அவரே, தம் அகப்பொருளுரையில் குறட்பாக்களை மேற்கோள்காட்டுகிறார். அதற்கு வள்ளுவ மாலையில் பாராட்டுப்பாடலும் வழங்கியுள்ளார். *மணி மேகலைச் சீத்தலைச்சாத்தனார் இச்சங்கத்து 49-புலவருள் ஒருவராகவே இருந்துள்ளார். எனவே இவ்விரு நூல்க ளோடும் தொடர்புடைய சங்கம் கடைச்சங்கமாக முடி யாது, அதனின்றும் §வேறானதேயாக வேண்டுமென்பது தெளிவாகும்.

---

* வள்ளுவமாலை—10

§ 'A few of the poets of the V cen. who happened to sing songs in praise of Sivan were spoke of as leading members of the Tamil Sangam.—P. 251.

§ P. T. S—288 "In the VI-Cen. the saivas naturally desired to boast of a Sangha of their own as a rival to those of heretics and so arose the legend of Sivan him self leading a society of scholars and poets who sang hymns such as the one described by the Tiruvilayadal-puranam, as members of that society were named the few poets of the early anthologies who alone referred to Sivan in their odes or who might otherwise be associated with Sivan such as Irayanar, Urtthiran, Kapilar, Nakkirar Paranar, Peralavayar."

# கால வரையறை

கொங்குதேர் பாடலுக்குக் குற்றங்கூறிய இச்சங்கத்து நக்கீரரே திருவள்ளுவமாலையிலும் பாடியவர் என்பதனை முன்பும் குறிப்பிட்டோம். †அவரே இறையனார் களவியலுக்கு உரைகண்டவர் என்பது நம்பி திருவிளையாடலால் அறியப்படும். களவியல் ஐந்தாஞ் சூத்திரத்திற்கு அவர் கூறிய உரையை மிகவும் பாராட்டுகிறது திருவிளையாடல்.

அவ்வுரை வந்த வரலாறு இச்சங்கத்தின் காலத்தை யறிதற்குத்தக்க துணையாகும். ஆசிரிய மாணவப்பரம்பரை வழியாக அவ்வுரை கூறப்பட்டு வந்துள்ளது. நக்கீரரிடத் திருந்து எட்டுபேரைக் கடந்து கடைசியாக முசிரி நீலகண்டரை யடைந்த உரையே இப்போது நாம் காண்பதாகும். நீலகண்டர் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியெனத் தோன்றுகின்றது. களவியல் உரைக்கு மேற்கோளாகக் கொடுக்கப்பட்டுள்ள §கோவைப்பாடல்கள் கி. பி. 680-அளவில் அரசியற்றிய அரிகேசரி மாறவர்மன்மீது பாடப்பெற்றனவாகக் கருதப்படுகின்றன. ஏழாம் நூற்றாண்டில் கோவைகள் இயற்றும் வழக்கமிக் கிருந்தமை பெரியபுராணக் கலிய நாயனார் புராணத்தால் அறியலாம். களவியலில் கூறப்பட்ட சூத்திரங்கள் 80; ஆனால் மேற்கோள் பாடல்கள் 400. கூறப்படாத துறைகளுக்கெல்லாம் ஏதோவொரு வகையில் பாடல்களைத்

---

† *நம்பி 13-பாடல். சங்கப்பலகை கொடுத்தது— சயமுறுகீரன் செப்புவானென்றனித்தமிழிற், செயிரறும் ஐந்தாம் பனுவலுக்கொப்புச் செப்புதற்கரிகெனச்செப்ப)*

§ *கே சீ: த. வ. II 'இறையனார்'—27*

திணித்துக் கூறுவதிலிருந்து கோவைப் பாடல்கள் பிற் காலத்தில் (நீலகண்டர் காலத்தில்) இணைக்கப்பட்டிருக்க லாம் எனத் தோன்றுகின்றது. எனவே மேற்கோள் பாடல்கள் கி. பி. 680-க்கு உரியவாயின் உரை 8-தலை முறைகட்கு முற்பட்டதாகும். உரை ஒரு ஆசிரியரிடத் திருந்து மற்றவர்க்கு மாறுவதற்குக் குறைந்தது 15 ஆண்டுகள் எனக்கொண்டால் எண்மருக்கும் 120-ஆண் டுகள் குறைக்கப்படவேண்டும். அவ்வாறாயின் ‡கி. பி. 680—120=560 நக்கீரரது காலமாகக்கணக் கிடப்படும். எனவே நாலாஞ் சங்கம் கி. பி. ஆறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விளங்கியமை (பிற்பகுதியி லும் இருந்திருக்கலாம்) உறுதியாகின்றது.

திருவிளையாடற் புராணமும் இச்சங்க காலத்தை யறிதற்குரிய மற்றோர் சிறந்த கருவியாகும். வேள்விக்குடி சாசனமும் சின்னமனூர்ச் செப்பேடுகளும் இவ்வகையில் பெருந்துணைபுரிகின்றன. வேள்விக்குடிச்சாசனம் கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்குரிய பாண்டியன் பராந்தக நெடுஞ் சடையன் காலத்ததாகும். சின்னமானூர்ச் செப்பேடுகள் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குரிய வரகுணன் காலத் தவை. இவ்விரண்டுடன் திருவிளையாடற் புராணமும் இணைந்து இறைவனின் மதுரைத் திருவிளையாடல்களைப் பற்றியும் அக்காலப் (250—550) பாண்டியர் வரலாறு களைப்பற்றியும் ஒரே மாதிரியாகக் கூறுகின்றன. இரு

---

‡ E. I—17. Vel. gr. (Irayanar-commentay-was made available for the public by Nilakantanar-about two hundred years after the actual date of Nakkirar.

சாசனங்களும் இறைவனது திருவிளையாடல்கள் பல வற்றை வரிசையாகக் கூறியபின் பிற்காலப் பாண்டியரின் பெயர்களைக் குறிப்பிடுகின்றன. வேள்விக்குடி சாசனம் அவருள் முதல்வனாகக் கடுங்கோன் பெயரைக்குறிக்கின் றது. அவன் கி. பி. 575—600 காலத்தவன். சின்ன மானூர்ச்செப்பேடுகள் மாறவர்மன் அரிகேசரியைக்குறிக் கின்றன. அவன் காலம் கி. பி 640—675. மாறவர்மன் எனக்குறிக்கும் இப்பெயரில் ஒரு தடையுள்ளது இவன் கடுங்கோனுக்கடுத்த (கி. பி. 575) மாறவர்மன் அவனி சூளாமணியாயின், வரலாறு மிகத்தெளிவுடையதாகும்.

எனவே இவ்விரு சாசனங்களும் ஏழாம் நூற்றாண் டிற்கு முற்பட்ட பாண்டியரிலிருந்து முறையாக வரலாறு கூறத்தொடங்குகின்றன. சின்னமனூர்ச்சாசனம் பிற்காலப் பாண்டியரைக் கூறுமுன்பு இறைவனது திருவிளையாட லாகக் குறிப்பது 'மதுராபுரிச் சங்கம் வைத்த' தாகும். வேள்விக்குடிச் சாசனம் திருவிளையாடல்களைக் கூறியபின் முதலாகக் குறிக்கும் பாண்டியன் மாறவர்மனைப் 'புலவரைப் புரப்பவன்' என்கிறது இவை யிரண்டும் திருவிளையாடல்களை வரிசைப்படுத்திய பின்பும் பிற்காலப் பாண்டியரைக் குறிக்கு முன்பும் இச்சங்கக் குறிப்பினைக் கூறுகின்றன, எனவே இம்மதுராபுரிச்சங்கம் கடுங் கோன், மாறவர்மன் அவனி சூளாமணி ஆகியோர் காலத்திற்குச் சிறிது முற்பட்டதாக வேண்டும் என்பது உணரப்படும். இவ்வாறும் இச்சங்கம் கி. பி ஆரும் நூற்றாண்டைச் சூழ்ந்தகாலப் பகுதியாகும் என்பது தெளி

வாகும். §மாபரதம் தமிழ்ப் படுத்தியும் மதுராபுரிச்சங்கம் வைத்தும் எனத் தொடர்ந்துரைத்தது கொண்டு' இச் சங்கத்தையொட்டி பாரதம் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டதென்பது உணரப்படும். தமிழில் பாரதம் பாடிய பெருந்தேவனார் இச்சங்க உறுப்பினராக வள்ளுவ மாலை யில் பாடியுள்ளார். மற்றும் மாலையில் நாமகள் பாடலால் 'பாரதம் பகர்ந்தேன்' அப்போது தமிழில் பாரதம் இயற்றப்பட்டமைத் தெளிவாகின்றது.

---

§Vel. Gr Skt. Portion: "வே. சாசனவடமொழிப்பகுதி சிவபெருமானுக்கு வணக்கத்துடன் தொடங்கி பாண்டியர் அவரது இனம்பற்றிப் பொதுவாகக்கூறி அவரது குலகுரு அகத்தியரெனக் குறிக்கிறது. முன கல்ப முடிவில் பாண்டிய னென்ற வலிமையுள்ள அரசன் ஒருவனிருந்தான். அவன் கட லோர வாயிலில் (வைகுடாவின் கரை) ஆண்டான். அவனே இக்கல்பத் தொடக்கத்தில் புதனாகப் பிறந்தான்; புதன் சந்திர னின் மகன்; அவன்மகன் புரூரவன். அவன் குடி இருமீன்களைக் கொடி இலச்சினையாகக் கொண்டது. அவர்களே இந்திர னது மார்பாரத்தைக் கொண்டு அவனது ஆட்சியின் பகுதியை யும் கொண்டனர்; பாற்கடல் கடைந்தனர்; அம்மரபில் மார வர்மன் பிறந்தான்; அவன் புலவர்ப்புரவலன்; அவன் மகன் ரணதீரன்; அவன் மகன் மாரவர்மன் இரண்டாம் ராஜசிம்மன்.

சின்னமனூர் சின்ன செப்பேடுகள்;-

" மலைகடல் கடைந்து அமிர்தம் கொண்டும்,<br>
நாற்கடல் ஒருபகலாடியும், தென்தமிழின் கரைகண்டும்<br>
ஒண்தமிழும் வடமொழியும் பழுதறத் தாறுராய்ந்து<br>
பண்டிதரில் மேந்தோன்றியும்<br>
'மாபாரதம் தமிழ்ப்படுத்தியும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்'<br>
மன்னும் காத்திகந்தபின் — பராங்குசன்<br>
பௌத்திரன் ஆயின — ராஜசிம்மனும்.<br>
வள்ளுவர்மாலை; 2.

வேள்விக்குடிச் சாசனம் திருவிளையாடல் நிகழ்ச்சிகட்கு முன்பாகவும் சில பாண்டியர் பெயர்களைக் குறிக்கின்றது. அதுகொண்டு திருவிளையாடல் பாண்டிய அரசரின்காலவரிசையைக் (chronology) கணிக்கவும் இச் சங்ககாலத்தை ஒத்துப் பார்க்கவும் கூடுமெனத் தோன்றுகின்றது. வேள்விக்குடி சாசனம் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி காலத்தில் ஏற்பட்டதாகும். அதன் வடமொழிப் பகுதி சிவனுக்கு வணக்கங்கூறித் தொடங்குகின்றது. அகத்தியர் பாண்டியர் குலகுரு வென்கின்றது. அதன்பின் பாண்டியன் ஒருவன் பிரளயத்திற்கு முன்பு (முன்கல்பம்) கடலோரத்தில் தலைநகர் கொண்டு ஆண்டதையும் அவனே பிரளயத்திற்குப் பின் இந்த கல்பத்தில் சந்திரனின் மகனுகப் புதன் என்ற பெயருடன் தோன்றியதாகவும் கூறுகிறது. அவன்மகன் புரூரவன்; மீனக்கொடியினன், பின்பு திருவிளையாடல்கட்குரிய பாண்டியர் பலரைக் கூறியபின் முன்குறித்த மாறவர்மன் புலவர்ப் புரவலனைக் கூறுகின்றது. இங்கு இந்த கல்பத்தின் தொடக்கமென்றது, திருவிளையாடல் தொடக்கத்தையும் நாலாஞ் சங்ககாலத்தொடக்கத்தையும் என எண்ணலாம். முன்கல்ப முடிவென்றது கடைச்சங்க முடிவு. கடைச் சங்கம் ஒரு கடல்கோளினுல் முடிவுற்றதாகக் களவியலுரை கூறும். எனவே பாண்டியன் கடலோரத்தை விட்டுத் தலைநகரை உளநாட்டுக்கு மாற்றியிருக்கிறுன். இது கடைச்சங்கத் திறுதியாகிய கி. பி. இரண்டாம் நூற்ருண்டிற்குப் பிற்பட்ட காலமாகும். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமியின்காலமும் இதுவேயாகும். சிலப்பதிகாரத்தில் காணும் இந்திரவிழாவைத் தொடங்கியவன் இவனேயெனப் புறநானூறு கூறும். இவனுக்கடுத்து வடமொழிப் பகுதியில் கூறப்படும் இரண்டரசர்

தலையாலங்கானத்து வென்ற நெடுஞ்செழியனும் பாண்டியன் உக்கிரப்பெருவழுதியுமாகலாம்.

திருவிளையாடலும் சிறந்தவனாக உக்கிர பாண்டியனையே கொண்டு தொடங்குகிறது. திருவிளையாடல் முதல்வனான குலசேகர பாண்டியனும் மணலூரில் தங்கியாண்டதாகத் தெரிகிறது. கபாடபுரம் அழிந்த பிறகு பாண்டியர் மணலூரையும் பிறகு மதுரையையும் தலைநகர்களாகக் கொண்டனர். அதற்கடுத்து கூறப்படுபவன் சுந்தர பாண்டியன், அவன் சாசனத்தில் காணும் புதன் ஆகலாம். பின்வரும் புரூரவனே உக்கிரபாண்டியன்.

| | திருவிளை. | புறநானூறு. |
|---|---|---|
| முதுகுடுமி | குலசேகரன் | முதுகுடுமி |
| புதன் | சுந்தரபாண்டியன் | தலையாலங்கான நெடுஞ்செழியன் |
| புரூரவன் | உக்கிரபாண்டியன் | உக்கிரப்பெருவழுதி. |

§கி. பி. இரண்டாம் நூற்றுண்டிறுதியில் கடல்கோள் ஏற்பட்டதும் பாண்டியர் கடலோரத்திலிருந்து உள்நாட்டுக்குத் தலைநகரை மாற்றியது பற்றிக் கிரேக்க

§ Periplus and Pliny show that the fisheries were centred at Kolkai in the Pandyau Kingdom controlled from Madura whither as Pliny shows the pandyas removed their Capital from Madurai. P. T. S. 242 : It is perfectly clear that when these districts (Madurai nadu) was drowned in the sea, the capital was shifted to Kapatapuram. The tamil name of the place was Kolkai. When the place was abandoned the present Northan Madurai became the Capital. The transfer of this Captial frnm Korkai to Madurai is noted by pliny.

நூலாசிரியர் பலர் எழுதியுள்ளனர். எனவே திருவிளை யாடல் பாண்டியர் காலத் தொடக்கமும் நாலாஞ் சங்க காலத் தொடக்கமும் ஒன்றேயாகும். திருவிளையாடல் சுமார் ‡16 பாண்டியரின் பெயர்களைக் குறிக்கின்றது. கடைசியில் பாண்டியன் வங்கியசேகரன் காலத்திலேயே தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்கப்படுகிறது. இங்கும் ஒரு வங்கிய சூளாமணியின் காலத்தில் சங்கம் தொடங்கு கிறது. வேள்விக்குடி சாசனத்தாலும் மாறவர்மன் அவனி சூளாமணி காலத்தில் சங்கம் தோன்றிவிட்டதாக அறி கிறோம். இருவர் பெயரிலும் சூளாமணி யென்ற பெய ரொற்றுமையைக் காணவேண்டும். உக்கிர பாண்டிய னுக்குப்பின் 13-பாண்டியர் ஆண்டபின் வங்கியசேகரன் காலம் வருகிறது. †வரலாற்றாசிரியர் கணக்குப்படி ஒரு அரசனுக்கு 25-ஆண்டுகளாகக் கணக்கிட்டால் இவர்கள் 325-ஆண்டுகள் ஆண்டுள்ளனர். கி. பி. 200 உடன் 325 கூட்டினுல் கி. பி. 525 வங்கியசேகரன் காலமாகிய இச்சங்ககாலமாகின்றது. இவ்வாறு, §குப்தர்க்கும் சாத வாகனர்க்கும் புராணங்களிலிருந்து காலவரிசை கணித்த மாதிரியில், திருவிளையாடல் பாண்டியர்க்கும் கி., பி. 200—600 என ஒரு காலவரிசை (Chronology) கணிக்க முடியும்.

---

‡ பரஞ். திருவிளை: 1. உக்கிரன், 2. வீரபாண்டியன் 3 ஆரியசேகரன் 4 விக்ரமன் 5. ராஜசேகரன் 6. குல பூடணன் 8. சுந்தரபாதன் 9. வரகுணன் 10. ராசராசன் 11. சுகுணன் 12. கீர்த்திபூடணன் 13. வங்கியசேகரன்.

† R. S. Iyer. H. O. I.

§ Ibid. H. O. I. I 183 ;

பலர் கடைச்சங்கத்தைக் கி. பி. 5-ஆம் நூற்றுண்டு வரைக்கொண்டு வருவர்; பலர் கடைச்சங்கமும் §கொங்கு தேர் வாழ்க்கைப்பாடலையாய்ந்தஇச்சங்கமும்ஒன்றேயென் பர். கடைச்சங்ககாலத்தைச்சிறந்த வரலாற்றுசிரியர்எவரும் கி. பி. இரண்டாம் நூற்றுண்டுக்குப்பின் கொண்டுசென்ற தில்லை. நக்கீரர், இரண்டாம் நூற்றுண்டு உக்கிரப்பெரு வழுதி காலத்தில் முடிவுற்றதெனப் புள்ளிவைத்துக் கூறுகிருர். திருவிளையாடலில் உக்கிரப்பெருவழுதி காலத் திற்குப்பின் வங்கியசேகரன் காலத்திற்கிடையில் சங்கம் தொடர்ந்திருந்ததாகக் குறிப்பில்லை. 49-புலவர்கள் எங் கிருந்தோ திடீரென வந்ததாகவும் பாண்டியன் ‡புது மண்டபங்கட்டி அவர்களைக்கொண்டு சங்கம் அமைத்ததாக வுமே புராணம் கூறுகிறது. எனவே இது ஒரு புதிய சங்கமேயாகும்; கடைச்சங்கத்திற்குப்பின் 300-ஆண் டுகள் இடையிட்டு இது தொடங்கப் பெற்றதாகும். மற்றும் கடைச்சங்கத்தின் தலைநகரம் †உத்தர மதுரை யென்கிருர் நக்கீரர். ஆனல் இச்சங்கம் தென்மதுரை யிலென வழங்கப்பட்டுள்ளது. 'தக்ஷிணமதுரைத்தான் சென்றடைந்து' என மணிமேகலை கூறுகிறது. வங்கிய சேகரன் வங்கிய சூளாமணிக்கு முன்னவன், மதுரையை மாற்றி ஆலவாயாக அமைத்தவன். *அப்பெயர் நக்கீரரால் ஆளப்படுகிறது. கடைச்சங்க நூலெதனுள்ளும் இப் பெயர் காணப்பெறவில்லை. தென்ஆலவாயுறையும் எம்

---

§ Dr S. K.—135.

‡ 'பரஞ்சோதி : சங்கப்பலகை தந்தது. (51—20)
"சங்க மண்டபமுண்டாக்கித் தகைமைசால் சிறப்பு நல்கி
அங்கமர்ந்திருத்திரென்ன இருத்தினன் அறிஞர் தம்மை"

†அகப். உரைப்பாயிரம்; மணி 25:139.

*Ibid ; சம்பந்தர்: "ஞால நின் புகழே மிகவேண்டும்
தென் ஆலவாயுறையுமெம் ஆதியே"

ஆதியேயெனச் சம்பந்தர் ஆலவாயைத் தென்ஆலவா யென்கிறார். ஆகவே தென்மதுரையில் விளங்கிய இச் சங்கம் கடைச்சங்கத்தினும் வேறானதேயாம்.

நக்கீரர் அகப்பொருளுரையின் பாயிரத்தில் சாத வாகனம், இளந்திரையம் என்னும் இருநூல்களைக் குறிக் கிறார். இவை சாதவாகனர் காலத்திற்கும் இளந்திரை யன் காலத்திற்கும் பிற்பட்ட நூல்கள். சாதவாகனரது கடைசிக்காலமும் இளந்திரையன் காலமும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகலாம். அவர்களைப்பற்றிய இவ்விரு நூல்களும் விளக்கமுற்றது நான்காம் நூற்றாண் டிலாயின் அதற்குப்பிறகே நக்கீரரும் இச்சங்கமும் இருந் திருக்கவேண்டும்.

பதினோராந்திருமுறையில் கபிலதேவரும் பரணதேவ ரும் விநாயக வணக்கம் கூறுகின்றனர். இக்காலத்தில் தமிழ் நாட்டில் விநாயக வணக்கம் வழக்கில் வந்திருக்க வேண்டும். தேவாரத்தும் கல்வெட்டிலும் விநாயகர் 'வாதாபி கணபதி' எனக் குறிக்கப்படுகிறார். எனவே இது வாதாபியை வென்ற பல்லவரால் தமிழகத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. கி. பி 7-ஆம் நூற்றாண்டில் நரசிம்மவர்மன் காலத்தில் வாதாபியை வென்ற பரஞ்சோதியார் இவ்வழிபாட்டைக் கொண்டுவந்திருக்கலாம் என ஆசிரியர் பலர் கருதுவர். ஆனால் பல்லவர் சாளுக்கியரை வாதாபியில் வெல்லுதற் குச்செய்தபோர் ‡கி. பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத் திலேயே ஏற்பட்டிருக்கலாம் எனத்தெரிகின்றது, எனவே

---

‡Dr. S. K: S. C. O. S. I; 202; மறைமலை : 700

இச்சங்காலத்திலேயே விநாயக வணக்கம் வழக்கில் வந்துவிட்டதெனலாம்.

கல்லாடம்பாடிய கல்லாடரே இச்சங்கத்து உறுப்பினராகி வள்ளுவ மாலையில் பாடியுள்ளார். கல்லாடம் †ஆரும் நூற்றுண்டினதாக ஆசிரியர் கருதுகின்றனர். தம் நூலில் இச்சங்கத்தைப்பற்றியெல்லாம் குறிக்கிருர். ஞான சம்பந்தரை அதனில் குறிக்காமையால் சம்பந்தர்க்கு அவர் முற்பட்டவராக வேண்டுமென்பது பொருத்தமேயாகும். ‡இந்நூலுள்ளும் திருமந்திரத்துள்ளும் பதஞ்சலிப் பெயர் வருகின்றது. பதஞ்சலி கி. பி. 5-ஆம் நூற்ருண்டவர்.

நக்கீரர் இரண்டு மூன்று நாயன்மார் பெயர்களையே தம் பாடலில் குறிக்கிருர். §ஆனல் அப்பர் காலத்தில் 17 நாயன்மார் இருந்தனராக அறிகிரேம். மற்ற 14-பேரும் நக்கீரர்க்கும் அப்பர்க்கும் இடைப்பட்டகாலத்தில் வாழ்ந்திருக்கவேண்டும். அவர்களின் காலம் 100-ஆண்டுகளாயின் அப்பர்க்குமுன் இச்சங்கம் (கி. பி. 655—100 =555) ஆரும் நூற்ருண்டினிடையில் இருந்திருக்க வேண்டும் எனத்தெரிகிறது.

மணிமேகலையியற்றிய சீத்தலைச்சாத்தனுர் இச்சங்கத்தின் உறுப்பினரென்பது வள்ளுவமாலையால் புலப்படும். அவர் ஐந்தாம் நூற்ருண்டிற்குரியவர் எனப்பின்பு நிறுவப்படும். மணிமேகலையில் அக்காலக் காஞ்சியரசன் ஓர் சோழன் எனத்தெரிகின்றது. சோழர் வரலாற்றுள்

---

†மறைமலை : 700 ; K. S. Pillai II—341

‡Dr. S. K Mani: 69 §Dr. Raja: Thesis—99

அவர்கள் காஞ்சியையாண்டதாக எங்கும் குறிப்பில்லை. கடைச்சங்க நூல்களுள்ளும் இல்லை. இவர்கள் தெலுங்குச்சோழர் எனப்படும் திரிலோசன பல்லவர் ஆகலாமெனக் கருதப்படுகிறது. ‡இவர்களையே திருவிளையாடல் காடுவெட்டியசோழர் என்கிறது. இவர்கள் கி. பி. 5-ஆம் நூற்றுண்டிலாண்டதாக ஆந்திரநாட்டு வரலாறுரைக்கிறது. இந்த திரிலோசன பல்லவர்கள் தம்மைக் கரிகாலன் பரம்பரையெனக் கூறிக்கொண்டுள்ளனர்.

இக்காலச்சோழர் வரலாறுகள் பலவற்றைப் பெரிய புராணம் கூறுகின்றது. அரசு நிலைகெட்ட இக்காலத்திலேயே சோழர் திருவாரூர், கரூர், பழையாறை முதலியவிடங்களில் தங்கியிருந்தனர். திருவாரூர்ச் சோழருள் மனுநீதிச்சோழனைப் பெரியபுராணம் சிறப்பிக்கின்றது. இச்சோழனைப்பற்றிய குறிப்பு கடைச்சங்க நூல்களுள் இல்லை. சிபியின் ஒப்புரவு அங்குப்பேசப்படுதல்போல-இச்சோழன் அக்காலத்தவனுயின் - இவன் பெருமையும் பேசப்பட்டிருக்கலாம். இக்கால நூல்களாகிய சிலப்பதிகாரம் மணிமேகலையிற்றான் முதன் முதலில் §மகனை முறைசெய்த இம்மன்னவன் வரலாறு குறிக்கப் பெறுகின்றது. கி. பி 5-ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட மகாவம்சம் என்ற இலங்கை வரலாற்று நூலிலும் இந்நிகழ்ச்சி (பசுவின் கன்றுக்காக மகனைத்தேரின்கீழிட்டது) ஏலரா என்ற அரசனுடன் தொடர்புறுத்திக் கூறப்படுகின்றது. எனவே இக்கதை பரவியிருந்த காலம் இவ்வைந்தாம் நூற்றுண்டாகலாம்.

---

‡Bvk: Rao.—282; பரஞ்சோதி 34—2.
§மணி: 22 : 210.

‡சிலப்பதிகாரம் மணிமேகலை, பழமொழி ஆகியநூல்களில் பொற்கைப் பாண்டியன், தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன் ஆகியபெயர்கள் குறிக்கப்படுகின்றன. அவர்கள் கடைச்சங்க நூல்களில் கூறப்படாதவர்கள், எனவே அக்காலத்திற்குப் பிற்பட்டவர்கள். மற்றும் இச்சங்க நூல்களில் வானநூல் மனுதர்மம், §அறுவகைச் சமயம், பதினெண்மொழிகள், யோகநூல், 64-கலைகள், பரதநூல் முதலியவைபற்றிய குறிப்புக்கள் அடிக்கடி காணப்படுகின்றன. இவை 3—4-ஆம் நூற்றுண்டுமுதல் ஆரும் நூற்றுண்டு வரைப்பட்டவையென்பது வரலாற்றுசிரியர் கருத்தாகும்.

சீத்தலைச்சாத்தனுர், சோழன் செங்கணுன் போன்ருரது பாடல் சிலவும் கொங்குதேர் வாழ்க்கைப்பாடலும் கடைச்சங்கத் தொகுப்புக்களில் காணப்படுவது பற்றித் தெளிவுபடுத்தவேண்டியுள்ளது. தொகை நூல்கள் கி. பி 4—5-ஆம் நூற்றுண்டுகளில் உக்கிரப்பெருவழுதியென்ற இந்நாலாஞ்சங்கப் புரவலன் காலத்தில் தொகுக்கப்பெற்றன †400—500 என்ற முழு எண்ணை நிரப்புதற்காக கடைச்சங்கத்திற்குப்பின் 5-ஆம் நூற்றுண்டு வரை யெழுந்தபாடல் பலவற்றையும் அவற்றுள் இணைத்துக்கொண்டனர் என்பது ஆசிரியர் பலரது கருத்தாகும்.

---

‡சிலப்: 29—16: 23—50: மணி 1—4

§பரதம்: 200—300 A. D: K. A. : I. H. 117
பதஞ்சலியோகம்: 300—550 A D: K. A. N I. H. 159
அறுவகைச்சமயம்: 200—300 A. D Ibid.
வானநூல்: ஆரியபட்டர்: 499 A. D. Ibid.

†S. V 50. 'We may presume that while in some cases the requisite number of poems were choseu from a wide range of competing poems, in other a shortage had to be made good by the composition of new poems"

தொகை நூல்களுள் பலபாடல்கள் இவ்வகைப்பட்டன வாகலாமென்பது உண்மையே இக்கருத்தினை மனத்துட் கொண்டு இக்காலவிலக்கியங்களை ஆராய்ந்தால் இந் நாலாஞ்சங்கம் வேறானதேயென்பது தெளிவாகும்.

கி பி. 250—550-க்குட்பட்ட நிகழ்ச்சிகளுள் இச் சங்கம் மிகச்சிறந்ததொன்ருகலின் இக்கால இலக்கியங் களை நாலாஞ்சங்க இலக்கியம் எனக்குறிக்கிருேம். மற் றும் ஏதோவொரு வகையில் அவை இச்சங்கத்துடன் தொடற்புற்றிருக்கின்றனவென முன்பும் கூறப்பட்டது.

# சூழ்நிலை

கி. பி முதல் நூற்றுண்டுகளின் தமிழ்நாட்டு நிலையை அக்காலத்தில் இந்தியாவிற்கு வந்துசென்ற கிரேக்க ஆசிரியர்களின் குறிப்புக்களாலும் நமக்கு இப்போது கிடைத்திருக்கும் கடைச்சங்க நூல்களாலும் ஒருவாறறியலாம். சேர சோழ பாண்டியரே அன்று தமிழகத்தின் சிறந்த அரச பரம்பரையினராவர். அவர்களுக்குள் அடிக்கடி போரும் பூசலும் இருந்தனவாக அறியப்படினும் அவர்கள் அன்று சிறந்த வல்லரசுகள் என்பதில் ஐயமில்லை.

பாண்டியன் முதுகுடுமிப்பெருவழுதியும் சோழன் கரிகாலனும் சேரன் செங்குட்டுவனும் அவருள் குறிக்கத் தக்கவராவர். சமூகநிலை மிகவும் சிறந்ததாயிருந்தது. சமயநிலையில் ஜைனம் பௌத்தம் சைவம் வைணவம் இந்துநெறி ஆகியவை ‡அருகருகே மிக அமைதியாக இருந்திருக்கின்றன. நாலாஞ்சங்கத்திற்குரிய மூன்று நூற்றுண்டுகளிலும் சைவம் பௌத்தம் ஜைனம் ஆகியவை தம் நிலையை வலுப்படுத்திக்கொண்டு ஆனுல் சமயப் பொறையுடனும் அமைதியுடனும் கடைச்சங்கத்திருந்தது போலவே உயரத்தொடங்கின

கல்வெட்டுக்களால் இக்காலத்தில் சைவம் மேலோங்கத் தொடங்கியதென்பதும் சிவன் பாண்டியரின் குலதெய்வமாகக் கருதப்பட்டாரென்பதும் தெரியவருகின்றது சேரரும் இவ்வாறே சமயத்தைப் பின்பற்றினர்.

---

‡ R. S Iyer: H. O. I I : Dr. S. K: S. C. O. S. I.

கண்ணப்பர் சாக்கியர் சண்டேசர் கோச்செங்கணன் முதலிய அடியார்கள் விளங்கியதும் இக்காலமேயாகும்

இச்சமயத்தில் பௌத்தசமயமும் பின்தங்கிவிட வில்லை. பௌத்த சாக்கிய நாயனார் சைவ அடியாருள் ஒருவரானார். நாகார்ஜுனகொண்டா, காவேரிப்பட்டினம் காஞ்சி முதலிய நகரங்கள் பௌத்த மதத்தைப்பரப்பும் தலைமை நகரங்களாயின. திக்நாகர் தர்மபாலர்போன்ற புத்தஞானிகள் இந்தியா இலங்கை, ஜாவாமுதலியநாடுகட் கெல்லாம் சுடர்விட்டொளிரும் அறிவொளிகளாக விளங் கினர். கி. பி. 4—5-§நூற்றாண்டுகள் பௌத்தத்திற்குரிய வெனவும் 5—6,-ஜைனத்திற்குரியவெனவும் கருதத்தக்க னவாகும். இச்சமயங்கள் ஆந்திரராலும் கங்கவரசராலும் இக்காலத்தில் பெரிதும் புரக்கப்பெற்றன. இவ்வகையில் தமிழரும் பின்தங்கவில்லை.

இச்சூழ்நிலையின் விளைவே மதுரையில் கி. பி 470-ல் வச்சிரநந்தி என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட ஜைன (திரவிட) சங்கமாகும். ஆனால் தமிழகத்தின் மூவரசுகள் நிலையற்றவாகவோ அன்றி வலிகுன்றிய நிலையிலோ இருந்தன. திருவிளையாடலில் காணப்படும் சில பாண்டி யரைத்தவிர்த்த மற்றையோர் வலியுடையரல்லர், மதுரை நகரமும் அதனரசியல் பெருமையும் மட்டும் நிலைகுன்றாமல் திண்மையோடிருந்தன. சோழரின் நிலை மட்டும் மாறி விட்டது. புகார் கடல் கொள்ளப்பட்டபிறகு சோழருக்குத் தலைநகரமென்பதில்லை. அவர்கள் கரூரிலும் திருவாரூரி லும் காஞ்சியிலும் குறுநில மன்னரைப்போல இருந்து வந்தனரென்பது பெரிய புராணத்தால் தெரிகின்றது.

§K. S. Piilai: 277; T. V. S: H. O. T. L. of 250-600. P. 20-25

†அகத்தியரும் பதஞ்சலியும் தமிழகத்திற்கு இக்காலத்தில் வந்துள்ளனர். அகத்தியரது செயல்கள் மிகுதியாக இலக்கியங்களுள் புலப்படுகின்றன. பாரத இராமாயணக்கதைகள் மக்களிடம் பெரிதும் பரவி, பாரதம் தமிழிலேயே மொழிபெயர்க்கப்பட்டுள்ளது

§வாத்சாயனர்,பரதமுனி ஆகியோரின் அகப்பொருள் நாடகநூற் கருத்துக்கள் நாட்டில் பரவத்தொடங்கின. ‡மனுவினதுதர்மநூல் அறிஞரையெல்லாம் கவர்ந்துள்ளது. இவ்வகைப்புதிய கோட்பாடுகளின் பரவுதலால் சமூக முழுவதும் ஒருவித மனவெழுச்சியுற்ற நிலையையடைந்து இவற்றிற்கு ஆக்கமும் ஊக்கமும் காட்டியது இங்நிலையில் சமயத்தைப் பரப்புதற்காகப் பௌத்தர் சங்கங்களைத் தோற்றுவித்தனர். ஜைனர் திராவிட சங்கத்தைக்கண்டமைபற்றி முன்பும் கூறப்பட்டது. சமயத்திற்காகத் தோன்றிய இச்சங்கங்கள் இலக்கியத்திற்கும் பெரும்பணி புரிந்தன. தமிழில் நூல்கள் வியக்குமளவு வளர்ந்தன; சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இவ்வகைப் பயன்களுள் சிறந்தனவாகும். வச்சிரநந்திசங்கம் சமயத்திற்கும் இலக்கியத்திற்கும் எண்ணிலடங்காப் பணிபுரிந்தது. இதனைப்பின்பற்றிப் பாண்டியரும் சைவத்தை வளர்க்க விரும்பினர். கி. பி. 3-ஆம் நூற்றாண்டில் கடைச்சங்கம் முடிந்ததால் மதுரை சங்கமொன்றின்றியிருந்தது. சமயக் குறிக்கோளுடன் தாமும் ஒரு சங்கங்காண விரும்பினர். நாலாஞ்சங்கம் இவ்வகையில் வச்சிரநந்தி சங்கத்திற்

---

†திருவிளை = வெள்ளியம்பலக்கூத்து; இலக்கணமுபதேசித்தது; திருமந்திரம்—'பரம்பரை'

§ வாத்சாயனர் கி. பி. 405—500 : பரதர் Keith — 469

‡ வள்ளுவமாலை—30 ; சிலப் 20 : 25 : மணி : 210.

கெதிராகத் தோன்றிய தனிச்சங்கமேயாக வேண்டும். இதுவும் சமயம் இலக்கியம் ஆகியவற்றிற்கு அளப்பற்ற தொண்டுபுரிந்துள்ளது. பாண்டியரும் பல்லவரும் கடுங்கோன், சிம்மவிஷ்ணு ஆகியோரின்கீழ் முழுவலிமையைப் பெற்று விளங்கிய காலம் இவ்வாறும் நூற்றுண்டாகும். ஜைனர் தனிச்சங்கங்கண்டு மிக்க செல்வாக்குற்றமையால் சைவர் அவர்க்குட்படாமல் தாம் மற்ற பௌத்தரையும் வைணவரையும் சேர்த்துக்கொண்டு ஜைனத்தை எதிர்த்த †சங்கம் இதுவாகவேண்டும். ஜைனசங்கத்தில் கீழ்க்கணக்கு நூல் ஆசிரியர் பலர் இருந்ததாகக் கூறப்படுகின்றது. ஆனுல் அப்பெயரேதுவும் நாலாஞ்சங்கத்தின் 49-பெயர்களுள் காணப்படாமையால் §இச்சங்கம்

---

† J. O. M. S—41—42: V. Srinivasan, M.A; A. I. I. B.

"One of the 18 Didactic classics known as Pathinen-kilkanakku was an important production of the IV Tamil sangam."

§ P. T. S—247. "This waa not a Tamil Sangam as we understand, but an organisation of jainas of the Tamil country for teaching the jaina Dharma to lay disciples."

Dr. Minakshi—Pallavar—127: "The seat of the sangam according to Digambara Dharsanasara of Devasena was Southern Madura and it was composed of entirely Digambara Jaina...This sangam was perhaps modelled on the earlier Tamil Sangam and among other things served as a literary academy."

*தமிழ்ச்சங்க வரலாறு — சாமி சிதம்பரனுர் "வச்சிரநந்தி சங்கம் 470—520. இடம்: தென்மதுரை (திருப்பரங்குன்றம்) புலவர்கள்: நக்கீரர் II; கபிலர் II; பரணர் II; கல்லாடர் II நூல்கள்: கைலைபாதி காளத்திபாதி; கண்ணப்பர் திருமறம்; 11-திருமுறை கபில-பரணர் பாடல்கள்*

வேருனதாகவே யிருக்கவேண்டும். பௌத்தம் வைணவம் சைவம் மூன்றும் இச்சங்கத்தில் பொறையுடனேயே இணைந்துள்ளனவாகத் தோன்றுகின்றன. பௌத்தராகிய சாக்கியநாயனுர் சிவனடியாராக வாழ்ந்திருக்கிருர். பொய்கையார் முதலிய முதலாழ்வார்கள் திருமாலையும் சிவனையும் ஒன்ருகவேபோற்றியுள்ளனர். சிலப்பதிகாரத்தில் சைவஜைனமும் மணிமேகலையில் பௌத்தவைணவமும் ஒற்றுமையுடையவாகக் காணப்படுகின்றன. இப்புலவர்களையே பொய்யடிமையில்லாதவராகச் சுந்தரர் குறிக்கிருர். இங்குப்பொய்யடிமையுள்ளவராகக் குறிக்கப்படுவோர் ஜைனராகவேண்டும். மணிமேகலையில் ஜைனம் பழிக்கப்படுவதுபோல மற்ற சைவமும் வைணவமும் பழிக்கப்படக் காணவில்லை. சீத்தலைச்சாத்தனுரும் பொய்கையாரும் இச்சங்கத்திருந்தபௌத்தரும் வைணவருமாவரென்பதும் திருமூலர், கல்லாடர், நக்கீரர், பாரதம் பாடிய பெருந்தேவனுர் போன்ருேர் சிறந்த நூல்களையியற்றிய புலவரென்பதும் பின்னர் அறியப்படும்.

# கி. பி. மூன்ரும் நூற்ருண்டு

## பத்துப்பாட்டு

திருமுருகாற்றுப்படை முதலிய ஆற்றுப்படை இலக்கியங்கள் ஐந்தும், தலைநகரங்களைப்பற்றியன இரண்டும் அகப்பொருளையேபற்றியன மூன்றும் ஆகிய பத்துத்தொடர் நிலைப்பாடல்களும் பத்துப்பாட்டெனப்படும். இவற்றின் பாட்டுடைத் தலைவர்கள் கடைச்சங்க அரசராகவே காணப்படுகின்றனர். பாடியவருள் பலரும் கடைச்சங்கப் புலவராகவே குறிக்கப்படுகின்றனர். ஆனல் நக்கீரர் கடைச்சங்க வரலாற்றுள் இப்பாடலைக் குறிக்கவில்லை யென்பது ஏன் எனப் புலப்படவில்லை. தாமெழுதிய முருகாற்றுப்படையைத் தவிர்த்த மற்ற நூல்களைக்குறித் திருக்கலாம். இந்நாலாஞ்சங்கத்திற்ருன் தொகை நூல்களெல்லாம் தொகுக்கப்பெற்றன. பெருந்தேவனுர் அவற்றிற்குக் கடவுள் வாழ்த்துப்பாடி இணைத்தார்., அவ்வாறே பத்துப்பாட்டின் ஒன்பது பாடல்கள் தொகுக்கப்பெற்று அவற்றிற்கு நக்கீரர் முருகாற்றுப்படையைக் கடவுள் வாழ்த்தாக இணைத்திருக்கலாம். பத்துப் பாட்டுள் ‡ஒன்பதே முன்பெல்லாம் ஏடுகளில் தொகுக்கப்பட்டிருந் தனவெனவும் முருகாற்றுப்படை பிற்காலத்தேதான் இணைக்கப்பட்டதெனவும் ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

இவ்விலக்கியங்கள் கி. பி. மூன்ரும் நூற்ருண்டிற் குரியவாயினும் கடைச்சங்கம் முடிந்த பிறகு தோன்றி

---

‡ S. V. —58

யிருக்கலாம். கடைச்சங்கமுடிவிற்குக் கடல்கோள் முதலிய சில அடையாளங்களை நக்கீரர் குறிக்கிறார். அக்கடல் கோளுக்குப்பிறகு இப்பாடல்கள் பாடப்பட்டிருக்கலாம். கடல்கோளுக்குப் பிறகு கடைச்சங்கவரசரும் புலவரும் பலர் இருந்திருக்கலாம். இது கடைச்சங்கம் முடிந்தகாலம் என்பது சில குறிப்புக்களால் தெரிகின்றது. நன்னன் மகன் நன்னன் கடைச்சங்கப் பாடல்களில் காணவில்லை. †பட்டினப் பாலைத் தலைவன் திருமாவளவன் கரிகால னன்று ஆனால் அவன் வழிவந்த ஒருவன் எனவும், பெரும்பாணாற்றுப் படைத்தலைவன் இளந்திரையன், பல்ல வர்குல முதல்வனாக கி. பி. 4-ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தையொட்டி வாழ்ந்த ‡சிவஸ்கந்தவர்மனாக லாமோவெனவும் அறிஞர் பலர் கருதுகின்றனர்.

நல்லியக்கோடனைப் பாடிய சிறுபாணாற்றுப்படையில் மதுரையும்வறிதே, உறந்தையும்வறிதேயெனக் கூறுவதி லிருந்து மூவேந்தர் ஒளிகுன்றிக் கடைச்சங்கமுடிந்த நிலை உணரப்படுகிறது. அங்கு ஆய் முதலிய கடையெழு வள்ளல்களும் சென்றுவிட்டனர் எனக்குறிக்கப்படுகிறது. மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை யென்பதிலுள்ள காஞ்சி, பாலையென்ற சொற்கள் ஏதோ ஒரு வறிய நிலையைக் குறிப்பனவாக உணரவேண்டியுள்ளது. அந்நகரங்கள் கடைச்சங்கத்திருந்த ஒளி குன்றி இருந்தமையைக்கண்டு பாடியனவோ அப்பாடல்கள் எனவெண்ண வேண்டி யுள்ளது. அங்ஙனமாயின் புலவர்கள் அவ்வரசர்களின் பிற்காலத்தில் அவர்களை நினைத்துப்பாராட்டிப்பாடியனவாக வேண்டும் பலபாடல்கள். தம்மைப்புரந்த அரசரையும், சிறந்த அரசரையும் புலவர்கள் அவ்வாறு பாடுவதுண்டு.

† S. S. Bharati—நற்றமிழ் ‡ Dubreil—Pallavas—23.

பாரி இறந்த பிறகு கபிலர் பாடிய பாடல்கள் பல புறநானூற்றில் உள்ளன.

இவை அடுத்த காலத்திற்கு உரிய வென்பதற்குப் பல காரணங்கள் உள. புலாலுண்ணுமை யென்ற அறம் இந்நாலாஞ்சங்கத்திற்குரியதெனலாம். இக்காலத்திற்குன் பௌத்தரும் சமணரும் அதனைப்பெரிதும் வற்புறுத்தினர். கடைச்சங்கப் பாடல்களுள் இக்கருத்தினைக் காண்டலரிது. *பட்டினப்பாலையில்தான் ஊனுண்ணு நோன்பினர் பலரது இருக்கைபற்றிப் பேசப்படுகின்றது. குறிஞ்சிப்பாட்டைப் பாடிய கபிலர் கடைச்சங்கத்தில் முந்தியவர். அவரது பாடலையாவது நக்கீரர் குறித்திருக்கலாம். ஒருக்கால் இப் பாடல்கள் அவர்காலத்தில் கிடைக்காமல் பிற்காலத்தில் தொகுக்கப்பட்டனவோ அறியக்கூடவில்லை. கடைச்சங்க காலத்துத் தொடங்கி விட்டாலும் ஆரியப் பண்புகள் தமிழகத்துப்பரவியது புராணகாலத்திற்குன். $கி. பி. 4—5-ஆம் நூற்றுண்டுகள் இந்திய வரலாற்றிலும் புராண காலமாகும். †அப்போதே முருகன் கணபதி முதலியவ ரைப்பற்றிய பிறப்புக்கதைகள் விரிவடைந்தன. தேவர் களின் 33-கோடிப்பிரிவுகள் முதலியவெல்லாம் தெரிந்தன குறிஞ்சிப் பாட்டில் ஆரியப்பிரகத்தன் குறிப்பு ஆரியச் செல்வாக்கு மிகுதியைக் குறிக்கும். புராணகாலத்தில் விரிந்த முருகன், திருமால் முதலியோரது அவதாரக் கதைகள் முருகாற்றுப்படை முதலியவற்றுள் காண்கின் றன. சிலப்பதிகாரத்துக்காணும் அளவில் இல்லாவிடினும் இசைக் குறிப்புக்கள் கடைச்சங்க காலத்தைவிடவும் விரிந்

---

* "கொலைகடிந்தும் களவு நீக்கியும்
அமரர்ப்பேணியும் ஆவுதியருத்தியும்"–பட்டினப்–199

$ R. S. Iyer—235 † Ibid 247

துள்ளன; யாழ்வகை விரிவும் ஏழிசையறிவும் குறிக்கப் படுகின்றன.

ஹூணர்கள் இந்தியாவில் §கி பி. 4-ஆம் நூற்றுண் டில் குறிக்கப்படுகின்றனர். தமிழில் அவர்களை அவுணர் என்கின்றனர். அவுணரும் யவனரும் இக்காலவிலக்கி யங்களில் மிகுதியாகவே பேசப்படுகின்றுனர். முல்லைப் பாட்டு, நெடுநல்வாடைகளில் யவனக்குறிப்பும் சிலப்பதி கார முதலியவற்றில் அவுணக் குறிப்பும் வருகின்றன.

நெடுநால்வாடை †160—162-வரிகளில் காணப் படும் வானநூற் குறிப்புக்கள் தமிழகத்தில் வானநூலறிவு வளர்ச்சியுற்ற நிலையைக் குறிப்பதென்பர். இச்சங்க காலத்தில் வானநூற் பயிற்சி மிகவும் பெருகியுள்ளது. †இவற்றைக் கி. பி ஆரும் நூற்றுண்டிற்குக்கொண்டு செல்வோர் கருத்து பொருத்தமற்றதாகும்.

---

§ திண்ணிலை மருப்பி னுடு தலையாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலன் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனெடு நிலையிய
உரோகிணி நினைவனள்...'

† H. O. T; P. T. S: 537

# திருக்குறள்

திருக்குறள் கி. மு. முதல் நூற்ருண்டையது என்பாரும் கி. பி. இரண்டாம் நூற்ருண்டின் கடைச்சங்க காலத்தது என்பாரும் ஆகிய ஆசிரியர் இருவகையினராவர். *கி மு. முதல் நூற்ருண்டென்பவர் அக்காலத்தில் இலங்கையையாண்ட ஏலராவென்பவனுடைய நண்பர் வள்ளுவர் என்பர். வேறு ஆதாரங்களால் மெய்ப்பிக்கப் பட்டாலன்றி இவ்வொரு கற்பனையை அப்படியே ஏற்றுக் கொள்ளுதற்கில்லை. முதல் நூற்ருண்டென்பாரும் கி. பி. இரண்டாம் நூற்ருண்டாகவும் இருக்கலாமோவென ஐயுறுகின்றனர். $மற்றும் கடைச்சங்க நூல்களுள் குறட் கருத்துக்கள் மிகுதியாக முழு வடிவத்தில் காணப்படுகின்றன, அவை குறளிலிருந்தே வந்திருக்க வேண்டுமென்பர். ஒரே கருத்துக்களைக்கொண்ட இரு நூல்களில் எதுவும் ஒன்றிலிருந்து மற்றது கடன் வாங்கியிருக்கலாம். யாமெய்யாக்கண்டவற்றுள் ; தொகுத்தவற்றுள் ; விழுப்பத்துவேண்டும் பனுவல் துணிபு ; இவற்றைப்போன்று பலவிடங்களில் வள்ளுவர் கூறியுள்ளமையால் பல சிறந்த நூல்களினின்றும் பிரித்தெடுத்துத் தொகுக்கு முயற்சி அவர்க்கேயுரியதாகலாமெனக் கருத வேண்டியுள்ளது.

கடைச்சங்கத்து நூலென்ருலோ அதனையும் நக்கீரர் தமதுரையில் குறிக்கவில்லை. கடைச்சங்கத்திற்கும் பிற

* S. S. Bharati—Tiruvalluvar—3
"வள்ளுவரை அப்படிப்பாராட்டி எடுத்தாளும் பாவலருக்கு அவர் சமகாலத்தவராதல் வேண்டுவதொன்று, அன்றேல் முன்னேராதல் வேண்டுவதொன்று"

$ Ibid.

பட்ட நூலெதனையும் மேற்கணக்கு நூல்களில் சேர்க்க வில்லை யென்பது குறிப்பிடத்தக்கது; அதற்குப்பிறபட்ட நூல்களைக் கீழ்க்கணக்கு என ஒரு பிரிவாக்கியுள்ளனர். அவற்றுள் ஒன்ருகவே குறள் அமைந்திருக்கிறது. இவற்றைக் கி பி. 4-ஆம் நூற்ருண்டிற்கு மேல்கணக்கு, கீழ்க்கணக்கு எனப்பிரித்து விடலாம்போலுள்ளது; எனவேதான் 'போப்லி' அவர்கள் குறளை ‡கி. பி. 4-ஆம் நூற்ருண்டிற்குரியதாக்குகிருர். கீழ்க்கணக்கு நூல்கள் பெரிதும் இச்சங்கத்திற்குரியவென ஆசிரியர் அனைவரும் இசைவர். அதற்றுள் முதலாவதாகவே குறளை எண்ணுதலால் இதனைக்காலத்தால் முதலாயது எனக்கொள்ளலாம்; அதற்காதரமும் மிகவுள்ளன. அங்ஙனமாயின் கி. பி. 3-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியேயாகும். பத்துப் பாட்டிற் கடுத்துக் குறளின் காலம் அமையலாம்.

நக்கீரர் தமது அகப்பொருளுரையிலேயே (2;29) குறட்பாக்களை ஆண்டுள்ளார். ஆகலின் ஆரும் நூற்ருண்டுக்கு முற்பட்டதாகிறது. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இச்சங்கம் தொடங்கிய 5-ஆம் நூற்ருண்டிற்கும் உரியவையெனப் பின்பு ஆராய்ப்படும். அவ்விரு காப்பியங்களிலும் *குறள்கள் மேற்கோளாகக் கொள்ளப்பட்டுள்ளன. எனவே குறள் 4-ஆம் நூற்ருண்டிற்கு முற்பட்டதாகலாம் என்ற கருத்து பொருத்தமுடையதாகும். 'பழமொழி' என்ற கீழ்க்கணக்கு நூல் மிகப்பழமையானது, நான்காம் நூற்ருண்டிற் குரியதென்பர். அங்ஙனமாயின் குறளை அதற்கு முற்பட்டதெனக் கருதுவதில் குறையில்லை.

---

‡ Kural—Trans: Intro:

* *மணி 22—59* Chelvakesavaroya—Thiruvalluvar—10

†அகத்தியருடைய பிரபௌத்திரர் (பேரனுக்கு மகன்) வள்ளுவர் என்றதொரு கருத்து உள்ளது. †பரிபாடலில் அகத்தியர் குறிப்பு வருகிறது. †மதுரைக் காஞ்சியில் (தலையாலங்கான நெடுஞ்செழியனது – கி. பி. 3-ஆம் நூற்றுண்டு) பொதியமலை அகத்தியர்க்குரியதாகக் கூறப் படுவது நசசினுர்க்கினியருரையா லறியப்படும். அகத்தியர் கி. பி. 2-ஆம் நூற்றுண்டிலேயே தமிழகத்தில் இருந்திருக்கிருர். அவரது பிரபௌத்திரரெனில் வள்ளுவரை 3-ஆம் நூற்றுண்டினராகக் கருதலாம். தேவர் என்பது அன்று பௌத்தர்க்கும் ஜைனர்க்கும் வழங்கிய பொதுப்பெயராயினும் அதுவே வள்ளுவருக்கு ஒரு சிறப் புப்பெயராகவும் ஆகியுள்ளது. ஆரியதேவர் என்பவர் இந்தியாவில் கி. பி. 2—3-ஆம் நூற்றுண்டுகளில் விளங்கிய ஒரு சிறந்த பௌத்த குருவ்ாவர். அவர் இந்தியாவில் எப்பகுதியினர், வரலாறென்ன என்பது இன்னும் புலப்படவில்லை. நாகார்ச்சுனர் முதலோர் காலத்திற் கண்மையாக வாழ்ந்தவர் என மட்டும் தெரிகின்றது. ‡அவர் வரலாற்றின் ஒரு நிகழ்ச்சியும் வள்ளுவரது

---

† பரி—11 ம. காஞ்சி-40—2.

"தென்னவன் பெயரிய துன்னருந்துப்பின்
தொன்முது கடவுள் பின்னர்மேய,
வரைத்தா ழருவிப் பொருப்பிற் பொருன"

‡ Yuan-chwang—97 தன்னைப் பார்க்க வந்திருந்தவரின் (ஆரியதேவர்) புகழைக் கேட்டிருந்த நாகார்ச்சுனர் ஒரு கிண்ணத்தில் நீரைநிரப்பி அதனைத் தேவரிடத்தில் கொண்டு வைக்குமாறு மாணவரிடம் அளித்தார். தேவர் அக்கிண்ணத்தில் (ஒன்றும் பேசாதவராய்) ஒரு ஊசியைப்போட்டு அனுப்பி விட்டார். இதையறிந்த நாகார்ச்சுனர் தேவர் "ஒருஞானி" யென்ருர். நீர் நிறைந்த கிண்ணம் அவரது பரந்த உலக

வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சியும் ஒன்ருகவே யுள்ளமை யால் இருவரும் ஒருவரோ அன்றி ஒரேகாலத்து வாழ்ந்த வரோ எனக்கருதவேண்டி யுள்ளது. அந்நிகழ்ச்சி தேவர், உணவருந்த உட்காருகையில் பக்கத்தில் ஒரு ஊசியையும் நீர்க்கிண்ணத்தையும் வைக்கும்படிக் கேட்டதேயாகும்; இதனைத் தம் குறிப்பில் இவான்-சுவாங் எழுதியிருப்பதால் தள்ளிவிடுவதற்கில்லை.

ஜைன பரம்பரை வரலாற்றில் ஏலாச்சாரியர் என்பவரே திருவள்ளுவரெனக் கருதப்படுகிருர். ஏலாச்சாரியரும் குந்தகுந்தரும் ஒருவரேயெனவும் கருதுவர். ஆனல் இவ்வரலாற்றில் கூறப்படும் ஒரு குறிப்பு நமக்குத்துணை புரிகின்றது. §அவர் பல்லவர் அரசியல் மொழியாகிய

---

வறிவையும் அதனில் ஊசியையிட்டது அவ்வறிவையெல்லாம் தானடைந்ததையும் குறிப்பதாகுமென நாகார்ச்சுனர் விளக்கினர். பின் அவர் தேவரிடத்தில் "நீர் உம் காலத்தறிஞர்க்கெல்லாம் மேம்பட்டவர், உமது உரையாடல் உமது முன்னேரின் பெருமையை மிகுவிப்பதாகின்றது எனக் கூறினர்."

Keith: H O. S. L. *71* : யுவான் சுவாங்கும் கிச்-சிங்கும் ஆரியதேவரை அசுவகோஷர், நாகார்ச்சுனர் முதலோருடன் சேர்த்துப் பேசுகின்றனர். எனவே அவர் கி. பி. 2—3-ஆம் நூற்ருண்டுகளின் திருப்பகாலத்கில் விளங்கியிருக்கலாம்.

§ Gangas—M V. Krishna Rao. 194. "கி. மு. 8-ல் குந்தகுந்தர் என்ற சமணத்துறவி தலை சிறந்த சமயக்குரவராய் விளங்கியவர். கர்ணபரம்பரையாலும் இலக்கியக் குறிப்புக்களாலும் அவரைக்குறளாசிரியராகிய ஏலாசாரியருடன் ஒன்று படுத்துகின்றனர். இதனல் குந்தகுந்தர் திராவிடசங்கத்திருந்த ஒரு திராவிடர் எனத்தெரிகிறது. அவர் பாடலிபுத்திரத் திருந்த திராவிட சங்கத்திருந்து பஞ்சாஸ்திகாயா, துவாத

பிராகிருதத்தில் தம் மாணவராகிய ஒரு பல்லவன் சிவ குமார மகாராசனுக்குப் பல நூல்கள் இயற்றினதாகக் கூறப்படுகிறது. இது பல்லவர் தமது பட்டயங்களைப் பிராகிருத மொழியில் வெளியிட்டகாலமாகலாம், மேலும் சிவகுமாரமகாராசா என்பவன் இங்கு கி. பி. 3-ஆம் நூற்றுண்டுக் கடைசியில் ஆண்ட சிவஸ்கந்தவர்மனுக வேண்டும். ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்பன சிலப் பதிகாரமும் மணிமேகலையும் குறிக்கும் குறிக்கத்தக்க அரசியல் உறுப்புக்கள். இறைமாட்சியிலும் செங்கோன் மையிலும், அரசர்க்குரிய ஆறங்கங்களைக் கூறிய வள்ளுவர் இவற்றைக் குறிக்கத்தவறியிருக்கமாட்டார். அவர் குறிக் காமையால், சிலப்பதிகாரத்திற்கு முற்பட்டவராகவேண் டும் எனக்கருத இடமுண்டு. கொல்குறும்பு என்ற குறளில் வரும் பெயர் குறும்பர் என்ற இனத்தைக் குறிப்பதாகலாம். இவர்கள் பல்லவரின் தொடக்ககாலத் தில் தமிழகத்தே இருந்தவராவர்.

காமன் என்ற தெய்வம் கடைச்சங்க காலத்திற்குச் சிறிது பிற்பட்டதாகவேண்டும். தேயம், பகவன், பூசனை முதலிய பெயர்களும் †கள் (பூரியர்-கள்) ஆநின்று, ஏல், ஆனுல், மல் (செய்யாமல்), வான், பான், பாக்கு முதலிய வினைவிகுதிகளும் குறளில் வழங்கியிருப்பது

---

சமுகா, சமயசாரா முதலிய நூல்களை இயற்றினர். அவற்றை அக்காலத்து அரசியல் மொழியாகிய பிராகிருதத்தில் தனது மாணவராகிய பல்லவ (அரசன்) சிவகுமாரமகாராஜாவுக்காக எழுதினர்."

† S. V. Pillai—84—85; J. O M. S: Vol—28:191:L.V.R.

கடைச் சங்கத்திற்குப் ‡பிந்திய காலத்தைக் குறிக்குமென்பர். மிகவும் பிற்பட்டதாகாவென்பதற்குக் கடைச் சங்கத்து விவரித்த அறம் பொருள் இன்பமென்ற முப்பேறுகளையே குறளும் விவரித்துப் பேசுதலால் உணரப்படுகின்றது. வீடு என்பதுபற்றி விவரிக்கவில்லை. அவ்வழக்கு இறையனார் அகப்பொருளுரையினாலேயே முற்பட்டு நிற்கின்றது. மற்றும் இக்காலத்திற்குரிய புலாலுண்ணாமை, கொல்லாமை, கள், சூது வரைவின் மகளிர் முதலியவற்றை விலக்குதல், முதலிய சீலங்கள் சமூகவொழுக்கங்களாக வற்புறுத்தப்படுதல் குறளில் காணப்படுகின்றது. கடைச்சங்க நூல்களுள் இந்நெறிகள் காணப்படவில்லை. எச்செய்யுள் வகையைப்பற்றிய அறிவும் எக்காலத்தும் இருந்ததாக இலக்கணங்கள் கூறினாலும் ஒரு காலத்திற்குரிய நூற்றொகுதிகளைக் கொண்டு †அக்காலத்திற்குரிய 'பாவகையாக' ஒன்றைக்காண முடியும்; நூல்வடிவமாக ஒன்றனை வரையறுக்கக் கூடும். அவ்வகையில் கடைச்சங்கத்திற்கு ஆசிரியத்தையும், நாலாஞ் சங்கத்திற்கு வெண்பாவையும் தேவார காலத்திற்கு (கி. பி. 7—8.நூ.) விருத்தத்தையும் பாவகைகளாகக் கொள்ளலாம். மற்றும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்ட முழு இலக்கியங்கள் கடைச்சங்காலத்துக் காணப்படவில்லை; இக்காலத்தில் காப்பிய முதலியன வுண்டு. பரிபாடல், கலித்தொகைகளின் நெடும்பாடல்கள், நீண்டு தொடர்நிலைச் செய்யுள்களாக இக்காலத்து மாறியுள்ளன. வெண்பா 3-ஆம் நூற்றாண்டின் இறுதியி

---

‡ P. T. S: H. O. T.—583 "From the predominance of Aryan ideas and the free use of Sanskrit words Tiruvalluvar cannot be assigned to any century earlier than the VI. S. V: H. O. T. L: 84. † மறைமலை: 44

லேயே பத்துப்பாட்டல்களின் கடைசியில் தொடங்கிவிடு கின்றது. வெண்பாவின் மிகச்சிறந்த முழு இலக்கியம் திருக்குறளாகும். எனவே இத்தகைய சீர்சான்ற புலவர் சங்ககாலத்திருந்திருப்பராயின் சங்கப்புலவரால் கழாத் தலையார், கபிலர், ப்ரணர், மாங்குடிமருதன்போல குறிக் கப்படத்தவறியிருக்கமாட்டார். அன்றி இவரேனும் தம் காலத்தரசனைப் பாடத்தவறியிரார். ஒரு பாடலும் ஒரு குறிப்பும் சங்கநூலுள் இல்லை.

ஆசிரியர் பலர் இதனைச் சமயப் பொதுமைக்காலம் என்பர். எச்சமயத்தின் சிறந்தகோட்பாட்டையும் இணைத் துத்தம் நெறியாகக்கொள்வதே சமையப்பொதுமையாகும். வள்ளுவர் அத்தகைய நெறியினரென (Eccleactic) ஆசிரியர் பலர் கருதுகின்றனர். குறள் 'பொதுமறை' என்ற ஒரு பெயருடையதாகும். கி. பி. மூன்ரும் நூற் ருண்டதாயின் குறள் ஆரும் நூற்ருண்டிலிருந்த இச் சங்கத்தாரிடம் ஏன் அரங்கேற்றத்திற்கு வந்தது என்ற தோர் ஐயமுள்ளது. குறள் இங்கு அரங்கேற்றப்பட வில்லை, பாராட்டப்பட்டது என்பதே இதற்கு விடை யாகும். அப்பாராட்டுதலே திருவள்ளுவமாலை. சங்கப் பலகையில் புலவர்கட்கிடையே வைக்கப்பட்டது குறள் நூல் எனவே வரலாறுரைக்கின்றது. வள்ளுவர் அப்பலகையில் உட்காரவில்லை. ‡மற்றும் சுங்கத்தின் முன் ஔவையாரே குறளைக்கொண்டு வந்ததாகக்கதை யொன்றுள்ளது. இவற்ருல் நூலாசிரியர் அக்காலத்தில் இல்லையென உணரவிருக்கின்றது. இறையனுரகப் பொரு ளுக்கு உரைதான் இக்காலத்துக்காணப்பட்டதன்றி நூல் முற்காலத்ததேயாகும். அது இறைவனது கோயிற்படி

---

‡ Pope: I A. VII—221

யின்கீழிருந்தே பழைய சுவடியாகக்கொண்டு வரப்பட்டுள்ளது. முற்கூறியதுபோலக் கீழ்க்கணக்குள் பழமொழி முதலிய கி. பி. 4-ஆம் நூற்றாண்டிற்கும் 5-ஆம் நூற்றாண்டிற்கும் உரியன நமக்குக்கிடைத்துள்ளன. கடைச் சங்கத்துப் பாடல்களைத் தொகுப்பதும் அதன்பின் இடைப் பட்ட நூல்களை ஆராய்ந்து சிறப்புக்காண்டலும் இச்சங்கத்தின் செயலாகவிருந்தது. அவ்வகையில் ஆராய்ந்து சிறப்புகாணப்பட்டு உலகிற்கறிமுகம் செய்யப்பட்டது குறளாகும். களப்பிரர், பஞ்சம், கடல்கோள் முதலிய வற்றால் நிலைகுலைந்திருந்த நாட்டில் குறள் போன்ற மூன்றும் நூற்றாண்டு நூல்கள் பொதுமக்கள் பார்வைக்கு வராமல் மங்கியோ மறைந்தோ கிடந்தன. அவற்றை வெளிப்படுத்து முறையில் இச்சங்கம் வள்ளுவமாலை பாடியது.

†எனவே குறள் சங்க முடிவிலோ அன்றி அதனையடுத்தோ இயன்றிருக்க வேண்டுமென ஆசிரியர்கள் கருதுவது பொருத்தமேயாகும்.

---

† தெ. பெர். மீ: கலைக்களஞ்சியம்—VI 'திருவள்ளுவர்'

# கி. பி. நான்காம் நூற்ருண்டு

## பரிபாடலும் கலித்தொகையும்

இவையிரண்டும் கடைச்சங்க நூல்களேயென்பது அறிஞர் பலரது கருத்தாகும். நக்கீரர் கடைச்சங்கநூல் களில் இவையிரண்டனேயும் கூறியுள்ளார் என்பதுண் மையே. பரிபாடல் முதற்சங்கத்தில் இலக்கியமாகியுள் ளது. இடைச்சங்கத்தில் கலித்தொகை தோன்றியுள்ளது. ஆனல் அவை இன்று நமக்குக்கிடைக்கவில்லே. கடைச் சங்கப்பரிபாடல் எழுபதுள்ளும் நமக்குக் கிடைப்பன இருபத்தாறேயாகும். கடைச்சங்கத்திற்குப் பின்பும் இவ் விருவகைப் பாடல்கள் இயற்றப்பட்டிருக்கலாம். அவ் வாறியற்றப்பட்டனவே இப்போதுள்ள கலித்தொகையும் பரிபாடலும் என்பது ஆசிரியர் பலரது கருத்துப்போலும். அன்றி பல பிற்காலத்துப்பாடல்கல் இந்நூல்களுள் கலந் திருக்கலாம். அதனுலேயே இந்நூல்கள் கடைச்சங்கத் திற்குப் பிற்பட்டவை என்ற கருத்து வலிவுற்றிருக்கிறது. பதினேரும் பரிபாடலில் (11:1—10) வரும் வானநூற் குறிப்பைக்கொண்டு அதனேக் கி. பி. ஏழாம் நூற்ருண் டிற்காக்குகின்றனர்.

'பொதியில் முனிவன் புரைவரைக்கீறி' என்ற பரி பாடல் (11—11) தொடரில் அகத்தியர் குறிக்கப்படு

கிருர். அகத்தியர் குறிப்பு மூன்றும் நூற்ருண்டிலேயே இலத்கியங்களில் வருவதாக முன்பும் கூறினேம். இரண்டாம் நூற்ருண்டின் அகப்புறப்பாடல்களுள் பொதியைக் குறிப்பு எத்தனையோ விடங்களில் வருகின்றன. அங்கு ஓரிடத்திலும் அகத்தியர் தொடர்பு கூறப்படவில்லை. கலித்தொகையில் முல்லை நிலத்து மக்கள் ஏறுதழுவுதல் விழா கொண்டாடுவதுபற்றிய குறிப்பு வருகிறது. இக் குறிப்பு சிலப்பதிகாரத்தும் பேசப்படுகின்றது. ஆனல் அகநானூறு முதலிய அகப்பாடல்களில் முல்லைத்திணைப் பாடல்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. அங்கெவ்விடத்தும் 'ஏறுதழுவுதல்' ஆகிய வழக்கு முல்லைத்திணையார்க்குக் குறிக்கப்படவில்லை; புறப்பாடலுள்ளும் இல்லை. இவ்வழக்கம் ஒரு காலவேறுபாட்டைக் குறிப்பதாகக் கருதப்படுகின்றது.

பரிபாடலில் தைந்நீராடல் அம்பாவாடல் ஆகிய வழக்குகள் கூறப்படுகின்றன. அவை தேவாரகாலத்தை யொட்டியனபோலக் காணப்படுகின்றன. கடைச்சங்க காலத்லு இவ்விழாக்கள் இப்பெயர்களுடன் இருந்ததில்லை. முதுகுடுமியும், வடிம்பலம்ப நின்ற பாண்டியனும் கடலாடு விழாவையும் இந்திரவிழாவையும் தோற்றுவித்தனர். அவையே சிலப்பதிகாரத்தில் பேசப்படுவன. பாண்டியரும் சேரரும் கடற்கரைத் தலைநகரங்களைவிட்டு உள்நாடுகட்கு வந்துவிட்ட இக்காலத்திற்ருன் 'அம்பாவாடல்' வழக்கம் ஆற்றுப்பெருக்குற்ற தைமாதங்களில் ஏற்பட்டிருக்கவேண்டும். கடலில் நீராடியும் மூழ்கிக்குளித்தும் பழகிய மக்கள் ஆற்றிலாவது அம்மகிழ்ச்சியை விடாமல் காணத்தொடங்கியதே தைந்நீராடலாகலாம். இந்நூல்களில் இழிந்தோர் அடியோர் முதலாயவர்க்குரிய காதல்

துறைகள் விரிவாகக் கூறப்படுகின்றன. பெருந்திணை கைக்கிளைத்துறைகளும் பல்கிக்காண்கின்றன. நகை, இளி வரல், சுவை ததும்பும் காமத்துறைகள் முதலிய விளக்கி யுரைக்கப்படுகின்றன. இவற்றையெல்லாம் பார்க்கையில் இந்நூல்களை ஓரிரு நூற்றுண்டேனும் பின்தள்ளிப்போட வேண்டியுள்ளது. சங்கநூல்களைப் படிக்கையில் ஏற்படும் நூல் அமைதி இவற்றுள் அடிக்கடி மறைந்துபோகின்றது. முற்கூறியபடி புராணக்கதைகளும் நிகழ்ச்சிகளும் சொற் களும் பலவாகப்பயின்று வருகின்றன. முருகன் திருமால் சிவன் ஆகியவர்களைப்பற்றிய 18-புராணங்கள் இக் காலத்திலேயே பெருகின. அவற்றுட்காணும் கதை விரிவு களெல்லாம் இந்நூல்களுட்காணப்படுகின்றன. வைகை யையும் முருகனையும் பாராட்டும் இலக்கியங்களாக இவ் விரு நூல்களையும் சிலப்பதிகாரத்தையும் கொள்ளலாம். வைகையைப்போற்றுவதில் பரிபாடலைக் கலித்தொகையும் சிலப்பதிகாரமும் பின்பற்றுவனவாகலாம். *புலவர்நாவிற் பொருந்திய பூங்கொடி வையையென்னும் பொய்யாக் குலக்கொடி’ எனச் சிலப்பதிகாரம் போற்றுவதில் புலவர் நாவிற்பொருந்திய என்றவிடத்து ஆசிரியருக்கு பரிபாடல் நினைவிருப்பதாகத் தெரிகிறது. களப்பிரர் முதலியோ ரால் நாடு அலைவுற்று அமைதியற்ற நிலை பாடல்களில் அடிக்கடி உணரவிருக்கின்றது. மதுரையும் பாண்டியரும் சிறந்திருந்த காலத்தில் இவ்விரு நூல்களும் எழுந்துள்ளன. ஏதோவொரு குறிப்பிட்ட பாண்டியனை இருநூல்களும் அடிக்கடிப் பாராட்டுகின்றன. மதுரை நான்மாடக்கூடல் என்ற பெயருடன் பேசப்படுகின்றது. மதுரை நகரம் மூன்றுகாலங்களில் மூன்று பெயர்களுடன் புதுமையுற்று

---

* *பரிபாடல் 6: 7—8* “மாசில் பனுவற் புலவர் புகழ்பல நாவிற் புனைந்த நன்கவிதை மாறுமை”

விளங்கியுள்ளது: கடைச்சங்காலத்தில் மதுரை; இடைக் காலத்தில் நான்மாடக்கூடல், ஆலவாய்; பின்னிரு பெயர் களும் இச்சங்ககாலத்திற்குரியன. ‡திருவிளையாடலில் மதுரை நான்மாடக்கூடலாக ஒரு குறித்த பாண்டியன் காலத்தில் புதுமையடைந்துள்ளது. அவன் முற்கூறிய திருவிளையாடல் அரசர் வரிசையில் உக்கிரபாண்டியனுக்கு 2—3 தலைமுறைக்குப்பின் ஆண்டவன். அங்ஙனமாயின் மூன்ரும் நூற்ருண்டுக்கடைசி அல்லது நான்காம் நூற்ருண் டுத்தொடக்கத்தில் கூடல் ஏற்பட்டிருக்கலாம் அந்நகரைப் பாராட்டும் நூல்கள் நான்காம் நூற்ருண்டுக்குரியவாகலா மென்பதில் குறையில்லை.

இக்காலத்தின் கடைசிப்பகுதியில் எழுகூற்றிருக்கை முதலிய †சொல்லணிகள் (சித்திரகவி) பாடல்களில் மிகுகின்றன. அங்கிலே இந்நூல்களிலும் தொடங்கியுள் ளது. தொகை நூல்களில் இம்முறையில்லை, §சொல் லமைதியும் பெரிதும் வேறுபட்டுள்ளது.

---

‡ அபிடேகபாண்டியன்: —19-படலம்.

† இணைபிரி அணிதுணி எரிபுரைய நெறியிடர் எரிபுரைய.

§ ஓசனை; வாசம்; சிரம்; அத்திரி; கொற்றவை; சங்கம்; ஓசனை; காமன்; மண்டபம்;

# கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு

## சிலப்பதிகாரம்

சிலப்பதிகாரமும் மணிமேகலேயும் கடைச்சங்க இலக்கியங்களாக அகப்பொருளுரை கூறவில்லே. எனவே கி. பி. மூன்றும் நூற்றுண்டிற்குப் பிற்பட்டவாகவேண்டும். கணபதி வணக்கம் தமிழகத்தில் கி. பி. ஆரும் நூற்றுண்டில் வந்திருக்கவேண்டும் என முன்பு கூறப்பட்டது. கோயில்கஊயே வரிசையாகக் கூறுமிடங்கள் இவ்விரு காவியங்களிலும் (புகாரில்) நிறைய வருகின்றன அங்கெல்லாம் கணபதிக்குக் கோயில் குறிக்கப்படவில்லே. ஆகவே இக்காவியங்கள் ஆரும் நூற்றுண்டிற்கு முற்பட்டவையாகக்கொள்ள வேண்டும். குறட்பாடல்கள் இவ்விரு நூல்களிலும் மேற்கோளாகக் கொள்ளப்பட்டுள்ளன. குறள் கி. பி. 3-ஆம் நூற்றுண்டாகலின் இவை குறளுக்குப் பிற்பட்டவாகவேண்டும். எனவே தான் இவ்விரு காவியங்கஊயும் 5—6-ஆம் நூற்றுண்டு கட்குரியவாகக்கொள்ள வேண்டியுள்ளது. சிலப்பதிகாரம் இரண்டனுள்ளும் முற்பட்டதாகலாம். அது 5-ஆம் நூற்றுண்டிற்குரியது. இரு நூல்களும் ஒருநாணயத்தின் இரு பக்கங்கஊப்போன்று ஒரு கதையின் இரண்டு பக்கங்கஊ விவரிக்கின்றன; சமய அரசியல் அடிப்படை இரண்டிற்கும் ஒன்றே. செய்யுளமைதி, சொல்லமைதி, அணிகள் முதலியவெல்லாம் ஒரேமாதிரி யமைந்துள்ளன. நூற்பொருளில் இரண்டும் துறவு, சமயவளர்ச்சி, பெண்ணின் பெருமை, விலேமகளிர் ஒழிப்பு ஆகியவற்றையே குறிக்கோளாகக்கொண்டுள்ளன.

இருகாவியங்களின் பாயிரங்களிலும் ஒருவர் எழுதிய நூலை மற்றவர் கேட்டதாகக் கூறப்படுகிறது. *எனவே இரண்டும் ஒருகாலத்தியற்றப்பட்டவாகவேண்டும். அன்றி இரண்டின் அண்மையைக் கருதிப் பாயிரஞ் செய்தோர் இருவரையும் ஒருகாலத்தவராக்கி விட்டனரோ, தெரியவில்லை. மணிமேகலையில் புகார் கடல் கொள்ளப்பட்டிருத்தலாலும் ஒரு பஞ்சம்பற்றிய செய்தி வருதலாலும் சிலப்பதிகாரத்தைச் சற்று முற்படக்கொள்ளுகின்றனர் ஆசிரியர் பலர். சேரவரசன் செங்குட்டுவனது பெயர் நேரே குறிக்கப்படுதலாலும், §(மணிமேகலையிற்போல) வடமொழிச்சொற்களும் வழக்குகளும் மிகுதியாகக்காணப்படாமையாலும் சிலப்பதிகாரம் முற்பட்டதெனக் கருத வேண்டியுள்ளது.

மணிமேகலையரசர்கள் யாரையும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. மணிமேகலையை

---

* S V: 150 "The story of Silappadikaram really leads up to the story of Manimekalai."

§ Dr. S. K. Mani: 12 ; K. A. N: Pan: 17:

Tr. S. K: Intro XVIII; Mani: 7. The story of Manimekalai would be incomplete without the introduction that is contained in the story of Silappadikaram:

"The intimate connection between the Silapadhikaram and Manimekalai itself as literary works, products of a single age, a single tradition and of a very similiar atmosphere"

K. A. N: 17—18.

P. T. S: சிலப்பதிகாரம் கி. பி ஆரும் நூற்றுண்டிற்குரியது; மணிமேகலையிலுள்ள பெயர்களெல்லாம் வடமொழிக்குரியன; ஆரியச்செல்வாக்கு மேலோங்கிய நிலையைக்குறிக்கும் மணிமேகலையின் வாதமும் புராண நம்பிக்கைகளும் அதனை 7-ஆம் நூற்றுண்டிற்குரியதாக்கும்.

வஞ்சியில் செங்குட்டுவன் கண்டதாகக் குறிப்பில்லை. கண்ணகிக்குக் கோயிலெழுப்பிய செங்குட்டுவன் மணிமேகலைக் காலத்திருந்தால் தவருமல் அவளை வரவேற்றிருப்பான். கி. பி. 5-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் நான்காஞ்சங்கத் தொடக்கத்துச் சாத்தனர் இளையவராயின்—அவர் நீண்ட வாழ்நாளுடையராயின் -6-ம் நூற்ருண்டின் பிற்பகுதியிலும் வாழ்ந்திருக்கக்கூடும். எனவே சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோவடிகள் ஐந்தாம் நூற்ருண்டினராவர். அன்றி இருவர்க்கும் 50—60 ஆண்டுகள் இடையிட்டதாயினும் இளங்கோவடிகள் 5-ஆம் நூற்ருண்டினராகிருர். மணிமேகலையில் சாத்தனர் ஜைனத்தை மிகவும் தாக்குகிருர். இளங்கோவடிகட்கு அத்தகைய சமயக்காழ்ப்பில்லை. அன்றி அத்தாக்குதலையும் பொறுக்கும் பொறுமை அடிகட்கிருந்திருக்கலாம். அவர்–வள்ளுவரைப்போன்று பொதுநெறியுடையவராய்–ஜைனத்தில் சிறந்த பற்றும் மற்றசமயங்களில் பொறையும் (Eccleactic) உடையராயிருந்திருக்கலாம்.

முற்கூறியபடி ஹூணர்கள் அவுணர்களெனச் சிலப்பதிகாரத்துக் கூறப்படுகின்றனர். 'யவனரும் அவுணரும்' சிலர்க்கு ஒன்ருகவே படுகின்றன. ஆனல் யவனர் என்ற வேறு சொல்லையும் சிலப்பதிகாரம் ஆளுகின்றது. எனவே 4-ஆம் நூற்ருண்டில் இந்தியாவைக் கலக்கிய ஹூணருக்கும் பிற்பட்டது சிலப்பதிகாரம். கலைமகள் வழிபாடும் இக்காலத்து வழக்கில் வந்துள்ளது. §சிந்தா (தேவி) விளக்கு என அவளைப் போற்றியுள்ளனர். திருவள்ளுவமாலையில் நாமகள் பாடியதாகப் பாடலொன்றுள்ளது.

---

§ சிலப்: 10—167: மணி. 13—106.

†இந்திரன் இயற்றிய ஐந்திரவிலக்கணம் சிலப்பதிகாரத்துக் குறிக்கப்படுகின்றது. ஐந்தாம் நூற்ருண்டிற்குப் பிற்பட்டதாகவும் டாக்டர் பர்ரோ என்பவர் கருதுகிருர். ஐந்திரம் பாணினிக்கு முற்பட்டதெனவும் பாணினி காலத்தும் அது வழக்கிலிருந்ததாகவும் கி. பி. 3—4-ஆம் நூற்ருண்டிற்குரிய காதந்திரம் என்பது ஐந்திரமரபைப் பற்றிய இலக்கணமெனவும் திரு. வையாபுரிப்பிள்ளை போன்றவர்கள் கூறுகின்றனர். எனவே காதந்திரத்தின் அறிவு தமிழகத்தில் 4-ஆம் நூற்ருண்டில் பரவியதன் மூலம் †ஐந்திரமும் பரவியிருக்கலாம். ஜைனசமயம் மிக்க செல்வாக்குற்றிருந்த நிலையில் ஐந்திரம் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுகின்றது. அக்காலம் கி. பி. 3-ஆம் நூற்ருண்டுக்கும் பின்னதேயாகும்.

காஞ்சிபுரம் ஒரு சிறந்த பௌத்த தலைநகராகவிருந்த காலத்தில் மணிமேகலை எழுதப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் காஞ்சிக்குறிப்பில்லை. மாடலன் திருவரங்கத்திலிருந்து வேங்கடம் சென்ற வழியில் காஞ்சியை ஏனோ இளங்கோவடிகள் கூறவில்லை! கி. பி. 5—6-ஆம் நூற்ருண்டைய பௌத்த யாத்ரீகரே காஞ்சியைப்பற்றி மிகவாக எழுதுகின்றனர்.

செங்குட்டுவன் கி. பி. இரண்டாம் நூற்ருண்டவன். அவன் தம்பி இளங்கோவடிகள் எழுதியது எவ்வாறு 5-ஆம் நூற்ருண்டினதாகும் என்ற ஐயப்பாடு உண்டாகிறது. இரண்டாம் நூற்ருண்டிற்குரிய கதையைப் பிற்

---

† *சிலப்: 11—154 'கப்பந்திரன் காட்டிய நூல்' 30—171*

Dr. Burrow: H. O. S. L—49. 'The Jainendra Vyakarrna (678—A D) which was Composed on behalf of the Jains.

காலத்து இலக்கியமாக்கியிருக்கவேண்டும். இடைப்பட்ட காலத்திற்குரிய நிகழ்ச்சிகளும் வழக்குகளும் (anacronism) இணைத்துக் கொள்ளப்பட்டன. இளங்கோவைப்பற்றிப் பதிற்றுப்பத்தில் செங்குட்டுவன் வரலாறுரைக்குமிடத்தில் குறிப்பேதுமில்லை. அவர் †5-ஆம் நூற்றாண்டிலிருந்த ஒரு சேர இளவரசராகலாம். திடீரெனத்தம் வரலாற்றைத்தாமே உரைக்கும் இளங்கோவடிகளைப்பற்றிய †வரிகளுக்கும் வஞ்சிக்காண்டத்திற்கும் அடியார்க்கு நல்லார் உரையில்லாமலிருப்பது இவ்வையத்தை உறுதிப்படுத்துகின்றது. வஞ்சிக்காண்டத்தில் இவ்விடம் இடைச்செருகலோ வென்பதையும் கருதவேண்டும். அடியார்க்கு நல்லார் உரையிருப்பின் இது உண்மைதானா, வரலாறு என்பதெல்லாம் தெளிவாகிவிடும். அண்மைக்காலத்தவராகலின் பிற்காலத்தார் மயங்கிச் செங்குட்டுவனுடன் இணைத்துக் கதையின் பகுதியாகப் பலவரிகளையும் நூலில் சேர்த்திருக்கலாம். 5-ஆம் நூற்றாண்டு வரைப்பட்ட நிகழ்ச்சிகளை ஒன்றுபோலத் தொகுப்பது இச்சங்ககாலத்து மரபாகவும் தோன்றுகிறது. 4—5-ஆம் நூற்றாண்டுகட்குரிய ‡பரதசாத்திரத்தைச் சிலப்பதிகார அரங்கேற்றுகாதை பின்பற்றுகிறது ஆகலின் அது எட்டாம் நூற்றாண்டினதென ஆராய்ச்சியாளர் பலர் கூறுவர். அவர்கள் திருக்குறளை ஏழாம் நூற்றாண்டதாக ஆக்குதலின் அதனை மேற்கோள்காட்டும் இவ்விரு காவியங்களையும் பின்னே கொண்டு செல்லுகின்றனர். 5-ஆம் நூற்றாண்டுப்

---

† *மு. ரா: சேரன் செங்குட்டுவன்—169;* S. V: *151:* 'மணிமேகலை இவ்விரண்டனுள் முற்பட்டதாகும்; இதுவும் சிலப்பதிகாரமும் கி பி. 5 ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டனவாகும்.

‡ S. V: 150;

பரதத்தைப் பின்பற்றும் நூல் 5—6-ஆம். நூற்றுண்டினதாக ஏன் இருத்தலாகதெனப் புரியவில்லை!

‡பழமொழி நான்மணிக்கடிகை, ஆசாரக்கோவை, அறநெறிச்சாரம் முதலியன, சிலப்பதிகாரத்து எதிரொலிக்கின்றன. பெருங்கதை பின்பற்றப்படுகிறது. இந்நூல்கள் 6—7-ஆம் நூற்றுண்டிற்குரியவாகலின் சிலப்பதிகாரம் அவற்றிற்குப் பின்னதென்பர். முற்கூறியபடி ஒரே கருத்துக்களையுடைய இரு நூல்களில் எது முன்னதெனக் காண்டல் மிக அருமையாகும். மற்றும் பெருங்கதை, பஞ்சதந்திரம் முதலிய ஆரும் நூற்றுண்டிற்குரியன. பின்பற்றியவாயினும் அந்நூற்றுண்டிற்கே சிலப்பதிகாரமும் உரியதாகலாம்.

7-8-ஆம் நூற்றுண்டதாயின் பல்லவர் குறிப்பு இக்காவியத்தில் ஏன் வரவில்லை? §7—8-நூற்றுண்டைய தொண்டத்தொகை பாரதவெண்பா, நந்திக்கலம்பகம் ஆழ்வார்ப்பாடல்கள் போன்ற நூல்கள் தம்கால அரசர்ப் பெயர்களைத் தெளிவாகக் குறிக்கின்றதுபோல் பல்லவரைச் சிலப்பதிகாரம் குறிக்கவில்லை. 7—9-நூற்றுண்டுகளில் சைவ வைணவ சமயங்கள் மேலோங்கியிருந்தன. சிலப்பதிகாரம் ஜைனத்தின் செல்வாக்குற்ற நிலையைக் குறிக்கின்றது. எனவே எப்படியும் 6-ஆம் நூற்றுண்டிற்குப் பின்னர் கொண்டுபோக முடியாது.

---

‡ S. V: 151-2;

§ தொண்டத்தொகை: நின்றசீர் நெடுமாறன்; பாரத வெண்பா, நந்திக்கலம்பகம்: நந்திவர்மன்; திருமங்கை; தொண்டையர்கோன் வைரமேகன்;

# மணிமேகலை

திருக்குறளை மேற்கோள் காட்டுதலாலும் விநாயகர் (கோயிலை) வணக்கத்தைக் குறிக்காததாலும் மணிமேகலை யும் கி. பி. 200–600 க்கு இடைப்பட்டதெனக்கூறினோம். சிலப்பதிகாரத்திற்குச் சிறிது பிற்பட்டதாயினும் இதுவும் ஐந்தாம் நூற்றுண்டதாகிறது. மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனுரென்பது நூலாசிரியன் பெயர். இவர் கடைச்சங்க சாத்தனுரின் வேருனவர். மணிமேகலைப் பதிகம் இவரை "வளங்கெழுகூலவாணிகன் சாத்தன்" என்கிறது. வள்ளுவமாலையிலும் பேராசிரியர் உரையி லும் இவர் §சீத்தலைச்சாத்தனுர் எனக்குறிக்கப்படுகிருர். டாக்டர் உ. வே. சாமிநாதையர் தம் மணிமேகலை உரை யிலும் இப்பெயரை உறுதிப்படுத்துகிருர். இவரது ஊர் மதுரையெனத் தெரிகிறது. மற்றும் சாத்தனுர் வெள்ளி யம்பலத்துத் துயில்கொண்டிருந்தபோது மதுராபதி தெய் வம் அவர்முன் வந்து பழம் பிறப்புணர்த்தியது என்ற தொரு குறிப்பும் சிலப்பதிகாரத்துள்ளது, இதனுலும் அவரதூர் மதுரையெனத்தெளியப்படும்; வெள்ளியம்பல மென்பது பதஞ்சலிக்காக இறைவன் திருக்கூத்தாடிய இடம் எனத் திருவிளையாடல் கூறும்; ‡எனவே இது கி. பி. 5-ஆம் நூற்றுண்டாகிய பதஞ்சலிக்காலம்.

---

§ மணி: பதிகம்—96; சிலப்: 28 வரி; பேராசிரியர் பொருள் 552. ; வள்ளுவமாலை—11

J. O. R. M: Vol: 32. 273: V. Srinivasan: 'During this period of the IV Sangam, The jains and the Buddhists contributed much to Tamil Literature It may be pointed out that Seetalai Sattanar the author of Manimekalai "One of the chefs de' oeuvre of Tamil Litrature lived at Madura.

சாத்தனுரைப்பற்றியதொரு கதை, அவர் காணும் பாடல்களில் குற்றங்குறைகளிருந்தால் மனம் பொருமல் தம் தலையில் எழுத்தாணியால் குத்திக்கொள்வார், அதனுல் எப்போதும் தலையில் சீப்பிடித்தே யிருக்கும், அதனுலேயே அவர் சீத்தலைச்சாத்தனுர் ஆனுரென்பது. §வள்ளுவரது முப்பாலைக் கேட்டபிறகே அத்தலைநோய் தீர்ந்ததாம். வள்ளுவமாலையில் காணப்படலால் இக் கதையை ஏன் மறுக்கவேண்டும் எனப்புலப்படவில்லை.

புறநானூற்றில் இவர் பாடியதாக ஒரே பாடல் உள்ளது. இவர் பாடிய பாண்டியனைப்பற்றியும் இவ்வொரு பாடல்தான் உள்ளது. தகைமாண்வழுதி (புறம்—59) எனப்பாண்டியன் அதனில் குறிக்கப்படுகிறுன். அவன் இந்நாலாஞ்சங்கத்திற்குத் தலைமைவகித்த ‡உக்கிரபாண்டியப் பெருவழுதியே யாகவேண்டும். ஐந்தாம் நூற்ருண்டில் இயற்றப்பட்டுப் புறநானூற்றுள் இணைந்த பாடலுள் இதுவும் ஒன்ருகும். மணிமேகலையில் சாத்தனுர் மதுரையைத்தக்ஷிணமதுரையெனக் குறிக்கிறுர். நக்கீரர், கடைச்சங்கத்து மதுரையை உத்தரமதுரையென்னலால் தாமிருந்து உரையெழுதிய மதுரையைத் தக்ஷிணமதுரையென உணர்த்திஞரென்பது புலனுகும்.

மணிமேகலையின் 29-வது காதை அதன் காலத்தை யறிவதற்குச் சிறந்த ஆதாரமெனக் கருதப்படுகிறது.

---

§ 25—139; 'தவத்திரம்பூண்டு தருமம் கேட்டது'

‡ P. T. S: 238 'There is no instance known from early Literature of any Pandya or cola having a Sanskrit name or title till we came to Ugrapandya in the Vcen. A.D.'; S. V-151

அக்காதையிலுள்ள தர்க்கநூற்பகுதி (logic) *திக்நாகர் என்ற பௌத்த அறிஞரெழுதிய நியாயப்பிரவேசத்தைத்

---

* நியாயப்பிரவேசம்:

J. O. R. M: XI. Vol: 116: Pandit N. Aiyasamy Sastri.

டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் மணிமேகலை யிலுள்ள வாதநூற் கருத்துக்கள் திக்நாகருக்கு முந்தியவை யெனவும் பேராசிரியர் ஜாகோபியும் மஹாமஹோபாத் யாய குப்புசாமி சாஸ்திரியும் அவை திக்நாகரைப் பின் பற்றி அவர்க்குப்பின்பியற்றப்படட்டனவெனவும் கூறுவர். செந்தமிழ் ஆசிரியர் திருநாராயணைங்கார் அவர்கள் செந் தமிழ் 34-ஆம் தொகுதியில் இதுபற்றிய நடுநிலையான ஒப்பீட்டாராய்ச்சியொன்று செய்து மணிமேகலையின் 29-ஆம் காதையும் திக்நாகரது நியாயப்பிரவேசமும் அடிப் படையில் மட்டுமன்றிச் சொல் சொல்லாக ஒன்றுபடு கின்றன எனக்காட்டியுள்ளார். எனவே மணிமேகலை நியாயப்பிரவேசத்திற்குப்பின் இயற்றப்பட்டதென்ற முடி பினை நாம் மறுத்தற்கியலாது.

பக்கம் 12.1: டாக்டர். ஐயங்காரவர்கள் தமது கருத்தை நிலை நிறுத்துவதற்காகக் கூறுவன ஆதாரமற்ற வாகும்......

"நியாயப்பிரவேசம் திக்நாகராலன்றி சங்கரசுவாமி ஆகியவரால் இயற்றப்பட்தெனத் 'துஸ்ஸி' என்பவர் தெளிவாக விளக்கியுள்ளார்"

தழுவியது எனவே திக்நாகருடைய கி. பி. 4-ஆம் நூற்றுண்டிற்குப் பிற்பட்டதே மணிமேகலையென்பது ஆசிரியர் பலர் கோட்பாடாகும். மணிமேகலை நியாயப் பிரவேசம் ஆகிய இரண்டனுள் எதற்கு எதுமுந்திய ஆதாரம் என்பது

---

S. T. (தொடர்ச்சி)

டாக்டர். எஸ். கே. ஐயங்கார்: நியாயப்பிரவேசம் திக்நாகர், அல்லது அவரது அடுத்த மாணவர் சங்கர சுவாமி, யாரால் இயற்றப்பட்டிருப்பினும் அதனுல் முடிபில் அதிக வேறுபாடொன்றுமில்லை.

(Prof. Jacobi and S. K. Iyengar) மணிமேகலையிலுள்ள பௌத்தவாதமும் நியாயப்பிரவேசமும் பெரிதும் ஒன்றேயென்பதில் எங்களுக்குள் வேறுபாடில்லை. ஆனுல் எது முந்தியது எது பிந்தியது என்பதைத்தான் முடிவுசெய்ய வேண்டியுள்ளது.

பக்கம் 97: சாத்தனுர் 4-ஆபாசங்களைக் கூறுவதிலிருந்து அவர் நியாயப்பிரவேசத்தைப் பின்பற்றியது தெளிவாகின்றது. இவ்வகையில் சாத்தனுர் சங்கரசுவாமிக்கும் திக்நாகருக்கும் பிற்பட்டவரென்பது நிறுவப்படும்; இதனுல் மணிமேகலையின் மேல் எல்லை கி. பி 500 என்ருகும்.

K. A. N: Colas: II edn 55

"நியாயப்பிரவேசமும் மணிமேகலை வாதமும் ஒற்றுமையுடையன எனவே நியாயப்பிரவேசம் மணிமேகலையில் இணைக்கப்பட்டிருக்க வேண்டும் அல்லது அதிலிருந்து பிரிக்கப்பட்டிருக்க வேண்டும். நாம் இன்னும் ஒரு படி முன் சென்று நியாயப்பிரவேசம் மணிமேகலையில் இணைக்கப்பட்டதென நம்பிக்கையுடன் கூறலாம்.

பற்றிப் பெரிய ஆராய்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. மணிமேகலேயே முந்தியதென்பதற்கு Dr. கிருஷ்ணசாமி ஐயங்கார் ஒரு நூலேயெழுதினர். பண்டித. குப்புசாமி சாஸ்திரியார் அவர் கருத்திற்கு மாறுபட்டார். இவற்ருல் இரண்டு நூல்களுக்குமுள்ள நெருங்கிய உறவு புலனு கின்றதென்பது உண்மை. இங்கு நமதாராய்ச்சியில் திக்நாகரின் மாணவர் தர்மபாலர் என்பவர் சாத்தனரின் சமகாலத்தவர் என்பது உறுதிப்படுத்தப்படுகின்றது. திக்நாகர் கி. பி. 4-ஆம் நூற்றுண்டவர். சாத்தனர் காவியத்தில கூறும் தர்க்கமும் நியாயப்பிரவேசமும் நூற் றுக்கு 80-பங்கு ஒற்றுமையுடையனவாகும். டாக்டர் ஐயங்காரவர்களும் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியாரும் சிலப்பதிகாரம் மணிமேகலே ஆகியவற்றைக் கடைச்சங்கத் துக் கி. பி. 2-ஆம் நூற்றுண்டிற்குரியவாகக் கருதலால் மணிமேகலேயைக் கி. பி. 4-ஆம் நூற்றுண்டின் நியாயப் பிரவேசத்திற்கு முந்தியதெனக் கூறவேண்டிய கட்டாய மேற்பட்டது. அனேவரும் இருநூல்களும் ஒன்றேயெனக் கூறுதலில் மாறுபடவில்லே. மூலத்திலும் கூறுமுறையிலும் அங்குமிங்கும் ஓரிரு வேறுபாடுகளும் மாறுபாடுகளும் மணிமேகலேயில் இருப்பின் அவற்ருல் இரண்டும் வேறெ னக்கூறிவிடவியலாது. தமிழில் வழிநூலென்பது முதல் நூலினின்று வேறுபட்டிருப்பதேயாகும்; ஆனுல் அடிப்படை மட்டும் மாறக்கூடாது. இவ்வகையில் மணிமேகலே நியாயப்பிரவேசத்தைப் பின்பற்றுகிறது.

வேறுவகைகளாலும் மணிமேகலே ஐந்தாம் நூற்றுண் டிற்குரியதெனத் தெளிவுபடுத்தப்பட்டால் Dr. ஐயங்கார் போன்றவர்கள் மணிமேகலே பிற்பட்டதென்பதனே மறுக்க மாட்டார்கள். §திக்நாகரது மாணவர் தர்மபாலர் கி. பி.

ஐந்தாம் நூற்றுண்டினராகலின் அவர் காலத்தவராய சாத்தனும் அக்காலத்தவரேயென்பது நம் கருத்தாகும். தர்மபாலர் என்ற பெயரின் தமிழ் மொழி பெயர்ப்பே அறவணர் என்பதாகும். தர்மம்-அறம்; பாலர்-வண்ணர். §தர்மபாலர் நலாந்தா பல்கலைக்கழகத்தின் தலைவரா

§ தர்மபாலர்: F. N: P. 100 'யுவான்-சுவாங்'

"மகதத்தில் பூஜ்யர் (தர்மபாலர்) ஆயிரக்கணக்கான மாணவருள் அறங்கூறிக்கொண்டிருத்தலைக்கேட்ட சாத்தி ராசிரியர் அவரைக்காண வேண்டுமெனப் புறப்பட்டார். அவர் பாடலிபுத்திரம் வந்ததும் ஹூஜர் போதிமரத்தி னடியிலிருப்பதாகக் கேட்டார். தலைநகராய (காஞ்சிட் புலோ) தர்மபாலரின் பிறப்பிடம்; அவர் உயர்பதவி யாளரொருவரின்மகன். அவர் இளமையிலேயே வளர்ச்சி யும் பொலிவுமுடைய உடலுறுப்புக்களைக் கொண்டிருந் தார். அவர்க்கு வயது வந்ததும் ஒரு அரசகுமாரியை மணம்புரிய ஏற்பாடாயிற்று, ஆனுல் மணநாளன்றுஇரவில் அவர் மனமிகக்கலங்கி புத்தர் சிலையின்முன் வழிபாடு செய்தார். அவர் வேண்டுகோட்கிணங்கி ஒரு தெய்வம் அவரைக்கொண்டுபோய் பலநூறு 'லீ' தொலைவுக்கப்பால் ஒரு மலையில் பௌத்தப் பள்ளியொன்றில் விட்டது. அவரது வருகையைக்கண்டு அங்கிருந்தவர்கள் அவரது விருப்பத்திற்கிணங்க அவரைத்துறவியாக்கிஅரசர்க்கறிவித் தனர். அரசன் அவற்குற்றதறிந்து மிக்க மரியாதைகளுடன் இருக்கச்செய்தான்."

அறவணர்: மணிமேகலை.

காஞ்சிமாநகர் சேர்குவை, அறவண அடிகள் ஆவோர் 21—153

12. அறவணர்த் தொழுதகாதை (மணிபல்லவம்)

மாதர்நின்னுல் வருவன இவ்வூர் ஏது நிகழ்ச்சிபலவுள

யிருந்தவர். நலாந்தாவிருந்த நாடாகிய அங்க நாட்டில் அறவணரிருந்தபோது, நிகழவிருந்த ஒரு பூகம்பத்தைப் பற்றி முன்னறிந்துரைத்ததாக மணிமேகலை உரைக்கிறது. கி. பி. 7-ம் நூற்றாண்டில் இவான்-சுவாங் தர்மபாலரைப் பற்றி ஒரு விரிவான குறிப்பெழுதியுள்ளார். அதனைப் படிக்கையில் அறவணரது வரலாறு நமது நினைவுக்கு

---

பாத பங்கயமலைப் பரசினர் இருவரும் 1—105
கங்கைப் பேரியாற்றிருந்துழி, மறவண நீத்த மாசறு
கேள்வி
அறவணன் ஆங்கு அவன்பால் சென்றேனை 10-56
அறவண அடிகள், நரைமுதிர் யாக்கை நடுங்கா
உரைமூதாளன் உறைவிடம் குறுகி [நாவின்
மாதவன் திருந்தடி மும்முறை வணங்கி 12—3
மக்கள் தேவர் என்றிருசார்க்கும்
ஒத்த முடிவின் ஓரறம் உரைக்கேன் —117
அறவணன்தன்பால்.. வஞ்சியில் கேட்பை 25-211
விரிதிரை வந்து வியனகர் விழுங்க, அருந்தவன்
தன்னுடன் வருந்தாதேகி

K. A. N: 32. "The Silappadikaram and Manimekalai Prove unmistakably the prevalence of Jainism and Buddhism side by side with other cults

Encyclopaedia Brittanica Vol 7—8: 'Though in all probability a Tamil of brith he declares in the openinig lines of those of his works that have been edited that he follows the tradition of the quiet minister at anuradhapura in Ceylon'

வருகின்றது. இரண்டு குறிப்புக்களிலும் அவர் பௌத்த குருவெனவும் காஞ்சியைச் சேர்ந்தவரெனவும் இலங்கையிற் பௌத்தத்தைப் பரப்பியவரெனவும் ஒரேமாதிரியாகக் கூறக்காண்கிறோம்.

மணிமேகலையில் ‡ஆபுத்திரனது வரலாறு காஷ்மீரில் ஆண்ட குணவர்மன் என்ற அரசனது வரலாற்றுடன் ஒற்றுமையுடையதாகிறது. 4—5-ஆம் நூற்றாண்டுகளில் இந்தியாவிற்கு வந்த ஹோனு-கியாத் (Honei-kiod) என்பவர் எழுதிய குறிப்புக்களில் குணவர்மனைப்பற்றிய

---

‡ குணவர்மன்: **367—431. AD. F n; Houei-kiod of 519 AD.** குணவர்மன் காஷ்மீர அரசமரபினன்; மிகச்சிறந்த அறிவும் சிந்தனையுமுடையவன். இருபதாமாண்டில் துறவு மேற்கொண்டு ஆகமங்களிலும் திரிபிடகத்திலும் ஆசிரியனென்ற தலைமைபூண்டான். அமைச்சர்கள் வற்புறுத்தியும், அவன் ஆட்சியைத்துறந்து கண்மறைவாக வாழ்ந்து இலங்கைக்கும் ஜாவாவுக்கும் சென்றான். அவன் மழையிற்சென்றால் நனைதலில்லை, சேற்றிற்சென்றால் மாசுபடிதலில்லை; அடிக்கடி அவன் புலி முதலிய விலங்குகளைக்கண்டால் அவற்றைத் தன் கையால் தட்டிக்கொடுத்துச் செல்வான்.

இக்காலத்தில் இப்-போன் கோயிலின் பிக்குணிகள் சிலர், எட்டு ஆண்டுகட்குமுன் இலங்கையிலிருந்து அக்கோயிலுக்குச்சில பிக்குணிகள் வந்ததாகவும் அதற்கு முன்பு அங்குப் பிக்குணிகளே இல்லையென்றும் இன்னும் அவர்கள் துறவுக்குரிய வயதினையடையவில்லையெனவும் அவனிடம் முறையிட்டனர்.

வரலாறு விவரிக்கப்படுகின்றது. குணவர்மன் காஷ்மீரத்தில் ஆண்டவன்; அரசைத்துறந்து இருபதாவது வயதில் இலங்கைக்கும் ஜாவாவிற்கும் யாத்திரைசென்றிருக்கிருன்.

---

A. I. C. Champa; Mazumdar; P. 27.

"ஆசிரியர் மாஸ்பரோ என்பவர் கி. பி. 380-ல் ஆண்ட பான்-ஹோன்-டாவே பத்ரவர்மன் என்பர். இது கிட்டத்தட்ட உண்மையாகலாம். இவனது கல்வெட்டுக்கள் கி. பி. 5-ஆம் நூற்ருண்டிற்குரியவாகக் கருதப்படும். பண்டைய சம்பாவின் மிகச்சிறந்த அரசருள் அவனொருவன். அவன் முழுப்பெயர் தர்மமகாராசன் பத்ரவர்மன். நாட்டினர் யாவரும் வழிபடும் சிவன் கோயிலொன்று கட்டி அவன் பெயரை நிலைநாட்டிக் கொண்டான். அவற்குப்பின் கி. பி. 413 ல் மகன் டி-டேகன் ஆண்டான். இவன்தம்பி, தாயுடன் எங்கேயோ போய்விட்டான். பன்முறை வேண்டியும் அவன் திரும்பவில்லை; எனவே மனநொந்த டி-டேகன் தன் ஒன்றுவிட்ட தம்பியிடம் அரசைவிட்டு இந்தியாவுக்குச் சென்றுவிட்டான். டிகாய் திரும்பி வந்து அரசைக்கேட்டான். கங்கைக்கரையில் தன் கடைசி நாட்களைக்கழிக்க அரசுதுறந்த கங்கராசனே டி-டேகனுகலாமென மாஸ்பரோ கூறுவார்.

அவன் இந்தியா சென்றதும் நாட்டில் உள்நாட்டுக்கலகம் ஏற்பட்டது. அதனை பான்-யாங்-மாய் (420-A.D.?) என்பவன் அடக்கியரசைப் பற்றினுன். அவன் யாரெனத்தெரியவில்லை. ஒருக்கால் அவன், பான்-ஹன்-டோ இழிகுலப்பெண்ணொருத்தியிடம் பெற்ற மகனுகலாம்."

அவன் சைசூவுக்கும் சென்றதாகக் குறிப்புள்ளது.

ஆபுத்திரன்—மணிமேகலை.

1. ஆபுத்திரன் திறமறிவித்த காதை. 2. ஆபுத்திரனோடு மணிபல்லவம் அடைந்தகாதை 3. ஆபுத்திரன் நாடடைந்தகாதை.

"வாரணசியோர் மறையோம்பாளன், ஆரணஉவாத்தி [அபஞ்சிகன்
பார்ப்பனசாலி காப்புக்கடை கழிந்து
ஆவந்தணைந்து நாவால் நக்கி நன்பால் ஊட்டி 13—3
ஒத்துடையந்தணர்க் கொப்பவை யெல்லாம்
நாத்தொலைவின்றி நன்கனம் அறிந்தபின் ...
புல்லலோம்பன்பின் புலைமகனிவனென
தக்கண மதுரைத் தான்சென்றெய்தி
ஐயக்கடிகை கையினேந்தி
யாவரும் வருகவென்றிசைத்துடனூட்டி
உண்டொழி மிச்சிலை உண்டு
ஈண்டுநீர் ஞாலத்து இவன்செயல் இந்திரன்
பாண்டு கம்பளம் துளக்கியது
மாவிதை மணிபல்லவத்திடை வீழ்த்து
தங்கியதொருநாள் தானங்கிழிந்தனன்
சாவகமாளும் தலைத்தாள்வேந்தன், ஆவயினுதித்தனன்
மழைவளம் சுரப்பவும் மன்றுயிரோம்பவும்
உயிர்க்காவலன் வந்து ஒருவன் தோன்றும்
அரசாள் செல்வம் அவன்பால் உண்மையின்
நிரைதார் வேந்தனுயினன்
தெளிந்த நாதனென் செவிமுதலிட்ட வித்து
துயர்நிலை யுலகங் காத்தலின்றி உயர்நிலை யுலகம்
மணிபல்லவம் வலம் கொள்ளுதற் கெழுந்த [மேயினை
தணியா வேட்கை தணித்தற்கரிதால்
இந்திரன் மருமான் இரும்பதி, நாகபுரமிது நன்னகராள்

ஜாவாவில் பௌத்த வளர்ச்சிக்கு இவன் மிகவும் காரண மாயவன். இவன் ஒரு இழிகுலத்தவன். சம்பா என்ற இந்தோசீனநாட்டு வரலாற்றையெழுதிய R.C. மஜூம்தார் என்பவர் பத்ரவர்மன் என்ற அரசனைப்பற்றிக் குறிக்கிருர். அவன் கி. பி. 5-ஆம் நூற்ருண்டிற்குரியவன். அவன் தர்மமகாராசன் என்ற பட்டத்தையுடையவனுகக் குறிக்கப் படுகிருன். மணிமேகலை இதேபட்டத்தைப் 'புண்ணிய ராசன்' என்கின்றது. இவ்விவரங்கள் எல்லாம் ஆபுரத் திரன் வரலாற்றினை விளக்குவனபோன்றுள்ளன. ஒரு அரசனின் வரலாருக இல்லாவிட்டாலும் ஒரேகாலத்தில் இரண்டு மூன்று அ ர ச ர து வரலாற்றையிணைத்தால் அந்நிகழ்ச்சிகள் ஆபுத்திரன் காதையாக உருவமளிக் கின்றன. சம்பு, (தீபம்) சம்பாபதி, காராளர் சண்மை, என்ற பெயர்கள் இக்காலத்து வழங்கியனவாகும். மணிமேகலை, சிலப்பதிகாரத்து இப்பெயர்கள்வருகின்றன.

நாவலந்தீவு சம்புத்தீபமாயிற்று. அந்த சம்பு என்ற பெயர் புத்தர் பிறந்த மாகாணத்திற்கு வைக்கப்பட்டது: (காராளர் சண்பை). அந்நினைவாகப் பௌத்தம் பரவிய இடங்களிலெல்லாம் இப்பெயர் பரவியுள்ளதென அறிகி ரும். இந்தோசீனுவிற்குச் சம்பாவெனப் பெயருற்றதும் இவ்வகையிலே யாகவேண்டும்.

---

பூமி சந்திரன் மகன் புண்ணியராசன் [வோன்
ஈங்கிவன் பிறந்த அந்நாள்தொட்டு
ஓங்குயர் வானத்தில் பெயல்பிழைப்பறியாது
மண்ணும் மரனும் வளம்பல தரூஉம் 24—170
ஊனுடையுயிர்கள் உறுபசியறியா
நீயொழிகாலை நின்னுடு தாயொழிகுழவிபோலக்கூவும்

முற்குறித்தபடி மணிமேகலை, காஞ்சியில் அரசாண்டவன் ஒரு சோழனெனக் குறிப்பிடுகின்றது. புறநானூற்றில் காஞ்சியின் அரசன் சோழனல்லன், ‡தொண்டைமானும்

‡ மகாவம்சம்: அத்தெய்வத்தின் ஆற்றலால் அரச குமாரியாகிய குழந்தையடங்கிய பெட்டி அலையில் அடித்துப்போகச்செய்யப்பட்டது; அதனைக்கண்ட செம்படவர்கள் அதனை ருகுண நாட்டரசனிடம் கூற அவன்வந்ததனை எடுத்துச்சென்றான்.

1. திரிலோசன பல்லவச் சோழர் B. V. K. Rao.
E. D. O. A—282

"சோழர் இடையீடு: 480—500. A.D: இதேகாலத்தில் அல்லது இதனையடுத்து பல்லவ ஆட்சிக்கு ஒரு பெரிய இடுக்கணுற்றது. இது பல்லவர்க்கோர் புதிய எதிரிகளாகிய சோழர் பல்லவ நாட்டின் வடக்கே எழுந்ததாகும். இக்காலச் சோழர் தலைவன் கரிகாலன். கடப்பையைச் சுற்றிய கிராம விவகாரக் குறிப்புக்களினால் ரேனாடு பகுதியைச்சுற்றிச் சோழராண்டதாகத் தெரிகிறது. யுவான் சுவாங்கும் சோனாடு, கடப்பை கர்நூல் கிருஷ்ணாவின் வடக்குப்பகுதிகளில் (1000-லீ) 300-மைல் தான்யகடகத்திற்குத் தென்மேற்கில் பரவியிருந்ததாகக் கூறுகிறான். இது 2400-லீ சுற்றளவுடையது; தலைநகர் 10-லீ சுற்றுடையது.

2. ‡திருவிளை: 34—2. "காடுவெட்டிய காரணக்கூறி காடுவெட்டிய சோழன், எயில் கச்சியுளானவன்."

3. P. T. S: H. O. T. 383.
"தெலுங்கு நாட்டில திரிலோசனப் பல்லவர் என்ற ஒரு அரசரிருந்ததற்குத் தக்க ஆதாரங்களிருக்கின்றன.

இளந்திரையனும் காஞ்சியில் ஆண்டிருக்கலாம். ஆனுல் அவர்கள் சோழரல்லர். இளந்திரையனைப் பீலிவளைமக னெனக்குறிக்கும் மணிமேகலை அவனைக்காஞ்சியின் அப் போதைய அரசனெனக்குறிக்கவில்லை. ஆனுல்இவர்களது மரபினன் சோழன் எனவும் மணிமேகலை, காஞ்சியரனைக் குறிக்கவில்லை. எனவே காஞ்சியையாண்ட முதல் பல்ல வனுக இருக்கலாமோ இச்சோழன் என ஆராயலாம். கி. பி. 4-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தையொட்டியாண்ட §சிவஸ்கந்தவர்மன் மணிமேகலைகூறும் தொண்டைமான் இளந்திரையனுகலாம் என அறிஞர் பலர் கூறுகின்றனர். அவன் சோழ பரம்பரையினன் என ஒப்புக்கொள்ளப் பட்டால் சிவஸ்கந்தனுக்குப்பின் ஆண்ட ஒரு (சோழ) பல்லவனுகலாம் காஞ்சியரசன். †இக்கால்க் காஞ்சியரச னெருவனைத் திருவிளையாடல் புராணம் காடுவெட்டிய சோழன் என்கிறது. திருவிளையாடல் அரசரின் கால

---

அவர்கள் கி. பி. 5-ஆம் நூற்றுண்டுத் தொடக்கத்தின ராகவேண்டும். தெலுங்குச் சோழரது கல்வெட்டுக் களில் இவர்கள் கரிகாலன் காலத்தினராகத்தெரி கின்றது. இதுகொண்டு திரிலோசன விசயாதித்தனும் கரிகாலனும் ஒருகாலத்தவராகக்கொள்ளக் கூடலாம்.''

4. T G A: The Kaveri—25 ''கரிகாலனுக்குக் காவிரிக் கரைகட்ட உதவிய சிற்றரசருள் திரிலோசனர் அல்லது முகாரி என்பவர் ஒருவராவர். இவர்கள் பல்லவ ஆட்சித்தொடக்கத்தில் தெலுங்கு நாட்டையாண்டவரா கக் கற்பனை செய்யலாம். கி. பி. 5-ஆம் நூற்றுண்டி லாண்ட திரிநயன பல்லவர், முக்கண்டி, தெலுங்குச் சோழக் கல்வெட்டுக்களில் வரும் திரிலோசனர் முத லோருள் இவர்கள் ஒருவராகக்கூடும்.

வரிசையில் இக்காடுவெட்டிய சோழன் காலமும் கி. பி. 4—5-ஆம் நூற்றுண்டேயாகின்றது.

வரலாற்றிலும் *திரிலோசனபல்லவர் என்ற தெலுங்குச்சோழர் காஞ்சியையாண்டதாக ஆந்திரநாட்டு வரலாறு கூறுகின்றது. இவர்கள் தம்மைக் கரிகாலன் பரம்பரையாகக் கூறிக்கொண்டனர். இவர்களும் இக்காலத்துத்தான் சிறந்திருந்தனர். கி. பி. 4—5-ஆம் நூற்றுண்டுகள் தமிழகத்தில் ஒரு அரசியலமைதியற்ற காலம். சோழரும், பல்லவரும், களப்பிரரும் காஞ்சிப் பகுதியை மிகுதியும் கலக்கியுள்ளனர். எனவே இவ்வரசியல் நிலையைக் குறிக்கும் மணிமேகலை ஐந்தாம் நூற்றுண்டுக்குப் பின்னதாக வேண்டுமென்பது தெளிவு.

†இக்காலத்துப் பல்லவ அரசர் பலர் பௌத்தர்களாகக் கருதப்படுகின்றனர். காஞ்சி இக்காலத்து ஒரு

---

* "Prof. Dubreuil: Pallavas 23:" "முதற் காலப் பல்லவர் அரசரல்லர். அவர் தென்னிந்தியாவுக் கெதிரிகள். அவருள் ஒருவன் தென்னிந்திய அரசகுமாரி ஒருத்தியை மணந்து தானும் அரசனுனன். இம்மணத்தில் பிறந்தவன் கந்தவர்மன். Dr. S. K. 140" இலக்கியத்துள் வரும் சோழருக்கும் நாககன்னிகைக்கும் பிறந்தமகன் காஞ்சி-அரசன் என்பதினும் வைஸ்ராய் எனலாம்; அவன் தொண்டைமானென அழைக்கப்பட்டனன்.
பரஞ்சோதி. திரு. 34—2

† R. S. Iyer - 262. P. T. S: 383. தெலுங்கு நாட்டில் திரிலோசனப் பல்லவனென்ற அரசன் ஒருவனிருந்தமைக்குத் தக்க ஆதாரங்களிருக்கின்றன.

சிறந்த பௌத்தநகரமாக விளங்கியுள்ளது. இவான்-சுவாங் போன்ருேர் இக்காலத்திய பௌத்த குருக்கள் பெண் துறவிகள், அவர்கட்குணவிடும் அறச்செயல், அவர்களின் யாத்திரை முதலியவற்றைப்பற்றி விரிவாக எழுதியுள்ளனர். ‡வின்டர்நீட்சு போன்ற மொழிநூலறிஞர் இக்கால பௌத்த இலக்கியங்களைப்பற்றிப் பேசுகையில் இந்நிகழ்ச்சிகளையே வெகுவாக வருணிக்கின்றனர். மணிமேகலையிற் கூறப்படும் சமயநிலையும் நிகழ்ச்சிகளும் அவர்கள் கூறுவனவற்றுடன் பெரிதும் ஒப்பாகின்றன எனக்காண்கையில் இந்நிகழ்ச்சிக் குறிப்பே யில்லாத சங்கநூற்காலத்திற்கு மணிமேகலையைக் கொண்டுசெல்ல முடியவில்லை. கி. பி. 6-ஆம் நூற்ருண்டின் கடைசியிலும் ஏழாம் நூற்ருண்டிலும் ஜைனம் தலைதூக்கி நின்றது. எனவே 6-ஆம்நூற்ருண்டிற்கு முற்பட்டதே மணிமேகலைக் காலமாகும்.

குறட்பாக்களை ஐயமின்றித்தெளிவாக எடுத்தாள்வது மணிமேகலையாகும். மனுநீதிச்சோழன் கதையையும் இக் காவியம் குறிப்பிடுகின்றது. எனவே இது கி. பி. 3-ஆம் நூற்ருண்டிற்குப் பின்னதென முன்பும் கூறினேம்.

அகத்தியரை அப்பெயராலேயே மணிமேகலை குறிக் கிறது. இந்நாலாஞ்சங்க காலத்தேயே (திருவிளையாட லில்) நக்கீரர்க்கு இலக்கண முபதேசித்துள்ளார் ஓரகத்தியர். இக்காலத்தையொட்டி ஒரு பஞ்சமும் கடற்கோளும் திருவிளையாடலிற் குறிக்கப்படுகின்றன.

---

(தொடர்ச்சி) Dubreuil: 16; இப்போதைக்குச் சோழர் காஞ்சியைக் கைப்பற்றின ரெனவும் கி. பி. 5-ஆம் நூற் ருண்டில் பல்லவரை வடக்கே துரத்திவிட்டன ரெனவும் கருதலாம்.

‡ பார்க்க: மணிமேகலை-பின்னிணைப்பு I-பக்கம் 35

இவ்விரு நிகழ்ச்சிகளும் மணிமேகலையிலும் குறிக்கப்படு கின்றன. அறவணவடிகள், ஆபுத்திரன் காலத்து, இந் நிகழ்ச்சிகள் ஏற்பட்டனவாக ம ணி மே க லை கூறலால் கடைச்சங்க காலத்துக் கூறப்படும் பஞ்சம் கடல்கோள் ஆயவற்றுடன் இவற்றையொன்ருக்கவியலாது.

தொண்டி என்ற துறைமுகப்பட்டினம் இக்காவியங் களுள் குறிக்கப்படலால் இவற்றின் காலத்தை கி. பி. 8-ஆம் நூற்ருண்டெனகிருர் திரு. வையாபுரிப் பிள்ளை யவர்கள். அங்கு தொண்டி பாண்டியர்க்கோ சேரர்க்கோ உரியதென்ருமல் சோழர்க்குரியதெனவும் அவர்கள் கிழக்கே அதே பெயருடையதோர் நகரிலிருந்து வந்தோ ரெனவும் குறிக்கப்படுகின்றது. பட்டும், மணப்பொருள் களும் கொண்டுவந்தனர் அவர்கள் என அறிதலாலும் 8-ஆம் நூ ற் ரு ண் டி ல் கீழ்க்கடலுக்கப்பால் சென்று சைலேந்திர நாட்டில் ஆட்சி நிறுவியவர் சோழர் என அறிதலாலும் இச்சோழரே அவர் என்கிருர் பேராசிரியர். இவ்வகையில் சைலேந்திரத்திற்குச் (சுமாத்ரா) சோழன் சீவிசயனின் படையெடுப்பை மேற்கோள் காட்டுகிருர். *வரலாற்ருசிரியர் சீவிசயன் படையெடுப்பு கி. பி. 4-ஆம் நூற்ருண்டிலேயே ஏற்பட்டதெனக்கூறலால் மணிமேகலை அந்நூற்ருண்டினையடுத்ததென்ற நம் கருத்து பொருத்தமே யாகும். 8-ஆம் நூற்ருண்டுக்குக் கொண்டுசெல்ல வேண்டுவதில்லை.

சம்பாபதிக்கோயில் ‡குச்சக்ரகுடிகையெனப்படுகிறது மணிமேகலையில். கி. பி. 6-ஆம் நூற்ருண்டில் இருந்த கூர்ச்சரர் நுண்தொழில் நுட்பமுடையராகலின் அவர்களே

---

‡ Dr. S. K. Mani 53.
*சிலப்: 10—167; மணி. 13—106.

இக்குடிலைக்கட்டியிருக்கலாமெனக் கருதுகின்றனர். இக் காவியங்கள் யவனர், மகதர் முதலோரைக்குறிக்குமிடத்து மராட்டியரையும் சேர்த்துக்கொண்டுள்ளது. மராட்டத்துக் கடுத்தது கூர்ச்சரம். எனவே கூர்ச்சரரும் நுண்தொழில ராகலாம். மராட்டரும் யவனரும் தொழில் நுட்பமுடை யோராகக் காவியங்களுள் கூறப்படுகின்றனர். கூர்சரர் என்பது தமிழில் குச்சரம் என்றுதலில் தடையில்லை.

கணபதிக்குக் கோயில் மணிமேகலையில் குறிக்கப் படாததுபற்றி முன்பும் உரைக்கப்பட்டது. சிலப்பதிகாரத் தைப்பற்றிக் கூறுகையிலேயே இரண்டு காவியங்களுக்கு முள்ள ‡ஒற்றுமை குறிக்கப்பட்டது; எனவே சிலப்பதிகாரத் தின் கி. பி. 5-ஆம் நூற்றுண்டே மணிமேகலையின் காலமுமென்பது பெறப்படும்.

---

‡ P. T. S: சிலப்பதிகாரம் கி. பி. 6-ஆம் நூற்றுண்டிற் குரியது; மணிமேகலையிலுள்ள பெயர்களெல்லாம் வடமொழிக் குரியன; ஆரியச்செல்வாக்கு மேலோங்கிய நிலையைக்குறிக்கும் மணிமேகலையின் வாதமும் புராண நம்பிக்கைகளும் அதனை 7-ஆம் நூற்றுண்டிற்குரியதாக்கும்.

பார்க்க: பின்னிணைப்பு II பக்கம் 93

# மணிமேகலை-பின்னிணைப்பு

I [குறிப்பு: கீழ்க்காணும் கி. பி. 4, 5-ஆம்நூற்றாண்டைய நிகழ்ச்சிகளாகக் கருதப்படுவன மணிமேகலையில் மிக வாகக்குறிக்கப்படுதலால் மணிமேகலை கி- பி. 5—ஆம் நூற்றாண்டிலக்கிய மென்பது தெளியப்படும்:]

"தேர கதையும் தேரிகதையும் பெரிதும் கி. பி. 5-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இருதொகுதிகளாகும்: விண்டர்-101.

ஜாதக மாலை, IV, V, VI, கி. பி. நூற்றாண்டுகள் கீத்-68

கதாவத்து 3, 5-ஆம் நூற்றாண்டுகள்: வின் - 170

சமூகத்திற்கான கதைகள் 3-5-6-ஆம் நூற்றாண்டுகள் விண்டர் - 156.

1. ஜாவாவில் பௌத்தம்: Intro. F. N. 13: மணி: 14: 103.

கி. பி. 420-ல் சங்கவர்னி என்ற இலங்கைத் துறவி யொருவர் சைனாவிற்குச் சென்று மகிஷாசக வினயத்தை மொழிபெயர்த்தார். அவரையடுத்து மிகப் பெருமை வாய்ந்த குணவர்மன் என்பவர் சென்றார். ஜாவாவில் பௌத்த வளர்ச்சிக்கு அவரே பெருங் காரணமானவர் என்பதில் ஐயமில்லை. சைனாவில் அவர் ஒரு பிக்குணிப் பள்ளி ஏற்படுத்தி இலங்கையிலிருந்து பல பிக்குணிகளை வரவழைத்து அப்பள்ளியை வளரச் செய்தார்.

R. S. Iyer. Hoi. I. 426. பாஹியான் சைனுவுக்குத் திரும்பும் வழியில் கி. பி. 414-ல் ஜாவாவில் ஐந்து மாதங்கள் தங்கினுன்.

ஜாவா: குணவர்மனென்ற ஒரு அரசத் துறவி அரசனையும் தாயையும் பௌத்தர்களாக மாற்றிய பின் கி. பி. 424-ல் சைனுவுக்குச் சென்றுன். படேவியாவில் கிடைத்த வடமொழிக் கல்வெட்டு பூர்ணவர்மன் என்பவன் அந்தணருக்கு 1000 பசுக்களை ஈந்தது பற்றிக் கூறுகிறது. அது கி. பி. 5-6-ஆம் நூற்றுண்டையதாகலாம்.

"பத்ரவர்மன் (38-413) தர்ம மகாராசனென்ற பட்டமுடையவன். அவன் மகன் கங்கராசன் வட இந்தியாவுக்குச் சென்று கங்கையின் காட்சிகளைக் கண்டின்புற்றுன்"— PP - 436.

2. "அந்தரம் ஆறு ஆறைந்து யோசனை
தென்திசை மருங்கில் சென்று" :மணி. 6-911

"அந்நாட்டுமக்கள் அடிக்கடி மனிதர் பறந்து வருதலையும் இந்த சமயப் பள்ளியில் இறங்குதலையும் பார்க்கின்றனர். அக்கிராமத்து மக்கள் 'நீங்கள் ஏன் பறப்பதில்லை' எனக் கேட்பதுண்டு; யாங்கள் காணும் துறவிகளெல்லாம் பறக்கின்றனரே என்பர். அதற்குத் துறவிகள் எங்கள் சிறகு இன்னும் நன்றுக வளர்ச்சியுறவில்லையென்பர்." F. N. பாகியான். 401-10 A D.

"அவர்கள் சிறந்த அரமுறைக்கும் ஆசிரியர்; வானத்தில் பறக்கவும் சித்துக்க ளியற்றவும் வல்லவர்கள்."
மகா—76.

"ஏழு வயதுத் துறவி சித்தியற்றவும், ஒரு துறவி தன்னை ஆயிரமடங்காகப் பெருக்கிக்கொண்டு வானத்தில் பறக்கவும், பிரம்மலோகத்திலுள்ள 1000 தேவர்கள் சீபுத்தரை வரவேற்றுப் பெருமை செய்யவும் வின்—110

3 "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது
புனைவன நீங்கின் புலால் புறத்திடுவது
மூப்பு விளிவுடையது தீப்பிணி யிருக்கை
மக்கள் யாக்கை."

என்றவள் உரைத்த இசைபடுதீஞ்சொல்: மணி 4-115.

"மேற்கிலிருந்த பிக்குணிப் பெண்களே உரிய வயதினை அடையாதவராவர்

மணி. 26 : 68; F N. 367-431 A D.

"ஒரு செல்வனது அழகிய பெண்ணை செல்வரது குமாரரும் அரச குமாரரும் விரும்பி 'அப்பெண்ணின் எடைக்கு 8-மடங்கு பொன்னும் மேலும் மணிகளும் தருவதாகக் கேடகின்றனர் ஆனால் அவள் பௌத்தோபதேசத்தைக் கேட்டு ஒரு பிக்குணியாய் விடுகிருள்.

வின் - 105.

இவர்களுள் மிகச்சிறந்த அழகுடையளாகிய பிக்குணி சுபா என்பவள் ஒரு கொடியவனால் காமுற்றுத் துரத்தப் படுகிருள். அவள் யாக்கை நிலையாமையையும் அழகின்மையையும் கூறியதுடன் கண்ணென்பது வெறுக்கத் தக்க ஒரு ஊன்பந்தெனக் கூறித் தன் கண்களுள் ஒன்றைப் பிடுங்கி அவனிடம் கொடுத்தாள். வின்-109.

4. "அமுதசுரபியொடு ஆயிழை தோன்றி
யாவரும் வருக ஏற்போர்தாம் என
ஊண்ஒலி அரவத்து ஒலி யெழுந்தன்றே
யாணர் பேரூர் அம்பல மருங்கென்"

மணி. 17—94

"நாற்பெரு வீதிகள் கூடுமிடத்தில் அறமன்றங்களைக் கட்டி மாதத்தின் 8—14—15-ஆம் நாட்களில் துறவிகட்கும் பொதுமக்கட்கும் அறமுறைக்கின்றனர். மக்கள் கூறுவதுபோலவே நாடு முழுவதிலும் 60000-துறவிகள் பொதுவம்பலங்களில் உணவு கொண்டுண்கின்றனர். அரசன் வேறு, நகரின் பலபகுதிகளிலும் மற்றும் 5—6 ஆயிரவருக்குணவளிக்கிருன். யாருக்கேனும் உணவு வேண்டின் அவர்கள் தங்கள் பெரிய பாத்திரத்தை எடுத்துக்கொண்டுபோய் உணவுபகுக்கும் இத்தகுவிடங்களில் பாத்திரம் நிறையுமட்டும் உணவு வாங்கி வந்துண்பர்." **F. N—: Fahien.**

5. "பாதபங்கயம் கிடத்தலின பாதபங்கய
மலை 10—67

இலங்காதீவத்துச் சமனொளியென்னும்
சிலம்பிணை எய்தி 28—107

இரத்தின தீவத்து ஓங்குயர் சமந்தம் 11—22

"புத்தர் இந்நாட்டிற்கு நாகரைத்திருத்த வந்தபோது தமது ஓரடியை வடக்குப்பக்கத்திலும் மற்றதை ஒரு மலையின்மீதும் வைத்தார். (குறிப்பு: ஆதம்சிகரம், சோல சுமனே; சமந்தகூடம், சமனிலா என்ற மூன்று பெயர்களை யுடையது.)

நகரின் வடக்கே பாதச்சுவடுபட்டவிடத்தில் அரசன் ஒரு தூபி (400-Cubits High) உண்டாக்கிப் பொன்ளுலும் வெள்ளியாலும் அணி செய்தான். அதனருகே அபயகிரி விகாரத்தைக் கட்டினுன். F. N. 69

"கீர்த்திமிசானராசன் பரிவாரங்களுடன் ஏறி ஆதம் சிகரத்தில் உள்ள புத்தரது பாதச்சுவட்டினை வணங்கினுன்
—இராசரத்னுகரி—92

மாலியதேவனென்ற துறவி, அரிசிதானத்தைப்பெற்று சமந்தகூடத்துச்சென்று அதனை 900-ராகதூன்களுக்குப் பரிமாறினுர் மகா—202.

6. "அந்தரம் ஆரு ஆறைந்து யோசனை"

"சிங்களம் தமாலிப்தியிலிருந்துசுமார் 700 யோசனை தூரம் என மக்கள் கூறினர். F. N. 68. Fahien-

7. "சாவக மாளும் தலைத்தாள் வேந்தன்
ஆவயிற் றுதித்தனன்" — மணி 14-104.

"போதிசத்துவர் ஒரு பெண்யானையின் வயிற்றில்:
வின் - 193.

"ஒரு துறவி மானின் வயிற்றிற் பிறந்த ஒரு குழவியைக் கண்டார்"
வின் - 147.

8. "சிமிலிக் கரண்டையன் நுழைகோற் பிரம்பினன்
நாணமும் உடையும் நன்கனம் நீத்து"
— மணி : 3-86.

"தம்மபாத விளக்கம் போன்ற மொக்கலவா என்ற துறவியின் கதை சமணத் துறவிகளிடத்தில் ஒரு கொடிய வெறுப்பினை உண்டு பண்ணுவதாகிறது. — வின் - 195.

9. "பசியினால் வாடித் தன் குழந்தையையே தின்னும் நிலையிலிருந்த ஒரு பெண்ணைத் தன் ஊனாலும் குருதியாலும் காக்க ரூபவதி என்பவள் தன் கொங்கைகளை அறுத்தெடுத்தாள். வின் - 290.

10. "உய்யானத்திடை உயர்ந்தோர் செல்லார்"
மணி - 3-52.

"நகரத்திற்குத் தெற்கே யிருந்த நந்தன உய்யானத்திற்கு அவ்வாசிரியர் சென்றார்" மகா - 90.

12. "காந்தார மென்னும் கழிபெரு நாட்டு
வடவயின் அவந்தி மாநகர் செல்வோன்"
மணி - 9; 12; 28

"பிறகு அவன் பௌத்தத்தை காஷ்மீரத்திலும் காந்தாரத்திலும் நிலைநிறுத்தினான். மகா - 80.

13. "விரைமலரேந்தி விசும்பூடிழிந்து
வந்து தோன்றிய மணிமேகலா தெய்வம்
வலங்கொண் டாசனம் வணங்குவோள்
10-35.

"கதாண்டிசாபவேமி என்ற தேவருலகில் தோன்றியதொரு பெண் தெய்வம் தெய்வீக ஆடை, மலர், மணங்கள் ஆகியவைகளைக் கொண்டு இரவில் வந்து டகோபாவில் வழிபட்டது." மகா - 157.

14. " அகத்தியன் தனது கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை "

" மஹாமுனி அல்லது புத்து என்பவரதருளால் மற்ருெரு பெரிய ஆறு சோழிகரை (Coast of Coromandal) என்ற நாட்டின் வழியே ஓடியது. இராச - 143.

15. நாகநாடாளும் இருவர் மன்னவர் ஒருவழித் தோன்றி எமது ஈதென்றே வெஞ்சமர் புரிநாள்.
மணி - 8-55.

" மே மாதம் பௌர்ணமி யன்று அவன் இலங்கை வந்து நாகர்களிடையிருந்த கலகத்தைத் தீர்த்துவைத் தான். இராச - 170.

16. பெண்டிரும் உண்டியும் : மணி: 16-80;
பெண்டிரும் உண்டியும் சிலப் - 14-39.

" ராசேந்திர லால்மித்ரா என்பவரால் விவரிக்கப் படும் தந்திரங்கள் நாளும் ஊனுணவையும், சண்டாளப் பெண்களுடன் புணர்ச்சியையும் இன்புறுதற்குரிய மந்திர தந்திரங்களைக் கூறுகின்றன. வின் - 395.

17. " காமன் " — மணி: 3-23; சிலப் - 6-2.

"புத்தரது தெய்வமாகிய வச்ரனங்கள் என்ற காமத் தெய்வம் மஞ்சுசூயின் அவதாரமாகும். அது வழிபடு வோர்க்கு ஒரு பெண்ணை எப்படி வசப்படுத்துவ தென்பது பற்றிக் கூறும். வின் - 391.

18. " சிலப்பதிகாரம் "

" ஜாதகங்களின் பெரும்பகுதி உரையும் பாட்டுங் கலந்த இலக்கிய வகையைச் சேர்ந்ததாகும்" வின்-117

19. "அவ்வரசனுக்கு ஐ ந் து மைந்தரிருந்தனர். ஒருவன் காசிக்குக் கிழக்கே அத்திபுரத்தி லாண்டான், மற்றவன் அசுவபுரத்தில் ஆண்டான். இன்னெருவன் சிங்கபுரத்தில் ஆண்டான். இராச - 151.

20. " ஆருயிர் போனல் ஆங்கது கொணர்ந்து
நின் ஆரிடர் நீக்குதல் ஈங்கெனக் காவதன்று"
— மணி - 6-158.

"அந்த கின்னரப்பெண் ஒரு அரசனல் கொல்லப் பட்ட தன் கணவனுக்காக நீண்டநேரம் அழுதுகொண் டிருந்தாள். கடைசியில் அவன் ஒரு ஆருயிர் மருந்தினல் உயிர் பிழைத்தான். வின் - 133.

21. " மணிமேகலா தெய்வம் மற்றது பொருள்
அணிநகர் தன்னை அலைகடல் கொள்கென "

" இலங்கையைக் காத்த தெய்வங்கள் சினந்து நிலத்தைக் கடல் கொள்ளுமாறு செய்தனர். துவாபர யுகத்தில் ராவணன் கொடுமையைக் கண்டு மணவூரி லிருந்து தூத்துக்குடி வரையிருந்த 25-அரண்மனைகளையும் 400000-தெருக்களையும் கடலழித்தது. தித்த ராசன் காலத்தில் ப து ந ா க மெனப்படும் 100000-ஊர் களும் 970-பரதவரூர்களும் 400-முத்துக் குளிப்போர் ஊர்களும் கடலில் மூழ்கின இராச - 191.

22. " பிறகு சிலர் அம்மனிதன் (Brachman) கடைவீதியில் வருகையில் ஒரு பசுவை அவன் பக்கமாகப் போகச்செய்து மறைந்திருந்து அவன் அப்பசுவைக் கடக்

கையில் அவனைப் பிடித்து அவனே அப்பசுவைத் திருடிய வனென அரசனிடம் கொண்டுபோய் விட அரசனவனைக் கொலை செய்துவிட்டான். இதனைக்கேட்ட அவன்*மனைவி, யான் பத்தினியாகில் இவ் (வலகம்பராசா) வரசனதாட்சி அழிகவென அலறினுள். இராச -

## பின்னிணைப்பு II.

1. நாவலந்தண்பொழில் மன்னர் சிலப். 17—3
   நாவலொடு பெயரிய மாபெரும் தீவத்து 11—107
2. கோவலன் பண்டைஊழ்வினை யுருத்தென்
   சிலப். 16—217
   ஊழ்வினை வந்திவன் உயிருண்டு கழிந்தது
   மணி. 6—152
3. விண்ணவர் தலைவனை விழுநீராட்டி சிலப். 5—168
   தேவர்கோற் கெடுத்த தீவகசாந்தி மணி. 2—2
4. பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
   பால்வகை தெரிந்த பகுதிக்கு தோற்றத்து வேறு
   வேறு கடவுளர் 5—170
   நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலா
   பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீறாக 1—49
5. கூலம் குவித்த கூலவீதியும், காழியர் கூவியர்கள்
   கள்நொடையாட்டியர்
   மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப்பகருநர்
   பாசவர் வாசவர் பல்நிணவிலைஞர்
   கஞ்சகாரரும் செம்பு செய்குநரும்
   மரங்கொல் தச்சரும் கருங்கைக் கொல்லரும்
   கண்ணுள் வினைஞரும் மண்ணீட்டாளரும்

துன்ன காரரும் தோலின் துன்னரும்
சூதர் மாகதர் வேதாளிகரொடு   சிலப். 5—24
பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர்
கள்நொடையாட்டியர் காழியர் கூவியர்
பாசவர் வாசவர், செம்பு செய்குநரும் கஞ்சகாரரும்
மரங்கொல் தச்சரும் மண்ணீட்டாளரும்
தோலின் துன்னரும் துன்ன வினைஞரும்
சூதர் மாகதர் வேதாளிகர் மறுகும்.   மணி-28-31

6. வெள்ளிடை மன்றமும் இலஞ்சி மன்றமும்
கல்நின்ற மன்றமும், பூதசதுக்கமும், பாவை மன்ற
மும்   5-117
வாகை மன்றமும் வெள்ளில் மன்றமும்
வன்னி மன்றமும் இரத்தி மன்றமும் வெள்ளிடை
மன்றமும்   6-83

7. நாற்பால் பூதமும் 22-108: வருணக் காப்பிலள்

8. இந்திர விகாரம் ஏழுடன் போகி   1-14
இந்திர விகாரம் ஏழும்   26-55

9. சிந்தை விளக்கின் தெரிந்தோனுயினும்   10-167
சிந்தா விளக்கின் செழுங்கலை நியமம்   13-106

10. நால்வகை தேவரும் மூவறு கணங்களும்   5-176
நால்நால் வகையின் உருப பிரமரும்   6-177

11. ஐப்பெருங் குழுவும் எண்பேராயமும்   5-157
ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும்   1-17

12. வச்சிர நன்னுட்டுக் கொற்றப் பந்தரும்
மகத நன்னுட்டுப் பட்டிமண்டபமும்
அவந்தி வேந்தன் தோரண வாயிலும்   5-100
மகத வினைஞரும் அவந்திக் கொல்லரும் யவனத்
தச்சரும்   10-107

13. தெய்வமால்வரைத் திருமுனி 3-3. ஓங்குயர் மலயத் தருந்தவன் 1-3.

14. சாபம் நீங்கிய மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர் 3-34
உருப்பசி முனிந்த 24-14

15. செருவெங் காதலின் திருமாவளவன் 1-29
மன்னன் கரிகால் வளவன் 1-39
16. மறவுரை நீத்த மாசறு கேள்வியர் 10.56
மறவணம் நீத்த மாசறு கேள்வி அறவணன் 10-57

17 ஆர்த்த கணவனகன்றனன் தீர்த்தத்துறை படிவேன்
காவிரியாடிய வடமொழி யாளரொடு வருவேன்

18. அந்தரம் ஆருப் படர்வோர்த் தொழுது 10-212
விஞ்சையன் போயினன் விலங்குவிண் படர்ந்தென்

19. அரும்பெறல் புதல்வனை ஆழியில் மடித்தோன் மகனை முறைசெய்த மன்னவன் 22-210

20 தூங்கெயி லெறிந்த சோழன் 29-16
தூங்கெயி லெறிந்த தொடித்தோட் செம்பியன்

21. ஆடித்திங்கள் பேரிருள் பக்கத்து, அழல்சேர் குட்டத்து அட்டமி, வெள்ளிவாரம் 23—133
இருதிளவேனில் எரிகதிர் இடபத்து, ஒருபதின் மேலும் ஒருமூன்று 11—40

22. பெண்டிரும் உண்டியும் இன்பம் 15—39
பெண்டிரும் உண்டியும் இன்றெனின் 16—80

23. சிறைபடு கோட்டம் சீமின் 23—126
சிறையோர்கோட்டம் சீத்தருள் நெஞ்சத்து 19–157

24. கலிங்கநன்னாட்டு சிங்கபுரத்தும் கபிலபுரத்தும் வசுவும் குமரனும் 2—138

## ஆரும் நூற்ருண்டு

### இறையனுர்அகப்பொருள் உரை.

நான்காஞ் சங்கத்திருந்த நக்கீரரே அகப்பொருளுக்கு உரைகண்டவர் என்பதில் ஐயமில்லே. ‡ஐந்தாம் பாடல் உரையினே நம்பி திருவிளேயாடல், சங்கத்தார் வியந்து பாராட்டியதாகக் கூறுகின்றது. கல்லாடமும், சங்கத்திருந்த நக்கீரரே உரையெழுதியதாகவே கூறுகின்றது.

ஆனுல் அகப்பொருள் மூலம், இறைவனுல் மூன்ருஞ் சங்கத்துச்செய்யப்பட்டதாக உரைகூறும். எனவே நூற் காலமும் உரைகாலமும் வேறு வேருனவை. திருக்குறள் பற்றியும் இவ்வாருன நிலேயுண்மையைக் கண்டோம். நூல் கடைச்சங்கத்திறுதியில் 3—4-ஆம் நூற்ருண்டு களில் இயற்றப்பட்டிருக்கலாம். ஆனுல் உரை 6-ஆம் நூற்ருண்டில் இச்சங்கத்தியன்றிருக்கலாம். நூல் இறைவ னுலேயே ஆக்கப்பட்டதென்ற கற்பனே ஆராயத்தக்க தாகும். கோயில் அலகிடுவோனுல், கர்ப்பக்கிரகப் படியின் கீழிருந்தே மூலப்பிரதி எடுக்கப்பட்டது என்ற குறிப்பிலிருந்து நூல் அக்காலத்தியற்றப்பட்டிராது என்பது உணரப்படலாம். தேவார ஏடுகளேப்போல ஓரிரு நூற் ருண்டுகட்குப்பின் காணப்பட்டதாகலாம்.

---

‡ நம்பி: 16: சங்கப்பலகை கொடுத்தது—13
‘சயமுறுகீரன் செப்புவானென்றனித் தமிழிற்
செயிரறும் ஐந்தாம் பனுவலுக்கொப்புச் செப்புதற்கரிது’

இவ்வுரையிலும் ஒரு பஞ்சம்பற்றிய குறிப்புவருகிறது. மணிமேகலையிற் குறிக்கப்படும் பஞ்சமும் இதுவும் ஒன்ருகலாம். கி. பி. 5-ஆம் நூற்ருண்டில் குலபூடண பாண்டியன் காலத்தே இது ஏற்பட்டதாகத் திருவிளையாடல் கூறும். தொல்காப்பியத்தில் அறம் பொருள் இன்பம் என்ற முப்பேறுகளைப்பற்றியே பேசப்படுகின்றது. திருக்குறளும் முப்பாலே பேசுகின்றது. ஆனல் †அகப்பொருளுரை 'வீடு' அவற்றுள் நான்காவதென இணைத்துப் பேசுகின்றது. இவ்வாறு வீடுபற்றித் தனியே பேசுதல் இச்சங்ககால வழக்காகும். மற்றநூல்களிலும் இவ்வழக்கு வெகுவாக விரிக்கப்படுகின்றது. திருவிளையாடலிலும் அறமுதல் நான்கும் உபதேசித்த படலமொன்றுள்ளது. திருவிளையாடல் நிகழ்ச்சிகட்குரிய காலம் இதுவேயென முன்புமுரைக்கப்பட்டது. அறமுதல் நான்கும் நூற்பயன் என்பது இக்காலக்கருத்து. கடைச்சங்கவிலக்கணங்களுள் நூல்கள் முதல், வழி, சார்பு என மூன்றே பேசப்படும். §ஆனல் நக்கீரர் தம் உரையில் (பாயிரம்) எதிர் நூலெனப் புதியதொன்றைக் கூறுகிருர்.

அர்த்த சாத்திரத்திலும் மனுவிலும் எண்வகை மணங்கள்பற்றிப் பேசப்படுகின்றது. அவற்றுள் கந்தர்வம் என்பது தமிழில் களவியற்கிணையாகுமென இறையனுர் நூல் முதற் சூத்திரம் கூறுகிறது. கடைச்சங்கப்பாடல் களில் இவற்றிற்குரிய குறிப்பேதுமில்லை.

சாதவாகனம் இளந்திரையம்பற்றிய குறிப்பு முதலில் இவ்வுரையிலேயே கிடைக்கின்றது. இந்நூல்கள் கி. பி. 4-ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தவாகலாம். மேற்கூறிய குறிப்புக்கள் இவ்வுரையை கி. பி 4-ஆம் நூற்ருண்டிற்குப்

---

§ சூத்திரம் 1-10; அறமுதல் நான்கும்பெற-கல்லாடம் 65

பின்னதாக்குகின்றன. எனவே ‡இச்சங்கத்திற்குரியது இவ்வுரையென்பதுணரப்படும்.

உரையிடையிட்ட பாட்டுடைச்செய்யுட்கள் தோன்றிய காலமிது. உரைநூல் இஃதொன்றே தோன்றியதெனினும் ஒப்பற்றதாய்விட்டது. தெளிந்த இனிய மிடுக்குடைய நடை. முதலிரண்டு மூன்று சூத்திர உரைகள் இன்றுவரை உரைநடை நூல்களிலேயே இதனைச்சிறந்ததாக்கிவிட்டன. மூலம் அகப்பொருளைப் பேசுகிறது; உரை வீடுபேற்றை அதனில் இணைக்கிறது. கடவுள் வீடுபேறு பற்றிய உணர்ச்சி வளர்ந்த காலம். பழைய அகத்தையும் புதிய கடவுளியலையும் விட்டு விடாமல் ஒன்றுகப் பிணைக்கிறது உரை. முச்சங்கவரலாற்றினை இணைத்ததொன்றே இதன் சிறப்பிற்குப் போதுமானது. இவ்வகையிற் சிறந்த வரலாற்றிற்கும் இந்நூலுதவுகின்றது.

## திருமுருகாற்றுப்படை

கடைச்சங்க நூல்களுள் வையாமல் பதினோராந் திருமுறையுட் சேர்த்தமையால் கடைச்சங்கத்திற்குப்பின்னதெனவும் அத்திருமுறையில் இச்சங்கத்தைச் சேர்ந்த கபிலதேநாயனுர் பரணதேவநாயனுர் ஆகியோர் பாடல்களுடன் முருகாற்றுப்படையை வைத்தமையால் இது நான்காஞ் சங்கத்திற்குரியதே என்பதும் உணரப்படும்.

பத்துப்பாட்டு ஏட்டுச்சுவடிகளில் திருமுருகாற்றுப்படை காணப்படுவதில்லை. பிற்காலத்திலேயே இதனை இணைத்திருக்கவேண்டுமென ஆசிரியர் கருதுகின்றனர். திருவிளையாடல் முதலியனவும் முருகாற்றுப்படையைப்பற்றி

---

‡ சீனி. வேங்கடசாமி: நரசிம்ம வர்மன் 'இலக்கியம்'

ஒன்றும் கூறவில்லை. ஆனால் பத்துப்பாட்டில் கடவுள் வாழ்த்துப்போல இதனைப்பிற்காலத்தார் முதலில் இணைத் தமையால் சங்கநூல்களுக்குக் கடவுள் வாழ்த்திணைத்த 5-ஆம் நூற்றாண்டாக இந்நூலும் ஆகலாம் எனக்கருத இடமுண்டு. பத்துப்பாட்டிலுள்ள மற்ற ஆற்றுப்படை களைப்போலன்றி முருகாற்றுப்படை அடியாரொருவரை இறைவனிடம் ஆற்றுப்படுப்பது புதியமுறையெனப்பலரும் கூறுவர். †இவ்வகையான பாடல் ஒன்று 11-ஆம் திரு முறையின் நக்கீரரது திருவலஞ்சுழி மும்மணிக்கோவை யில் காணப்படுதலால் முருகாற்றுப்படையைப் பாடிய வரும் இவரேயாகலாம் எனக்கருத இடமிருக்கிறது. காளி தாசன் குமாரசம்பவம் எழுதிய காலமும் இதுவாகும். பத்துப்பாட்டோ முருகாற்றுப்படையோ கடைச்சங்க நூல் களாக நக்கீரர் கூறவில்லை.

‡பரங்குன்றம், ஆறுமுகம், ச துக்கம் சந்திகளில் முருகவழிபாடு ஆகியவை பரிபாடலிலும் முருகாற்றுப்படை யிலும் ஒரேமாதிரி குறிக்கப்படுகின்றன. எனவே இரு நூல்களும் அண்மைக் காலத்தவாகலாம். §நாட்டில்

---

† கோவை-13. "நெறிதரு குழலி விறலியொடு புணர்ந்த
செறிதரு தமிழ்நூல் சீறியாழ்ப் பரண
பொய்கையூரன் புதுமணம் புணர்தர
மூவா மூன்றுபயன் பெற்றனமே, அவன்
வானரமகளிர் வான்பொருள்பெற்றனே'

‡ முருகாற்றுப்படை வரி: 103; 107; 225.

§ P. T. S: 537: நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம், சிறுபாணாற்றுப்படை, முருகாற்றுப்படை ஆகிய ஆறும் கி. பி. 6-ஆம் நூற்றாண் டிற்குரியன. ஆரியக்குறிப்புக்கள் அவற்றுள் மிகுதியாக விருப்பதால் இது புலனாகின்றது.

வழங்கும் கதைகளிலும் வரலாறுகளிலும் அன்று ஆரியச் செல்வாக்கிருந்தமை இவ்விரு நூல்களாலும் அறியப்படு கின்றது. யோகிகளின் தோற்றமும் நெறியும் அழகாக வருணிக்கப்படுகின்றன. இவை யோக சூத்திரமெழுதிய பதஞ்சலியின் காலத்தை நினைவுக்குக் கொண்டுவரு கின்றன. யோகநூலெழுதிய திருமூலர் காலமும் இது வாகும்.

## கல்லாடம்

வள்ளுவமாலையிற் பாடியவரும் கல்லாடமியற்றியவ ரும் ஒருவரேயாவர். கல்லாடம் படித்தவருடன் மல்லா டாதே என்ற பழமொழி இந்நூல் ஒரு சமயவாதம் நிறைந்த காலத்தில் தோன்றியதென்பதனைக் குறிக்கும். மணிமேகலைப் பட்டி மண்டபங்களும் சமயவாதங்களும் மிகுந்த காலநிலையை யுணர்த்துகின்றது; §நான்காஞ்சங்க வரலாற்றிற்குக் கல்லாடம் செய்வதுபோல வேறு நூல்கள் துணைசெய்வதில்லை. இவரது பாடல்கள் 11-ஆம் திரு முறையிற் சேர்க்கப்பட்டுள்ளன. கல்லாடம் விநாயக வணக்கத்துடன் தொடங்குகின்றது. †கல்லாடத்தைச் சங்கமொன்றில் படித்துக் காண்பித்ததாகவும் அதனைக் கேட்டுச் சிவன் நூறு பாடல்களுக்கும் நூறு தரம் தலை யசைத்ததாகவும் ஒரு பாடல் குறிப்புள்ளது. *காரைக் காலம்மையை இவர் தமது பாடலில் குறிக்கிறார்.

---

* கல்லாடம் 63—40 † பாயிரம்—கல்லாடம்
§ கே. எஸ். பிள்ளை II-341; மறைமலை—700

ஆசிரியர் பலர் கல்லாடத்தைக் கி. பி. 8-ஆம் நூற்ருண்டிற்கும் அதற்குப் பின்பும் கொண்டுசெல்கின்றனர். அப்படியாளுல் கல்லாடர் அப்பர் சம்பந்தர் முதலியோர் பெயரைத் தம் நூலில் குறிப்பிட்டிருக்கவேண்டும். திருவிளையாடலில், சம்பந்தருடன் பிற்காலத்துத் தொடர்பு படுத்தப்பட்ட திருவிளையாடல்களை மட்டும் கூறுகிருர். எனவே அத்திருவிளையாடல்கள் சம்பந்தக்குமுற்பட்டவை; பிற்காலத்தில் அவை சம்பந்தர் வாழ்க்கையுடன் இணைக்கப்பட்டனவாக வேண்டும்.

மாணிக்கவாசகரது திருக்கோவையை மேற்கோளாகக்காட்டுதலால் கல்லாடம் பிற்பட்டதென்ற கருத்து எழுந்தது இயல்பே. ஆனுல் கல்லாடம் பாடியது 100 பாடல்கள். அவற்றிற்கு 400-கோவைச் செய்யுட்களை மேற்கோளாகக் கொண்டதிலிருந்தே மேற்கோளிணைந்தது பிற்காலத்தில் என்பது புலனுகும்.

சங்கமரபிற்கேற்ப அகப்பொருளை ஆசிரியத்தில் மிக அழகாக 100-பாடல்களில்பாடினுர் கல்லாடர். நான்காஞ் சங்கப்பொருளமைதி, அவற்றுள் திருவிளையாடல் நிகழ்ச்சிகள் இணைந்திருந்தமையால் தெளிவுபடுகின்றது. இப்பாடல்கள் சங்கப் பாடல்களைப்போலத் தனித் தனியானவை: தொடர்பற்றவை. பாண்டிக்கோவை அசிரியர் போன்ருேரே அகப்பொருள் நிகழ்ச்சிகளைக் கோவையாக்கிப்பல நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடத்தொடங்கினர். இறையனுரகப் பொருளுரைக் கெடுத்துக்காட்டப் படும் இப்பாண்டிக்கோவையும்,மூலநூலுக்கும் உரைக்கும் பிற்பட்டது என்பது அனைவரும் அறிந்ததே. எனவே மேற்கோள் கோவைப்பாடல்கள் மூலத்துடன் ஒருகாலத் தொடர்புடையன என்பதற்குபண்டைய சான்றேதுமில்லை.

அகத்தியர் (66) ஏழிசை (63) பதினெண்மொழி (39) நாவலந்தண்பொழில் (63) நால்வகைப்பேறு (55) சமயக்கணக்கர் (65) நாரதப்பேரியாழ் (85) அறுவகைச் சமயம் ஆகிய காலக்குறிப்புக்கள் இந்நூலிற் காணப் படுகின்றன.

அகப்பொருளுரைபோல அகத்துடன் கடவுளியலை இணைத்துக்கொண்டது கல்லாடம். திருவிளையாடல்களைக் கூறிய இதுவும் நல்ல வரலாற்று நூலாகும். பரிபாடல், பதிற்றுப்பத்துப்போலப் பாடல்கள் ஆசிரியத்தில் அமைந் துள்ளன. இந்நூல்களுள் அகவியலினும் கடவுளியலே மேம்பட்டு நிற்பது. சமயவளர்ச்சிக்கென ஏற்பட்டசங்கத் தினின்றும் எழுதியவாகலின் கடவுளியலே மேம்பட்ட தியல்பேயாகும். அகவியல் அதற்குத் துணையாமளவே யாகும்.

## கபிலதேவர்; பரணதேவர்

11-ஆந்திருமுறையில் நக்கீரர் கணபதியை பாடாமை யின் அவர் கபில பரணதேவர்கட்கு சிறிது முற்பட்டவர் என்பது புலனுகும். கி. பி. ஐந்தாம் நூற்ருண்டுக்கடைசி யிலும் இருந்தவராவர். நக்கீரர் செங்கண்ணுனைக்கூறு கிருர். கபில பரணதேவர்கள் செங்கண்ணுன் கட்டிய 70-கோயில்களில் சுமார் 40-கோயில்களைப் பாடுகின்ற னர். அவர்கள் பாடாத மற்ற 30-கோயில்களைக் கட்ட செங்கண்ணுன் கபில பரணர்க்குப்பின்பும் வாழ்ந்திருக்க வேண்டும். எனவே நக்கீரர், கபில பரணர் ஆகிய அனைவர் காலத்தும் அவன் விளங்கியிருக்க வேண்றிம். மணிமேகலை ஐந்து சமயங்களையே பேசுகின்றது. ஆனல்

இவர்களது பாடல்கள் †அறுவகைச் சமயங்களைப்பற்றிப் பேசுகின்றன. இவ்வளர்ச்சி மணிமேகலைக் காலத்திற்கும் பிற்பட்டதாகலாம்.

இக்கபில பரணதேவர்கள் நக்கீரர் ஆகியோரைப் பலர் கி. பி. 12-ஆம் நூற்ருண்டிற்கெல்லாம் கொண்டு செல்வர். இதற்கு எவ்விதத்துணையோ அடிப்படையோ இல்லை. சோழர் கல்வெட்டுக்களிலோ அக்கால இலக்கியங்களிலோ இதற்குக் குறிப்பில்லை. ஒன்பதாந்திரு முறையாசிரியர் "10-ஆம் நூற்ருண்டிற்குரியவர்கள்" மூவரைத்தம்பாடலுள் குறிப்பதுபோல இவர்கள் குறிக்க வில்லை. ஆனல் தமக்கு முற்பட்ட நாயன்மாராகக் கண்ணப்பர், கோச்செங்கணன் முதலியோரைக்குறிப்பதி லிருந்து இவர்கள் மூவர்க்கு முற்பட்டவரேயாக வேண்டும். இது வெண்பாவும் ஆசிரியமும் இணைந்த காலமெனவே இவர்களது பாடல்கள் இரட்டைமணிமாலைகளாகவும் மும்மணிக்கோவைகளாகவும் அமைந்தன.

## காரைக்காலம்மையார்

மணிமேகலையைப்போல காரைக்கால் அம்மையாரும் சமயவளர்ச்சியின் பொருட்டுத் துறவு பூண்ட சைவத் துறவி யெனலாம். நிலையாமையையும் யாக்கையின் இழிவையும் தமது பாடல்களில் மிகத் தெளிவாகப் பாடுகிருர்.

வெள்ளியம்பலத்துத் திருநடம் கண்ட பதஞ்சலியின் காலம் இது. அம்மையாரும் இறைவன் கூத்தினைத்

---

† கல்லாடர்; வள்ளுவமாலை; பரணதேவர்—XI-ம் திருறை-52. ஆறுசமயமும் கண்டவர் கண்டிலர்-திருமூலர்

திருவாலங்காட்டிற் கண்டார். பதஞ்சலியை இவர் பாட லிற்குறிக்காமையால் அவர்க்கு முற்பட்டவர் என எண்ண வேண்டியுள்ளது. நக்கீரர் முதலோரும் அம்மையைக் குறிக்காமையையும் கருதவேண்டும். கண்ணப்பரையும் அம்மையார் குறிக்காமையால் அவர் அம்மையாருக்கும் முந்தியவராகலாம். முதல் நாயனுர் அவரே யென்பது அனேவர் கோட்பாடுமாகும்.

அம்மையாரது பாடல்கள் ஆண்டாள் பாடலின் உருக்கமும் ஈடுபாடுமுடையன. அப்பன்ஆடுங் காட்டு வருணனை மணிமேகலையில் சக்கரவாளக்கோட்டத்தையும் பேய்கள் கலிங்கத்துப்பரணிப் பேய்களையும் நினைவுறுத்து கின்றன. வருணனைகள் அளவும் செம்மையுமுடையன. இறைவன் ஆட்டத்தைப் படிக்கையில் ஆடலை நேரில் காணும் உணர்ச்சி பொங்கியெழுகின்றது.

## பாரதம் பாடிய பெருந்தேவனுர்

இச்சங்கத்தின் உறுப்பினராய்த் திருவள்ளுவமாலை யில் பாடியவரும் பாரதத்தைத் தமிழ்ப்படுத்தியவரும் இவரேயாவர். அதனுற்ருன் இவர்க்குப்பாரதம்பாடியவர் என்ற சிறப்புப்பெயர் வந்தது. மாபாரதம் தமிழ்ப்படுத்தி யும் மதுராபுரிச்சங்கம் வைத்தும் என்ற வேள்விக்குடிச் சாசனக் குறிப்பில் காணும் மாபாரதம் இவராலேயே தமிழ்ப்படுத்தப்பட்டிருக்க வேண்டும். இதனையே வள்ளுவ மாலை நாமகள் பாடல் 'பாடாவிடைப் பாரதம் பகர்ந்தேன்' என்கிறது. இச்சங்கப் புரவலன் உக்கிரப்பெருவழுதி காலத்திற்ருன் †தொகைநூல்கள் பல தொகுக்கப்பட்டன.

---

† சீனி. வேங்கடசாமி: நரசிம்மவர்மன்-'தமிழிலக்கியம்' டாக்டர் எஸ் கே: 13; வள்ளுவமாலை—30

அவற்றிற்கெல்லாம் கடவுள் வாழ்த்துப்பாடி சேர்த்தவர் இவரேயாவர். அத்தொகுப்பு முயற்சியில் இவர் பெரிதும் ஈடுபட்டிருக்க வேண்டும். இவரது கடவுள் வாழ்த்துப் பாடலெல்லாம் அழகிய ஆசிரியத்தில் இயன்றன.

இவரது பாரதம் சம்புகாவிய வகையில் இயற்றப் பட்டதென அறிகிறோம். சிலப்பதிகாரமும் சம்புகாவியமே. அந்த பாரதம் இப்பொழுது கிடைக்கவில்லை. தொல் காப்பிய உரையாசிரியர்கள் பாரதம் பாடிய பெருந்தேவ னார் பாடலெனப்பலவற்றை ஆசிரியப்பாடலாகக் காட்டு கின்றனர். : (தொல்—புறத்திணை—78)

கி. பி. 8—9-ஆம் நூற்றுண்டின் தெள்ளாறெறிந்த நந்திவர்மனைப் பாடியதாக இப்போது கிடைக்கும் பாரத வெண்பாவைப் பாடியவர் வேறுனவர். அது வெண்பா வினுலாயது. எனவே இருவரையும் ஒன்றுக்கவியலாது. கடைச்சங்கத்தொருவரும் இந்நாலாஞ் சங்கத்தொருவரும், 89-ஆம் நூற்றுண்டிலொருவரும் ஆகப் பெருந்தேவனுர் மூவரென அறிஞர் ஒப்புகின்றனர்.

## திருமந்திரம்

திருமந்திரம் என்ற உயர்ந்த நூலைத் தமிழகத்திற் களித்தவர் திருமூலர்; அவர் ஒரு தாந்திரிகர். அவர் நாயன்மாருள் ஒருவராகத் திருத்தொண்டத்தொகையுள் குறிக்கப்படுகிருர். எனவே சுந்தரர் காலமாகிய கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் இறுதி அல்லது 8-ஆம் நூற்றுண் டுத் தொடக்கத்திற்கும் முந்தியவர்; அப்பர் சம்பந்தர்க்கும் முற்பட்ட நாயன்மாருள் இவரை ஆராய்ச்சியாளர் எண்ணு கின்றனர்.

அப்பரும் சம்பந்தரும் திருவாவடுதுறைக் கோயிலுக் கெழுந்தருளியபோது திருமந்திரத்தை அவர்கள் கொடி மரத்தின் கீழிருந்தெடுத்ததாகக் கர்ணபரம்பரையொன் றுள்ளது

திருமூலர் ‡பதஞ்சலியைத் திருமந்திரத்துட்குறிப்பதுடன் அவரைத்தம்முடன் பரம்பரையில் ஏழாமவராகக் 'குரு பாரம்பரியத்தில்' குறிக்கிறார். எனவே பதஞ்சலிக்கணித் தாய காலத்தவராவர். சிதம்பரபுராணம், இப்பதஞ்சலி யைக் கி. பி. 5-ஆம் நூற்றாண்டினனாய இரணியவர்மப் பல்லவனென்பான் கண்டதாகக் கூறுகின்றது.

வள்ளுவமாலையில் பாடும் மாமூலரும் இவரும் ஒரு வரேயாகலாம். *நச்சினார்க்கினியரும் யாப்பருங்கல உரைகாரரும் ஒரு மாமூலரை 'சிறந்த கவியும் யோகியும்' எனப் பாராட்டுகின்றனர். இவ்விரு தன்மைகளையு முடையோராகக் கபில பரணதேவரையும் மாமூலருடன் அவர்களது உரையிற்குறிக்கின்றனர். மூன்றுஞ்சங்கத்துப் புலவர்கள் இவ்வகை யோகவியல்புடையோர் அல்லர்.

---

‡ 'மன்றுள் தொழுத பதஞ்சலி வியாக்ரமர் என்றிவர் என்னோ டெழுவருமாமே'

* யாப்—பா—93 ; நச்சினார்—தொல்: பொருள்—வாகை—'அறிவன்தேயத்து'

"ஆரிடப்போலி: இவையெல்லாம் இருடிகளல்லா ஏனையோராகி மனத்தது பாடவும் ஆகவும் கெடவும் பாடல்தரும் கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர், இத் தொடக்கத்தார்—யாப்—வி.

நச்சினார்: யோகிகளாய் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோரும்

கபில பரணதேவருடன் எண்ணப்பட்டமையாலும் திருமூலர் கவியும் யோகியுமாதலாலும் அவர்கள் குறிக்கும் மாமூலர் திருமூலரேயாகலாம். வள்ளுவமாலையிலுள்ள மாமூலர் பாடலால் அவர் சாதி வேற்றுமையை மிகவும் கடிந்தவரென உணர்கிருேம். §திருமந்திரத்துள்ளும் சாதிகள் மிகவும் வெறுக்கப்படுகின்றன. திருமந்திரத்தின் பல தலைப்புக்களும் அதிகாரங்களும் போக்கும் குறளை ஒத்திருத்தலால் திருக்குறளை நன்கறிந்தபின் இவர் மந்திரத்தைப் பாடியிருக்கலாமெனக் கருத வேண்டியுள்ளது. ஒரே கோட்பாடுடைய முதற்பாவலர்கள் இவ்விருவருமாவர். இவ்வாறு நக்கீரர், கபிலதேவர், பரணதேவர், திருமூலர் எனச் சைவப்புலவர் பலர் இச்சங்கத்திருந்தமையாற்ருன் சுந்தரர் இவர்களைப் பொய்யடிமையில்லாத புலவரென்றனர். ‡எனவே திருமந்திர ஆசிரியர் கி. பி. 6-ம் நூற்ருண்டினரேயாவர். குறள் போன்று திருமந்திரமும் ஓர் ஒப்பற்ற நூலாகும்; அவர்க்கு முன்பும் பின்பும் அதுபோன்றதொரு நூலை யாரும் எழுதவில்லை. பதஞ்சலி யோக அறிவு பரவியிருந்தகாலம்; சித்தர் காலம் இதுவாகும்; எனவே எண் சித்துக்களைப் பற்றியும் யோக நெறி பற்றியும் ஒரு தனியறிவுடைய நூலை யளித்தார் திருமூலர். திருமூலரது சொற்கள் சுருக்கெனத் தைப்பவை, ஆணித்தரமானவை. ‘ஆரறிவாரதன் அகலமும் நீளமும்’ என்ற ஒரு தொடரைப்போல, பல பக்கங்கள் அவை யடக்கம் எழுதினேரும் இன்னும் எழுதவில்லை. சமூகத் திருத்தத்திலும் தமிழுணர்ச்சியிலும் நக்கீரரைப் போன்றவர். வள்ளுவர் அறத்தை உலகியலோடொட்டிக் கூறினுர். திருமூலர் அதனை ஆன்மவியல் யோகவியல்களுடன்

§ அந்தணரொழுக்கம்—12

‡ மறைமலை—58; கே. எஸ். பிள்ளை II 300

இணைத்துக் கூறினர் அவரது பாடல் மூவாயிரத்துள் 2000-க்கு மேல் யாவர்க்கும் இன்றும் பயன் படுவனவும் விளங்குவனவுமேயாகும். சைவ சித்தாந்தத்தின் தனி முதல் நூல் திருமந்திரம்; தமிழில் கடவுளியலுக்கும் அதுவே முதனூலாகும். சிவன், யோகம், ஆசிரியன், யோக சக்கரங்கள், சக்தி, உலகியலறங்கள் ஆயவை பற்றியனவே மந்திரப் பாடல்களின் பெரும்பகுதி யென லாம். மணிமேகலை, சிலப்பதிகாரம் இரண்டும் ஒரு மாதிரியான இரட்டை நூல்களென்றால் குறளும் மந்திர மும் அவ்வாறே 'இரட்டை'யென்னலாம்.

# கீழ்க்கணக்குகள்

## நாலடியார்

திருக்குறள் பற்றி முன்பு ஆராயப்பட்டது கீழ்க் கணக்குள் அடுத்தெண்ணப்படுவது நாலடியார். நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி எனப் பாராட்ட பப்படுகின்றன இவ்விரண்டும். குறளின் புகழ் பரவிய காலத்தில் நாலடியார் தோன்றி யிருக்கலா மென்பதே இதன் கருத்தன்றி இரண்டும் ஒருகாலத்தில் தோன்றியன என்பதன்று †

இதனை 7-8-ஆம் நூற்றுண்டுகட்குக் கொண்டு செல்வோர் உளர். முற்கூறியபடி தேவார காலத்திற்குரியது விருத்தப்பாவகை யெனவும் நான்காஞ் சங்கத்திற்குரியது வெண்பாவகை யெனவும் கொண்டால் நாலடியாரும் தேவாரத்திற்கும் முற்பட்டதேயாகும். குறள் 3-ஆம் நூற்றுண்டதாயின் நாலடியார் கி. பி. 6-ஆம் நூற்றுண்டதாகலாம்.

§ வச்சிரநந்தி சங்கத்துத்தோன்றிய நூலாக இதனைக் கருதுவர் ஆசிரியர். 8000 சமண முனிவர் ஒரு பஞ்ச காலத்தில் பிரிந்து செல்லுகையில் தாம் தாம் பாடியவற்றை விட்டுச் சென்றனர். அவற்றுள்தேர்ந்த தொகுப்பு நாலடியார் என்றதோர் கருத்துள்ளது மணிமேகலையிலும் கீழ்க் கணக்கு நூலுள்ளும் குறிக்கப்படும் பஞ்சம் அது

---

† கே. சீ. 41—44
§ S. V: 90.; கே. எஸ். பிள்ளை—278; P.T.S: 584

வாகலாம். அப்போது வச்சிரநந்தி சங்கம் கலைக்கப்பட் டிருக்கலாம். இந்நிகழ்ச்சி கி. பி. 6-ஆம் நூற்றுண்டிறுதி யாதல் கூடும். அன்றி 8000 சமணர் கூன்பாண்டியன் காலத்தில் கழுவேற்றப்பட்டதாகக் குறிக்கப்படுகிறது. நம்பியாண்டார் பாடலுள் இதுபற்றிப் பல விடங்களில் குறிப்பு வருகின்றது. ஆக வச்சிரநந்தி சங்கம் கி. பி. 470 முதல் சுமார் 200 ஆண்டுகள் ஏழாம் நூற்றுண்டு பிற் பகுதி வரை இருந்திருக்கக்கூடும். நாலடியும் பதினெண் கீழ்க்கணக்கின் மற்றும் பல நூல்களும் அச்சங்கத்தின் பயனுதல் கூடும். பெருமுத்திரையர் என்ற குறிப்பே நாலடியார்கால ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாக நிற்கின் றது. கல்வெட்டுக்களில் இப்பெயர் 7-ஆம் நூற்றுண்டிற் குரியதாகக் காணப்படுகின்றது. ஏழாம் நூற்றுண்டி லிருந்த இவ்வினத்தரசர் ஆறும் நூற்றுண்டிலும் இருந்திருக் கலாம். பல்லவர் 6-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வளம்பெறத் தொடங்குகையில் இவர்கள் ஒளிகுன்றியிருக் கலாம் எனவே இக்குறிப்பாலேயே இந்நூல் 7-ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டதெனக் கூறிவிடலாம்

‡ 7-ஆம் நூற்றுண்டிலிருந்த பர்த்ருஹரியின் சுபா ஷிதம் என்ற நூற்பாடல்களைத் தழுவி யெழுதப்பட்டவை நாலடிப்பாடல்கள்; எனவே 7-ஆம் நூற்றுண்டிற்குப் பிற் பட்டதெனச் சிலர் கூறுவர். சுபாஷிதம் பல ஆசிரியர் களால் பல்வேறு காலத்தில் பாடப்பெற்ற பாடல் தொகுதி யாகும். பர்த்ருஹரி செய்தது, அவற்றை யெல்லாம் ஒரு நூலாய்த் தொகுத்ததேயாகும். எனவே இத்தகைய ஆராய்ச்சி பொருந்தாதென்பர் தஞ்சை சீனிவாசப் பிள்ளை

‡ கே. சீ. II 'நாலடியார்.

யவர்கள். எனவே கீழ்க்கணக்குகளுள் சிறந்த மற்றநூல்கள் தோன்றிய காலத்திற்கே நாலடியாரும் உரியது என்பதிற் குறையில்லை.

## பழமொழி:

முன்னுறையரையனார் என்ற பாண்டியர் பரம்பரையினர் ஒருவராலியன்றது இந்நூல். §கி பி. 4-5-ஆம் நூற்றாண்டதெனப் பலராலும் கருதப்படுகின்றது. திருக்குறள் சிலப்பதிகாரம் முதலியவற்றின் கருத்துக்களைப் பலவிடங்களில் எடுத்தாளுகின்றது: † மனுச்சோழன்; பொற்கைப் பாண்டியன்; தூங்கெயிலெறிந்த செம்பியன் ஆகிய பெயர்கள் சிலப்பதிகாரத்துள் காணப்படுகின்றன. "முற்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு பிற்பகல் கண்டுவிடும்" என்ற பழமொழியின் பின்னிரண்டடிகள் பிறர்க்கின்னு முற்பகல் செய்யின் என்றகுறளை அப்படியே ஆளுகின்றன. 'கடிஞையில் கல்லிடல்' என்ற தொடர் மணிமேகலையை நினைவூட்டுகின்றது. 'நாய்கவ்வின் பேர்த்துநாய் கவ்வினுரில்'-49' நரையான் புறத்திட்ட சூடு-89; ஒருவர் பொறை இருவர் நட்பு-132; மகனறிவு தந்தையறிவு-145; பள்ளி-324; அமணர்-314; இத்தொடர்கள் நாலடியார்க்கும் இந்நூற்குமுள்ள தொடர்பைக் காட்டுகின்றன. இத்தொடர்களை நாலடியார் பழமொழியினின்றும் கொண்டதென்பதைவிட இக்காலத்து இப்பழமொழிகள் நாட்டுப் பெருவழக்கிலிருந்தன என்பது பொருந்தும்.

---

§ T. V. S: HOTL of 300—600 AD.
† பாடல் 242; 76; 155

## நான்மணிக்கடிகை:

இதன் ஆசிரியர் விளம்பி நாகனார். வழுத்த வரங் கொடுப்பர் நாகர் என்ற தொடரால் இக்காலம் நாகர் வழிபாடு சிறந்ததாகவேண்டும். ஆசிரியரே ஒரு நாகர் இனத்தவர். ஏழிசை; உவாத்தி; ஊனுண்டல் செய்யாமை; தத்துவமான நெறிபடரும் என்ற தொடர்கள் இக்காலக் குறிப்புக்களாகும். தத்துவ ஆராய்ச்சியும் கொல்லாமையும் மிக்க காலமிது. † அறிஞர் இந்நூலைக் குறளுக் கடுத்த காலத்தில் வைக்கின்றனர்.

## இன்னா நாற்பது; இனியவை நாற்பது:

இன்னா நாற்பது பாடிய கபிலரே வள்ளுவ மாலையிலும் பதினோராந்திருமுறையிலும் பாடியவராகவேண்டும். இவர் நான்காஞ் சங்கப் புலவர். பிராம்மணரைப் பாராட்டுதலைத் தவிர இனியவை நாற்பதன் ஆசிரியரும் ஒரு காலத்தவரே யாகலாம். நக்கீரர் கபிலர் திருமூலர் ஆகியோரும் சாதி வேற்றுமையை வெறுத்துப் பாடியவர்கள்; அவ்வியல்பு அப்பர் முதலிய அடியாரிடம் இல்லாமையின் இவர்கள் பெயரைச் சுந்தரர் தனித்தனிக் குறிக்கவில்லை யாகலாம். எனினும் இவர்கள் சிறந்த சைவர்களாதலால் பொய்யடிமை யில்லாதவரெனத் தனியாகக் கூட்டி யிணைத்துக் கொண்டார். புத்தரும் (சாக்கியர்) வைணவரும் (பொய்கையார்) சைவரும் இச்சங்கத் துறுப்பினராகலின் இவர்கள் முற்கூறியபடி ஜைனருக்கு எதிராகச் சங்கம் நிறுவியோராவர். இக்காலத்துப் புலவர் சிவனையும் வேறுபாடின்றிப்பாடியிருப்பினும், பொய்யடிமை யில்லாத புலவருள் பௌத்த வைணவப் புலவரையும்

---

† T. V. S: Hotl of 300—600 A. D.

சுந்தரர் கருதியிருப்பாரா அன்றி சைவர்களே மட்டுமே கருதினரே என்பது பற்றி நினைக்கவேண்டும்.

## களவழி நாற்பது:

இந்நூலின் பாடல் தலைவன் கோச்செங்கணன்; ஆசிரியர் பொய்கையார். செங்கணன் வென்ற கழுமல வெற்றியைப் பாடுவது இந்நூல். நக்கீரர் § சீர்மலி சிலந்திக் கின்னரசளித்தும் எனச் செங்கண்ணன் கதை பரவியிருந்தமையைப் புலப்படுத்துகிருர். முற்பிறப்புக் கதைகள் பரவியிருந்தகாலம் இதுவென்பது மணிமேகலை யால் அறியலாம். எண்டோளீசர்க் கெழுபது மாடக் கோயில் சமைத்தவன் இவனே யாவான். 40-கோயில் களைக் கபிலபரணர் பாடுதலால் இவன் 6-ஆம் நூற்ருண் டின் பிற்பகுதியிலும் இருந்திருக்கலாம்.

இவன் சமயப்பொறையுடையவனுய்த் திருமாலுக்கும் கோயில்கள் கட்டியிருக்கவேண்டும் அதனலேயே திரு மங்கையாழ்வார் இவனைப் பாராட்டுகிருர். திருமங்கை குறிக்கும் 70-கோயில்களில் கபிலதேவரும் பரண தேவரும் சுமார் 40-கோயில்களையே குறிக்கின்றனர். மற்றசுமார் 30-கோயில்கள் திருமால் கோயில்களாகலாம். முதலாழ்வார்கள் குறிக்கும் கோயில்களுள் இம்முப்பதும் அடங்கலாம். இவ்வகையில் இந்நூலாசிரியராகிய பொய்கையார் இக்காலத்து வாழ்ந்த முதலாழ்வாருள் ஒருவராய பொய்கையாராக விருக்கலாம். நான்காஞ் சங்கத்தும் இவர் புலவராயிருந்திருக்கிருர்.

திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் கோச்செங்கணை னைத் தஞ்சை விசயாலயனுடன் ஒன்ருக்குகிருர்; அது

§ 11-திருமுறை: கோபப்பிரசாதம்

பொருந்தாது. அவன் கி. பி. 9-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவன். 7-ஆம் நூற்ருண்டுக் கடைசியில் இருந்த சுந்தரர் தொண்டத்தொகையுள் செங்கணுனைப் பாடுகிருர். நக்கீரர் கோபப்பிரசாதத்தில் இவனைக் குறிப்பிடுகிருர். ஒரே பெயருடன் இரண்டரசர் இருந்தனர் என்பதும் பொருந்தாது.

புறநானூற்றில் †செங்கணுனைப்பற்றிய பாடலொன்று காணப்படுகிறது. சாத்தனுர் பாடலைப்போலவே இதுவும் இச்சங்ககாலத்தொகைநூல் தொகுப்பின்போது இணைக் கப்பட்டதாகலாம். 40-என்ற எண்ணைக்கொண்ட பாடல் கள் இக்காலத்து மிகவுள்ளன. அவற்றுள் இந்நூலும் ஒன்று. 40—50—70—150—400 என எண்களைக் கொண்டு பாடல்களைத் தொகுக்கும் வழக்கு இக்காலத் திருந்தது.

## கார் நாற்பது

இதுவும் 40-என்ற எண்ணின் பெயருடன் இணைந் தது; எனவே ஒரு காலத்ததாகலாம். கார்காலத்தில் காமத்தைப்பற்றிப் பாடுவது இந்நூல். இதனுல் மற்ற ஐந்திணை நூல்களுடன் இதனையும் இணைக்கலாம். இந் நூலும் திருமால் புகழைப் பாடுதலினுல் பொய்கையார் காலத்தை நினைவூட்டுகின்றது ; திருமால் புகழ் பரவிய காலநிலை இந்நூல்களுட் காணப்படுகின்றது.

## திரிகடுகம்

ஐங்குரவர்; முறைசெய்யான் பெற்றதலைமை 80; உடுத்தாடையில்லாதார் நீராட்டு; விரிகடலூடு செல்வான்

---

† டாக்டர். எஸ். கே: 236: கோச்செங்கணுனும் கண்ணப்பரும் பல்லவரின் தொடக்ககாலத்திற்குரியராவர்.

அரியதுணிந்து வாழ்வார்; வெகுண்டுரைப்பான்பள்ளி (46) பிரமாணம்; வாய்ப்பகையுட் சொல்வென்றி வேண்டும் இலிங்கி; இத்தொடர்களும பொருளும் கி. பி. 5 — 6-ஆம் நூற்ருண்டிற்குரியனவாக உணரப்படும். அரசியல் நிலை அமைதியற்றிருந்தமையையும்; மணிமேகலையில் காணுமாறுபோல பட்டி மண்டப முதலியவிடங்களில் சமயவாதங்கள் நிகழ்ந்தமையையும், பௌத்த ஜைனப் பள்ளிகள் பெருகியிருந்தமையையும் இக் குறிப்புக்கள் அறிவிக்கின்றன. வெளிநாட்டார் குறிப்புக்களாலும் இக் காலத்தில் இத்தகு நிலையிருந்ததாக அறிகிறேம். இக் காலத்தில் வடக்கே தர்ம சாத்திர, கிரஹ்யசூத்திர நூல்கள் எழுத்து வடிவில் ஆக்கப்பட்டுப் பரவியிருந்தன. அவற்றிற்கும் கீழ்க்கணக்கு நூல் பலவற்றிற்கும் கருத்தொற்றுமையுள்ளது.

## சிறுபஞ்சமூலம்

பல்லவர் (98) சத்தமெய்ஞ்ஞானம் தருக்கம் சமயமே (86) பஞ்சப்பொழுதகத்தே பாத்துண்பார் (79) உடையிட்டார் புல்மேய்வார் (41) நாட்கூட்ட மூர்த்தம் கோள்யோகம்;

இத்தொடர்கள் இக்காலநிலையைக் குறிப்பனவாகும். கி. பி. 7-ஆம் நூர்ருண்டில் தோன்றிய அமரகோசத்தில் காணும் துர்நாமகன் என்றபெயர் சிறுபஞ்சமூலத்தும் வருதலால் இதுவும் 7-ஆம் நூற்ருண்டதென்பர் திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள். 7-ஆம் நூற்ருண்டில் காணப்படும் பெயர் 6-ஆம் நூற்ருண்டிலும் இருந்திருக்கலாம்.

இந்நூலுள்ளும் பஞ்சம்பற்றிய குறிப்பு வருகிறது. நாள், கோள் யோகம் என்ற பஞ்சாங்கக் குறிப்புக்கள்

வருகின்றன. மணிமேகலையிற்காணும் தருக்கம் சமயம் போன்றனபற்றிய குறிப்புக்கள் பேசப்படுகின்றன. இந் நூலாசிரியரின் பெயர் காரி. கொடைவள்ளலாகிய காரியாசான் என்பவனே இந்நூலின் ஆசிரியன் என்ப தோர்பாடல் இதனில் உள்ளது. பஞ்சம்பற்றிய குறிப்பும் இந்நூலில் காணப்படும். *திருவள்ளுவமாலையில் தனியே இரு குறட்பாடல்கள் இடைக்காடராலும் ஔவை யாராலும் பாடப்பட்டனவாக இணைக்கப்பட்டுள்ளன. இடைக்காடர் இக்காலத்து வாழ்ந்தமை திருவிளையாட லாலும் அறிகிறோம். ஔவையொருவர் குறளைச் சங்கத்தார்முன் கொண்டுவந்ததாகக் கதையொன்றுண் டெனவும் முன்பு கூறப்பட்டது. அப்படியானால் ஒரு ஔவை இக்காலத்தில் வாழ்ந்திருக்க வேண்டும். ஔவைக்குறள் என்ற ஞானநூலை எழுதியவர் இவரே யாகலாம்.

அவர் வரலாற்றில் காரியாசன் என்ற ஒரு வள்ளல் குறிப்புள்ளது. அவனே இந் நூலாசிரியனாகலாம். "பஞ்சந்தீர்மழைக்கை மாக்காரியாசான்" (98) என அவன் இங்குப் பாராட்டப்பெறுகிறான்.

‡ஔவையாரின் 'வரப்புயர' என்ற வாழ்த்துத் தொடரை நினைவுறுத்தி ஒருபாடலுள்ளது. எனவே இக் காலத்து ஔவையார் இருந்தாரென்பதற்காகவோ அன்றி இக்கதை அன்றைய வழக்கிலிருந்ததென்பதாகவோ உணரக்கூடும்.

---

* கடுகைத்துளைத்தேழ் கடலைப்புகட்டி (இடைக்காடர்)
அணுவைத்துளைத்தேழ் கடலைப்புகட்டி (ஔவை)

‡ வார்சான்ற கூந்தல் வரப்புயர வைகலும்
நீர்சான்றுயரவே நெல்லுயரும் — 46

## முதுமொழி

பாடல் வரிச்சுருக்கத்தைக் கருதியது இக்காலமென் பது குறட்பாடலாலறியலாம். ஔவையின் ஆத்திச்சூடி போல ஓரேவரியாலான பாடல்களையுடையது இந்நூல்; அமைப்பில் பழம்பாடல்களை நினைவூட்டுகின்றது. அழகிய சொற்களால் விழுமிய கருத்துக்களைத் தொகுத்துள்ளது. நன்கு பதிந்துபோன ஒழுக்க நெறிகளையுணர்த்துகின்ற இந்நூலுக்குப் பெயர் முதுமொழி எனவே புதிய கருத்துக்கள் இதனுட்புகவில்லை.

ஓதலில் சிறந்தன்றுெழுக்க முடைமை
தாரமாணுதது வாழ்க்கை யன்று
இசையிற் பெரியதோர் எச்சமில்லை.

## ஆசாரக்கோவை

கீழ்க்கணக்குள் இதுவே கடைசியாகலாம், இலக் கணம்; தக்கணை; சீயம்; அட்டமி; கல்யாணம் முதலிய புதிய வழக்குக்குள் இக்கருத்தை யுறுதிப்படுத்துகின்றன. 'தேவகுலம்' என்ற சொல் இந்நூலினும் இறையனுரைகப் பொருளுரையிலும் வழங்குதலால் காலவொற்றுமையை உணரலாம்.

## ஏலாதி

இந்நூலையியற்றியவரும் திணைமாலை 150-ஐ இயற் றியவரும் ஒருவரேயாவர்; கணிமேதாவியார் என்பது அவர் பெயர் ஐந்திணை 50—70 முதலிய நூல்களும் ஒருபொருளைப் (அகம்) பற்றிப்பேசுவனவாகும். சங்கத் திற்கடுத்த காலநூல்கள் இவையெனப் பெயர்களாலறிய லாம். ஐந்திணை 70-கணபதி வணக்கத்துடன் தொடங்கு

கின்றது. எனவே அது 6-ஆம் நூற்றுண்டிற்குரியதாக லாம். ஒரே ஆசிரியராலியன்ற ஏலாதியும் இக்காலத்த தாகும். திணைமாலை 150-முதலிய மற்ற நூல்களும் இக்காலத்தவாகவேண்டும். நாவலந்தீவு, பேர்வயிற்றுத்தீ (57) என்பன மணிமேகலையையும் ஏலாதி; திரிகடுகம், சிறுபஞ்சமூலம் என்பன, சிந்திநீர்க்கண்டம் தெரிசுக்குத் தேனளாய் என்ற வள்ளுவமாலைப்பாடலையும் நினைவூட்டு கின்றன. 30—31—32—147 ஆகிய பாடல்கள் தர்ம சூத்திரக் கருத்தொற்றுமையுடையன.

## இன்னிலை

இதனுசிரியர் பொய்கையார் என்பது. களவழி யியற்றிய பொய்கையாராகலாம். கைந்நிலை யெனவும் இதற்குப்பெயர் கூறுவர் ஆசிரியர் பலர். நாலடிநான்மணி யென்ற கீழ்க்கணக்கு நூல்களின் பெயர்க்குறிப்புப் பாடலில் ஏலாதியென்பவேயென முடித்த பிறகு 'கைந் நிலையவாங் கீழ்க்கணக்கு' 'எனப்பாடல் முடிதலால்' இன்னிலையென்ற பெயரே பொருத்தமாகும்.

அறிஞர் பலர் இவரைச் சைவரென்பர். தக்கார் வருவர் 'இடபமெனக்கொண்டுதாம்' எனவும் தென்னவன் குருகிரிய எனவும் இவர் பாடுதலால் அவ்வாறு கொள்ள வும் இடமிருக்கின்றது.

## சீவக சிந்தாமணி.

சிந்தாமணி கி. பி. 10-ஆம் நூற்றூண்டிற்குரியது என்ற கருத்தினைப்* பலர் ஒரு பழக்கத்திற்கே கொண்டு வந்துவிட்டனர். ஐம்பெருங் காப்பியங்களுள் அது ஒன் றெனக்கொண்ட மரபிலிருந்தே அக் கருத்து பொருத்த மற்றதெனப் புலப்படும். தேவார காலத்திற்கு நான்கு நூற்றூண்டு தள்ளித் தோன்றிய பாடல்களைத் (திரு விசைப்பா முதலிய) தேவாரம் என்பதில்லை. எனவே காலவொற்றுமையுங் கொண்டே சிந்தாமணி பெருங் காப்பியத்துட் சேர்க்கப்பட்டது எனக் கருதலாம்.

சிந்தாமணிக்கு முதலிலக்கணங்கள் அகத்தியமும் தொல்காப்பியமும் என்றே ‡ நச்சினுர்க்கினியர் கூறு கின்றுர். மற்றும் அவர் சங்க நூல்களுக்கும் சங்கஞ் சார்ந்த நூல்களுக்குமே உரை எழுதிய பெருமித முடை யவர்; சிலப்பதிகார முதலியவற்றிற்கு உரைகள் எழுந் தன; நச்சினுர்க்கினியர், விடுபட்ட சிந்தாணிக்குரை யெழுதினுர். அறிஞர் பலர் †இதனைச் சங்க நூலெனவே கணக்கிட்டுள்ளனர்.

---

* கே. சி. பிள்ளை; ‡ சீவகசிந்தாமணி’ கடவுள்வாழ்த்து உரை.

† Dr. Krishnasamy Iyengar; Beginnings of S. I. History, P. 162, “Tbe interval between the Composition of silappadhikaram and Chintamani was only about 60 or 70 years.

§அளவைகட்குக் கட்டுப்படாத பாடல்வகைகளைக் கொண்டது சிந்தாமணியென்பதனை நச்சினார்க்கினியர் குறிப்பர். கி. பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்திலேயே (கி. பி. 5—6-ஆம் நூற்றாண்டு) இத்தகு பாடல்கள் மிகுந்திருந்தன வென்பதனை †யாப்பருங்கல உரை முதலியவற்றால் அறிகிறோம். ஆசிரியரது வரலாற்றால்‡ அவர் மதுரைக்கும் சங்கத்திற்கும் மிகுந்த தொடர்புடையவர் எனத் தெரிகின்றது. துறவியாகிய தேவர் காமம் பற்றிப் பாடும் வல்லமையுடையரோவென ஐயுற்ற சங்கத்தார் முன்பு எழுந்தனவே நரிவிருத்தமும் சிந்தாமணியும் எனவறிகிறோம். அப்பர் தேவாரத்தில் குறிக்கப்படும் $நரி விருத்தம் இதுவே யாகலாம். சூளாமணியும் சிந்தாமணியும் ஒரே தரமும் பெருமையும் உடையவென ஜைனரால் பாராட்டபெறுவன. சூளாமணியின் *காலம்

---

§ சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துரை. "யாப்பிலும் பொருளிலும் வேற்றுமை யுடையது" செய்யுட்களின் ஓசை வேற்றுமையும் மிக்கும், குறைந்தும் வருவன.

† ஆரிடச் செய்யுள். யாப். விருத்தி. செய்யுளியல்: 93 சூத்........

‡ உ. வே. சா. பதிப்பு. சிந்தாமணி நூலாசிரியர் வரலாறு.

$ அப்பர்; V திருமுறை; எரிபெருக்குவர்.......
நரிவிருத்தமதாகுவர் நாடரே
சீனி வேங்கடசாமி: நரசிம்மவர்மன் 'இலக்கியம்'
"அப்பர் சுவாமிகள் நரிவிருத்தத்தைக் கூறுகிறபடியினாலே அக்காலத்திலேயே சிவகசிந்தாமணி இயற்றப்பட்டிருக்கவேண்டும்.

* மறைமலையடிகள்: கா.சு. பிள்ளை: இலக்கியவரலாறுII

கி. பி. 6—7-ஆம் நூற்ருண்டெடன ஓரளவு தெளிவாகத் தெரிகின்றது. எனவே சிந்தாமணியும் அக்காலத்ததே யாகவேண்டும்.

வடமொழி மகா புராணத்தில் உத்தர பாகத்தில் சீவக சரித்திரம் உள்ளது. §அதனைப் பார்த்தே சிந்தா மணிப் பாடப்பெற்றதென்பது பொருந்தாததாகும். திரு. சீனிவாசப் பிள்ளையவர்களே ஜீவகன் வாழ்ந்தது முன் னூழி காலத்திலென (கி. மு. வில்) ஒப்புக்கொள்கிருர். எல்லாக் கதைகளும் நாட்டு வழக்கில் இருந்த பிறகே இலக்கிய வழக்கில் வருகின்றன. எனவே வழக்கிலிருந்த கதையைக் கொண்டே தேவர் சிந்தாமணியைப் பாடியிருக் கலாம். உத்தரபாகமெழுதிய குணபத்திரர் காலம் கி. பி. 9-ஆம் நூற்ருண்டு. ஆகவே சிந்தாமணி 10–ஆம் நூற் ருண்டிற்குரிய தென்பது உறுதியற்ற கற்பனையாகும்.

'பின்னுள்ளோர் செய்த சிந்தாமணி முதலியனவும்' என நச்சினுர்க்கினியர் குறித்தது கடைச்சங்கத்திற்குப் பின்ஞேரையென்ப துண்மையே. கி. பி. 5—6-ஆம் நூற்ருண்டைய சான்ருேர்கள் சங்கத்திற்குப் பிற்பட்டோ ரென்பது பொருந்துவதேயாகும்.

†'வஞ்சிப்பொய்யாமொழி புகழ் திருத்தகு முனிவன்' என்பது இக்காலவாராய்ச்சிச்கு மிக்க ஒளிதருவதாகும். வஞ்சி நகரத்திற்குரிய முனிவன் என இது ஆசிரியர்க்கே பொருந்தும். தேவர், துறவு மேற்கொண்ட ஒரு சோழ வரசர்; இக்காலத்தரசர் பலர் துறவுகொண்டு இலக்கியப் பணி செய்தனர்; இளங்கோவடிகளும் சூளாமணி

---

§ சீனிவாச பிள்ளை; சிந்தாமணி காலம். Ibid
† பொய்யாமொழியார்' செந்தமிழ் Vol. V.

யியற்றிய தோலாமொழித் தேவரும் நற்சான்ருவர்; இக் காலச்சோழரும் மதுரை, காஞ்சி முதலிய விடங்களில் தங்கியிருந்துள்ளனர். தேவர், சேரர் தலைநகரில் இருந் திருக்கிருர் எனல் பொருத்தமே. கங்கர் தம்மை வஞ்சிக் குரியாராகக் கூறிக்கொள்கின்றனர். கங்கர் வரலாற் றிலும் சீவக சிந்தாமணி இயன்றது பற்றிய குறிப்பு வருகிறது. பொய்யாமொழி புகழ் என்பதில் பொய்யா மொழி திருக்குறளைக் குறிக்கும்; அப் புலவரைக் குறிக் காது. பொய்யாமொழியில் கற்றுப் புகழ்பெற்ற; அன்றி பொய்யா மொழியைப் புகழ்ந்த முனிவன் என்ருகும். பெருங்காப்பியங்களுள் தேவரைப போல மிகுதியாகக் குறளை எடுத்தாண்டவர் யாருமில்லை. சிலம்பு, மேகலையுள் ஓரிரு குறள்களே குறிக்கப்படுவன. இது பொய்யா மொழிப் (குறள்) புகழ் ஓங்கிய காலம்.

அன்றி, பொய்யாமொழி என்பது புலவராயின் அவர் வஞ்சிக் குரியரென்ற குறிப்பில்லை. சோழ நாட்டிற்கும் தொண்டை நாட்டிற்கும் உரியரென்ற குறிப்புக்களே உள்ளன; பாண்டிமாநகர்க்குப் போயிருக்கிருர். பொய்யா மொழிப் புலவர் †சங்கப்புலவர் சிலைகளுடன் பேசினுரே யன்றித் தேவரைப்போலச் சங்கப் புலவருடன் நேரே உறவு கொண்டவரல்லர். சங்கமொன்றில்லாத போது பாண்டியன் துணையுடன் அதனை மீண்டும் தோற்றுவிக்க முயன்று பின் பாண்டியனுடன் பிணங்கி மதுரையைவிட் டகன்ருர் என்றே குறிப்புக்கள் உள்ளன.

இவர் வஞ்சிக்குரியவராஞல் சிந்தாமணியைக் குறிக் கும் 'கங்கர் வரலாறு' இவரையும் இவரது நூல்களையும் குறித்திருக்க வேண்டும்; அப்படியில்லை. மற்றும் தஞ்சை

† செந்தமிழ் V;

வாணன் கோவை பாடிய பொய்யாமொழியார் காலம் கி. பி. §13-ஆம் நூற்ருண்டென்ற கருத்து வேறுள்ளது. அப்படியாயின் சிந்தாமணி 13-ஆம் நூற்ருண்டிற்குப்போக வேண்டும். மற்றபடி 9-ஆம் நூற்ருண்டில் சங்கமிருந்தது, அதன் தொடர்புடையதாகலா மெனக் கற்பனை செய்வ தெல்லம் ஆதாரமற்றனவாகும்.

மற்றும் பொய்யாமொழி கங்கவரசன் சத்திய வாக்கி யனைக் குறிக்குமானல் கங்கர் வரலாற்ல் அவ்வாறு தொடர்புகாட்டி யொன்றும் எழுதப்படவில்லை. அவ் வரலாறு திருக்குறளாசிரியர்க்கும் பல்லவர்க்கு மிருந்த தொடர்பைக் குறிப்பதனை முன்பு எடுத்துக் காட்டினேம்; அவ்வாறிதற் கொன்றும் குறிப்பில்லை.

இதனை விட்டுப் பொய்யாமொழிக்குப் பெயர்ப்பு சத்திய வாக்கியன். ‡அப்பெயருடைய கங்கவரசன் கி. பி. 908-950-இல் ஆண்டான். எனவே சிந்தாமணி அவன் காலத்ததென்பதெல்லாம் பொய்யாமொழி யென்பவர் யார் என்பதனை மெய்ப்பித்த பிறகு கொள்ளவேண்டிய முடிபாகும்.

†சிந்தாமணியும் சூளாமணியும் ஒரு காலத்தன; முன் பின் இயற்றப்பட்டன வென்பது பலர்க்கும் உடன்பாடா கும். சூளாமணி காலம் தெளிவாதலால் சிந்தாமணியும் அதனையொட்டியதேயெனக் கொள்ளலாம். சூளாமணி, செழியன் சேந்தன் காலமாகிய கி. பி 7-ஆம் நூற்ருண்

---

§ T. V. S. தமிழ் வரலாறு 13, 14-நூற்.
‡ செந்தமிழ் V; கே. சீ. பிள்ளை; தமிழ்வரலாறு II
† மயிலைநாதர் - 48. சிந்தாமணி, சூளாமணி.

டெனப் பின்னர் ஆராயப்படும்; மணிமேகலைக்கும் பெருங் கதைக்கும் சிந்தாமணிக்கும் பொருள் ஒற்றுமையும் சொல் லமைதி யொப்புமையு முண்டு. உரையாசிரியர்கள் இவ்விரு நூல்களையும் தவருமல் ஒன்ருகவே குறிப்பிடுத லால் இரண்டும் ஒரு காலத்தனவாக அவர்கள் கொண் டமையறியலாகும். பெருங்கதை கி. பி. 6-ஆம் நூற்ருண் டிற்குரியதெனவே சிந்தாமணியும் இக்காலத்ததேயாக வேண்டும். வ ளை யா ப தி, குண்டலகேசி யென்ற மற் றிரண்டு காவியங்களும் சிந்தாமணியையொட்டி இயற்றப் பட்டனவாகக் கருதப்படலால் அவையும் இக்காலத்தனவே யாகலாம்.

## முத்தொள்ளாயிரம்

கி. பி. ஏழாம் நூற்ருண்டுக்கு முற்பட்டது என்பது அனைவரது கொள்கையாகும். 11-ஆந் திருமுறையிற் பாடிய நக்கீரரே இப்பாடலைப்பாடியவரென்பது அத்திரு முறையில் நக்கீரரது பாடல்களுடன் முத்தொள்ளாயிரப் பாடல்களை யொப்பிட்டுப் பார்த்தலால் காணப்படும்.

மூவேந்தரைப்பற்றிய 900-பாடலோ அன்றி ஒவ் வொருவர்க்கும் 900-பாடலோ, இப்போது கிடைப்பன 150-க்குட்பட்ட பாடல்களேயாம். பாடல்களில் நான்காஞ் சங்ககாலக் குறிப்புக்கள் பலவுள்ளன. சைவ வைணவப் பொதுமை காணப்படுகின்றது. 49-ஆம் பாடலில் பாண்டியன் மாக்கடுங்கோன் எனப்பெயராலேயே குறிக் கப்படுகிருன். இவன் காலம் கி. பி. 6-ஆம் நூற்ருண் டின் பிற்பகுதியாகும்.

செங்கணுன் காலம் இதுவெனப்பட்டது. களவழி யில் செங்கணுன் செங்கண்மால் எனவும் செம்பியன்

எனவும் குறிக்கப்படுகிருன். அப்பெயர்கள் முத்தொள் ளாயிரத்தும் காணப்படுகின்றன. எனவே செங்கணுன் காலம் இந்நூற்காலம் எனக்கருதப்படும்.

''கொய்தளிர்த்தண்டலைக் கூத்தப்பெருஞ்சேந்தன்'' எனவரும் தொல்காப்பிய மேற்கோள்பாடல் முத்தொள்ளா யிரப் பாடலேயாகவேண்டும். அதுபோன்ற பாடல்கள் அதே பொருள் சொல்லமைப்புடன் இந்நூலில் (50) உள்ளன. அவ்வாருயின் சேந்தன் காலமாகிய கி. பி. 640 முத்தொள்ளாயிரக் காலமாகவேண்டும்.

சோழருள் கோக்கோதை, மாந்தையரசன் என்ற பெயர்கள் இங்கு அடிக்கடி வருகின்றன. இக்கோக் கோதை 5-ஆம் நூற்ருண்டவனுக வேண்டும். திரு. மு. ரா. அவர்கள் மாந்தையும் மாந்தரஞ்சேரலும் 5-ஆம் நூற்ருண்டினரெனச் சேரன் செங்குட்டுவனில் கூறுகிருர். பாடல் வெண்பாவகையினது. சங்கப்பாடல்கள்போலத் தனித்தனியே பாடியவை. சங்கப்பாடல்களைத்தொகுக்கும் முயற்சி இருந்திருக்கவேண்டும். குப்தவிக்ரமாதித்தனது உச்சயினி நகரம் ஒருபாடலிற் (73) குறிக்கப்படுகின்றது.

'முத்தொள்ளாயிரமும் பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும்' என உரையாசிரியர் (பேரா-தொல்-செய்யு-551) பலர் இதனை இக்காலத்துப் பொய்கையாழ்வார் முதலோரது பாடல்களுடன் இணைத் தும் பேசுதலால் இந்நூல் கி. பி. 6-ஆம் நூற்ருண்ட தென்பது பொருத்தமாகும்.

## ஞாஞமிர்தம்

இந்நூல் கி. பி. 6-ஆம் நூற்ருண்டிற்குரியதென்பது அறிஞர் கருத்து. இதனில் விநாயக வணக்கம் கூறப்

படுகிறது. கலைமகளுக்கும் பாடலுள்ளது. 40-ஆம் பாடலில் 'யாளி கூவற்றூண்டிய காதற்காசனி; ஆதிப் புலைச்சியாகி மேதினி, இன்னிசையெழுவர்ப்பயந்தோள்' என்ற வரிகளில் திருவள்ளுவரது பிறப்பு குறிக்கப்படுவ காகக் கருதுகின்றனர். திருவள்ளுவமாலை யேற்பட்ட காலம் இது.

பசு பதி பாசம்; தனு கரண புவனபோகம் பற்றி யெல்லாம் விரிவாகப் பேசுவது திருமந்திரகாலத்தை நினைவூட்டுகின்றது. குறளின் அறத்துப்பால் அதிகாரத் தலைப்புக்களுக்கும் இந்நூலுட் கூறப்படும் தொடர்களுக் கும் ஒற்றுமையுள்ளது. நிலையாமை மிகுதியாய் பேசப் படுகின்றது. பிறவாயாக்கைப் பெரியோன், காளி முதலிய தெய்வப்பெயர்கள் சிலப்பதிகாரப்பெயர்களை நினைவூட்டு கின்றன. சொல்லமைப்பு பாடலமைப்பு ஆகியவற்றுள் மணிமேகலையை அடிக்கடி நினைவூட்டுகின்றது. மணி மேகலை 29-கதையாகிய சமயக் கணக்கர்திறம் கேட்ட காதையை இந்நூலிற்காணும் தர்க்கப்பகுதிகள் அடிக்கடி கொண்டுவருகின்றன. இயற்கை வருணனையும், தொட ரமைப்பும் அகநானூற்றைப் படித்தபின் எழுதியிருக்கலா மெனத் தோன்றுகின்றது. கடைச்சங்கப்பாடல் வரிகளும் தொடர்களும் அப்படியே ஆளப்படுகின்றன. அகத்தியர் வாரணசி ஆகிய பெயர்கள் குறிக்கப்படுகின்றன. எனவே இது கி. பி. 5—6-ஆம் நூற்றூண்டென்பது தெளிவாகும்.

## சூளாமணி

சூளாமணியும் சிந்தாமணியும் ஒருதரத்தனவாய் ஒரு காலத்தில் முன்பின் எழுதப்பட்டவை யென்பது

முன்பும் ஆராயப்பட்டது. இக்காவியத்திற்குக் காரணமாய அரசன் சேந்தன் எனப்படுகிறுன். திவாகரத்துடன் இணைத்துக் கூறப்படும் சேந்தனும் இவனேயாகலாம். 'திருமானெடுஞ் சேந்தனென்னும் கோமான் தமிழின் கிழவன்' எனப்படுகிறுன் இவ்வரசன். விசயன்கார் வெட்டி என்ற ஒரு அரசன் பெயரும் இந்நூலுடன் தொடர்புடையதா விருக்கிறது. சூளாமணி என்ற பாண்டியனும் இந்நூலுக்குக் காரணமாகப்பேசப்படுகிறுன். அவன் அவனி சூளாமணி மாறவர்வன் ஆகலாமெனக் கருதுகின்றனர். அவன் கி. பி. 6-ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஆண்டவன் மேற்குறிக்கப்பட்ட சேந்தனும் இவனுக்கடுத்த பாண்டிய அரசனேயாவான் (கி. பி. 640—670) இவ்விருவர் காலத்தும் இக்காவியவாசிரியர் தோலாமொழித்தேவர் வாழ்ந்திருக்கலாம். யசோதரகாவியம் நீலகேசி முதலிய சிறுகாப்பியங்களும் இக்காலத்தனவே யாகக்கூடும்.

கி. பி. ஏழாம் நூற்றுண்டில் பாண்டியர் சமணரைத் துன்புறுத்தவோ அடியோடொழிக்கவோ முயன்றபோது அவர்கள் கங்கநாடு சென்றிருக்கவேண்டும். அதுவரை அவர்கள் பாண்டிநாட்டில் இலக்கியப்பணி செய்துகொண்டிருந்தனர். வச்ரநந்தி சங்கத்தில் நாலடியார் முதலிய கீழ்க்கணக்குகள் இயன்றிருக்கலாமென முன்பும் கூறப்பட்டது. சூளாமணி, நீலகேசி, சிந்தாமணி முதலிய ஜைன நூல்களுங்கூட அச்சங்கத் தெழுதப்பட்டிருக்கலாம். சேந்தன் திவாகர முதலிய நிகண்டுகளும் இச்சங்க விளைவுதாமோ, ஆகலாம். அவ்வாறுயின் சிந்தாமணி முதலியன இன்னும் 40—50-ஆண்டுகள் தள்ளி 7-ஆம் நூற்றுண்டின் முற்பகுதிக்குப்போகலாம்.

## பெருங்கதை

இக்காவியம் துர்விநீதன் (கங்கவரசன்) காலத்த தென்பது தெளிவாகக் கூறப்படுகின்றது. அவன் கி. பி. 570—80-ல் ஆண்டவன். சாதவாகன அரசரிடமிருந்த குணட்டியர் என்பவர் எழுதிய பிருகத்கதையை யொட்டி இக்காவியம் எழுதப்பட்டதென்பர். சாதவாகனர் கி. பி. 3-ஆம் நூற்ருண்டு வரையிருந்தவர். எனவே இந்நூல் 6-ஆம் நூற்ருண்டதென்பது பொருத்தமே. உதயணன் கதைக்குறிப்பு மணிமேகலை முதலியபெருங்காப்பியங்களில் காணப்படுகின்றது. கதை சிந்தாமணியின் கதையை யொட்டியது. சீவகனும் உதயணனும் ஏதோ அநாதை களாய்த் தனியானதோர் இடத்தில் பிறக்கின்றனர். பல பெண்களை மணக்கின்றனர். யாழ் முதலிய கலைத்திறம் உடையராய் விளங்குகின்றனர். நூலைப்படிப்பது சிலப் பதிகாரத்தைப் படிப்பதுபோலவே இருக்கின்றது. தொடர் களும் சொற்களும் மிகுதியும் ஒற்றுமையுடையன. பரசண்டியர், வரி, அராந்தாணம், இயக்கி, விச்சாதரன் போன்ற மணிமேகலைக் காவியச்சொற்கள் பயின்று வரு கின்றன. 'தென்கடலிட்ட கழி வடகடல் நுகத்துளையிற் புகுந்தாலொப்ப' என்ற உவமை இறையனுரகப் பொரு ளுரையிலும் காணப்படுகின்றது.

துறவுமேற்கொண்ட (கொங்கு) வேளிர் அரசனெருவனே இந்நூலாசிரியராகிய கொங்குவேளிர். இக்காலத்து அரசர் பலர் துறவு மேற்கொண்டு இலக்கியப் பணி செய் துள்ளனர். இளங்கோவடிகளும் திருத்தக்க தேவரும் இதற்குச் சான்ருவர்.

உதயணன் கதையைக் கூறும் இந்நூலின் முதனூல் பாசனது வாசவதத்தம், ஹர்ஷனது ரத்னுவளி,

மிருச்சகடிகம் முதலியவெனக் கூறலால் இந்நூலின் காலம் 6-ஆம் நூற்ருண்டென்பது பொருத்தமாகின்றது. 'சீத் தலைச் சாத்தனுற் செய்யப்பட்ட மணிமேகலையும் கொங்கு வெளிராற் செய்யப்பட்ட தொடர்நிலைச் செய்யுளும் 'எனப் பேராசியர் (தொல். செய்யு. 552) இவற்றை இணைத்துக் கூறுதலால் இந்நூல் மணிமேகலைக் காலத்ததெனக் கருதப்படும்.

## முதலாழ்வார்கள்

திரு. சீனுவாசப் பிள்ளை போன்ருேர் முதலாழ்வார் களை கி. பி. 7-ஆம் நூற்ருண்டிற்காக்குகின்றனர். ஆனுல் அவர்கள் கி. பி. 5—6 நூற்ருண்டினராகலாம் என்பதற் காதாரமுள்ளது, பேய், பூதம் என்ற பெயர்களைக் கொள்ளுமுறை 7-ஆம் நூற்ருண்டிற்கு முற்பட்டதாகலாம். காரைக்காற் பேய் என்ற பெயரை நோக்கவேண்டும்.

முதலாழ்வாரும்திருமழிசையும் ஒருகாலத்தவர். திரும ழிசை குணபரன் என முதலாம் மகேந்திரவர்மனைக் குறித் தலால் முதலாழ்வார் கி. பி. 6-ஆம் நூற்ருண்டினரென அறிஞர் பலர் கருதுவர். திருமழிசைக்கு முந்தியவர்கள் முதலாழ்வார்கள்.

பேயாழ்வார் தமது திருவந்தாதி 61-ஆம் பாடலில் 'இளங்குமரன் தன் விண்ணகர்' என்பதோர் குறிப்பைத் தருகிருர். இது பல்லவ அரசனையே குறிக்கவேண்டும். இளங்குமரன் என்பது பொதுவாகாமல் ஒரு குறித்த அரசனையே கருதியதாக வேண்டும். இளவரசன் என்பதே இளங்குமாரன் என்பதாகும்

பல்லவருள் சிவஸ்கந்தவர்மனும் (கி. பி. 3-ஆம் நூற்) விஷ்ணுகோபனும் இளங்குமரன் என்ற சிறப்புப்பெய

ருடன் வழங்கப்பட்டுள்ளனர். யுவமகராசன் என்ற பெயருடனேயே சிவஃஸ்கந்தனது பட்டயங்கள் கிடைத்துள்ளன. ஆனால் அவன் காலத்தே பல்லவ ஆட்சி புதுக்கோட்டை காவிரி வரைப் பரவவில்லை; பாலாறு வரையே தான் இருந்தது. திருக்கோட்டியூர், குடந்தை முதலாமிடங்களை ஆழ்வார் குறித்தலால் இது விஷ்ணுகோபன் காலமே யாகவேண்டும். இவனும் இளவரசன் விஷ்ணுகோபனெனப் போற்றப்பட்டவன். இவன் வழியினர் பரமபாகவதரெனத் தம்மைக் கூறிக்கொண்டனர். இவர் தம் பரம்பரை, திருமாலைப் போற்றும் வழியினர் என்கிறார் ஆழ்வார்.

இவ்விடைக்காலப் பல்லவர்க்கும் கடிகைக்குமே தொடர்புமிகக் கூறப்படுகிறது. 'வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை இளங்குமரன் தன் விண்ணகர்'. இளங்குமரனதரண்மனை கடிகை எனப்படுகிறது. பரமேச்சுரன் காலத்திலன்றி விண்ணகர் எனக் காஞ்சி கோயிலுக்குப் பெயர் 7-ஆம் நூற்றாண்டிற்கு முன்பும் இருந்ததெனத் திரு. மு. ரா. அவர்கள் தெளிவுபடுத்தி யுள்ளார்கள்.

சிறந்த வைணவனாகிய சிம்ம விஷ்ணுவின் காலமாகலாமோவெனில் அவன் காலத்தே காஞ்சி தலைநகராய் விட்டது காஞ்சியென்ற பெயரை முதலாழ்வார்கள் குறிக்கவில்லை. சுற்றிய கோயில்களையே பாடுகின்றனர். மேலும் திருவேங்கடத்தையே அடிக்கடி சிறப்பித்தலால் பல்லவர் ஆந்திரப் பகுதியிலிருந்து ஆண்டகால்மாகலாமோ இது எனக்கருத இடமிருக்கிறது. முன்பும் கோச்செங்கணானைக் களவழியிற் பாடிய பொய்கையாரும் பொய்கையாழ்வாரும் ஒருவரேயாகலாம் எனக் கருதப் பட்டது.

மல்லை யென்பது மாமல்லபுரம், அது நரசிங்கவர்மன் காலத்தது எனவே, மல்லையைக் குறிக்கும் ஆழ்வார்கள் நரசிங்கனுக்குப் பிந்தியவரென்பதனைத் திரு. மு. ரா. அவர்கள் மறுத்து மல்லையென்பது வளப்பம் என்ற பொருளில் ஆழ்வார் பாடல்களில் வழங்குவதனைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிருர்:

முன்பு திருமூலரைப் பற்றிக் கூறியபடியே பொய்கையாரும் பூதத்தாரும் காரைக்காற் பேயாரும் முக்காலமும் உணர்ந்த இருடிகள் மரபில் இணைக்கப்பட்டு அவரது பாடல்கள் ஆரிடச் செய்யுட்களுக்கு யாப்பருங்கல விருத்தியில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. எனவே இவர்களும் திருமூலரும் காரைக்காலம்மையும் ஒருகாலத்தவரென உணரப்படும். இவர்களது பாடல்களை நேரே அந்தாதியெனவே உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

எனவே இவர்கள் சிம்மவிஷ்ணுவின் காலமாகிய கி. பி. 570-வரைப்பட்ட காலத்தவராகலாம் எனக்கருத இடமுண்டு. இவர்களது பாடல்கள் இக்காலத்திற்குரிய வெண்பாவினுலியன்றன. அன்பே தகளியாக அதனொளியிலிருந்தெழுதியமையால் பாடல்கள் இனிமையுடையன. வேங்கடமும் திருவரங்கமும மிகுதியாகப் பேசப்படுதலால் சிலப்பதிகார கால நினைவு வருகின்றது. காஞ்சிகூட அடிக்கடிக் குறிக்கப்படவில்லை; மணிமேகலையது பௌத்த திருப்பதியாகவே இன்னும் இருந்திருக்கிறது. இவருள் பொய்கையார் முந்தியவராகலாம்; பிரபந்த அமைப்பு இவ்வகையில் சரியாகலாம். கடைசியில் பேயார் பாடலிலேயே ஓரிரண்டிடத்துக் காஞ்சி குறிக்கப்படுகின்றது. இவர்களது பாடல்கள் சமயப்

பொதுமையுடையன. தீர்த்தகரர், சிலாதலம், வாணன் என்பன காலக் குறிப்புடையன. புலன்வென்றி, மெய் யுணர்வு பற்றிய பாடல்கள் குறளை நினைப்பிப்பன. இவர் கள் இக்கால வைணவத்தின் நக்கீர, கபில, பரணதேவ ராவர்.

## ஐயடிகள் காடவர்கோன்

ஐயடிகள் காடவர்கோன், இளம்பெருமானடிகள் அதிராவடிகள் என 11-ஆம் திருமுறையிற்பாடிய அடியார் களும் இக்காலத்தவரேயாகலாம். முதலாழ்வார்களைப் பற்றிக் கூறியபொழுது விஷ்ணுகோபன் இளங்குமரன் என்ற பட்டத்துடன் வாழ்ந்தான் எனப்பட்டது. அவனே இளம்பெருமானடிகள் ஆகலாம். அதிராவடிகளும் 6-ஆம் நூற்றுண்டினராகவேண்டும். அவர் விநாயகர் (மூத்த பிள்ளையார்) மும்மணிக்கோவை பாடியுள்ளார்.

இளங்கோவடிகள் என்ற பெயருடன் இளவரச ரொருவர் இலக்கியஞ்செய்த காலம் இது. அதிராவடிகள் இளம்பெருமானடிகள், ஐயடிகள் என்கையில் அங்ஙனேவே வருகின்றது. ஐயடிகள், சிம்மவிஷ்ணுபோன்ற ஒரு தலைமையரசனுகலாமோவெனக் கருத வேண்டியுள்ளது; ஐயென்பது தலைமை. நக்கீரரைப்போலவே இவரும் ஒரு மும்மணிக்கோவை பாடியுள்ளார். நிலையாமையையும் யாக்கையஃதிழிவையும் புலப்படுத்தும் இவரது பாடல்கள் காரைக்காலம்மையார் பதிகங்களை யொத்திருக்கின்றன.

கி. பி. 7-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியிலிருந்த முதல் பரமேச்சுரனே கல்வெட்டுக்களில் 'ஐயரடிகள்' என்ற பட்டத்துடன் அழைக்கப்படுகிருனுகலின் அவனே ஐயடி கள் காடவர்கோனெனக் கருதும் ஆசிரியர் சிலருமுண்டு.

ஐயரடிகள் ஐயடிகள் என்பது அக்காலத்துப் பெயர்களுடன் பின்சேர்த்து வழங்கும் சிறப்புப் பெயரென்பதும் கல்வெட்டால் அறியப்படும். பரமேச்சுரன் அப்பர் சம்பந்தர்க்குப் பிற்பட்டவனுகில் அவர்கள்பாடிய நூற்றுக்கு மேற்பட்ட தலங்களைத் தம் பாடல்களிற் பாடவில்லை. கபில பரணதேவர்கள் பாடிய தலங்களினும் குறைவான தலங்களையே இவர் பாடியுள்ளார். எனவே அவ்விருவர்க்கும் முற்பட்டவராகலாமெனவும் கருத இடமுள்ளது. மற்றும் பாண்டிநாட்டுத் தலங்களை அவர்தம் பாடல்களிற் குறிக்காமையால் அவர் முதல் நரசிம்மவர்மனுக்கு முற்பட்டுக் கி. பி. ஆரும் நூற்ருண்டுப் பல்லவ அரசருள் ஒருவரேயாகவேண்டுமெனக் கருதவேண்டியுள்ளது.

தாம் துறந்து மகனிடம் ஆட்சியை விட்டுச்சென்றவர் ஐயடிகளாதலால் இளம்பெருமானடிகளென்பது அவர்தம் மகனுரையே குறிக்கும் எனக்கொள்வதுமாகும். இறக்கும் நிலையில் மனிதநிலை மிகவழகாக வருணிக்கப்படுகின்றது. நாலடியார் நிலையாமையைக்கூறி ஈற்றில் அறத்தை வற்புறுத்தியது; இவர்தம் பாடல்கள் ஈற்றில் அறத்திற்குப் பதிலாக 'ஆண்டவனை' வற்புறுத்துவன.

---

S. I. I. Vol. V - 578.

# (கி. பி. 7—9: நூற்ருண்டுகள்)

## ஏழாம் நூற்ருண்டு

### சைவவைணவக் காலம்:

இந்திய வரலாற்றிலும், தமிழ் இலக்கிய வரலாற்றிலும் இம் மூன்று நூற்ருண்டுகளையும் ஒரு தனிக்காலமென்னலாம். சைவம் வைணவம் ஆகிய இரண்டு சமயங்களும் மேலோங்கிய காலம். நான்காஞ்சங்க காலத்தைப் பௌத்த ஜைன காலங்களெனில் இப்பகுதியாய காலமும் சமய வளர்ச்சிக் காலமேயாகும். இக்காலத்தில் பௌத்த மிகவும் மங்கிவிட்டது ஜைனம் பெரும் போராட்டத்திற்குப்பின் மடங்கியது. களப்பிரரும் கி. பி. 6-ஆம் நூற்ருண்டில் கங்கர், பல்லவர், பாண்டியர் ஆகிய அனைவரும் அதற்காதரவு மிகத் தந்து வளர்த்தமையால் அது அடக்குதற்கரியதாய ஒரு சமயமாயிற்று.

முன் நூற்ருண்டுகளில் துறவுநெறி யோக நெறிகள் மேலோங்கியிருந்தன. அவற்றில் சலிப்புற்ற மக்கள் இக்காலப்பகுதியில் இல்லறத்தைப் பெரிதும் விரும்பினர். சமயத்திற்குச் சரியை கிரியை நெறியைப் பின்பற்றினர். 9-ஆம் நூற்ருண்டொன்றிலேயே ச ங் க ர ர் மதத்தின் செல்வாக்கினுலோ, ஞானநெறி தலையெடுப்பது நம்மாழ்வார் மாணிக்கவாசகர் ஆகியோர் பாடல்களால் அறியப்படுகிறது. பல்லவரும், பாண்டியரும் இக்காலப்பகுதியில் பீடுபெற்ற அரசர்கள். இவர்களைப்பற்றி யெழுந்த இலக்கி

யங்கள் சிலவும் மற்றபடி தே வா ர, நாலாயிரப்பிரபந்த பாடல்களுமே இக்கால இலக்கியங்கள். கி. பி 6-ஆம் நூற்றுண்டுத் தொடர்பால் ஓரிரண்டு நிகண்டுகள் தோன்றின.

நான்காஞ் சங்ககாலம் ஒரு நூற்றெருடுப்புக்கால மாதல்போல கி. பி. 9-ஆம் நூற்றுண்டும் ஒரு தொடுப்புக் காலமாகும். 7, 8, 9-ஆம் நூற்றுண்டிலேற்பட்ட இலக்கியங்களை நம்பியாண்டாரும் நாதமுனிகளும் தொடுத்தனர். தேவார பிரபந்தங்களையே இக்கால விலக்கியங்களாக நினைவிற் கொள்ளலாம். முற்கூறியபடி இது விருத்தப் பாடல்காலம். ஜைனரும் கீழக்கணக்குகளும் வளர்த்த நீதிகளும் அறங்களும் அழியாமல் இக்கால விலக்கியங்களிற் போற்றப்பட்டன. அப்பர், நம்மாழ்வார், மாணிக்க வாசகர் ஆகியோர் பாடல்களே அதற்குச் சான்றுகும். அகப்பொருளும் ஆழ்வார் நாயன்மாரையே தலைவியராகக் கொண்டு ஓரளவு விளக்கப்பெற்றது. சங்கநூல் இயற்கை வருணனை சம்பந்தர், சுந்தரர், திருமங்கைமன்னன் ஆகியோரது பாடல்களில் மலர்ச்சி யடைந்துள்ள தெனலாம். எனவே இக்காலத்தில் பழமையும் அடியோடழிந்துவிட வில்லை.

## திருமழிசையாழ்வார்

இவர் முதலாழ்வார்களுடன் தொடர்புடையவர். கி. பி. ஆறும் நூற்றுண்டிலும் ஏழாம் நூற்றுண்டிலும் இருந்தவராவர். ‘குணபரனே’ என இவர் இறைவனைப் பாடுதலால் முதல் மகேந்திரவர்மன் காலத்தில் இருந்தவராகலாம் என ஆசிரியர்கள் கருதுவதில் பொருத்தமிருக்கின்றது. தம் கால அரசனது சிறப்புப் பெயரையிட்டு

இறைவனை அழைத்திருக்கிறார். திருவுடை மன்னரைத் திருமாலாகக் கண்டவர்கள் ஆழ்வார்கள்.

இவரது சந்த விருத்தங்களால் இவரைப் பிற்காலத்திற்குக் (சிவவாக்கியர் காலம்) கொண்டுபோகவேண்டியதில்லை தேவாரத்திலேயே சந்தப் பாடல்களுக்கு நிறைய இடமுள்ளது. முதலாழ்வார்களைப் பற்றிக் கூறியதுபோல இவரையும் இலக்கண உரையாசிரியர் முக்காலமுணர்ந்த முனிவர் வகையில் சேர்த்துள்ளனர். பொய்கையாழ்வார் பூதத்தாழ்வாரைப்போலக் 'குடமூக்கிற்பகவர்' என்பார் ஒருவரையும் இவ்வகையிற் சேர்த்துள்ளனர். §அப்பகவரது பாடற்குதாரணம் திருமழிசைப் பாடலாக இருப்பதாலும் அவரைப் பொய்கையார், பேயாழ்வார் முதலோர் வரிசையில் வைத்ததாலும் அக்குடமூக்கிற் பகவர் திருமழிசையேயாக வேண்டும் என அறிஞர் கருதுகின்றனர். இவரும் பெரியயோகி; மற்றும் குடமூக்கில் நீண்டகாலம் தங்கியவர். எனவே இவர் முதலாழ்வார்க்குப் பின்னரும் மகேந்திரவர்மன் காலத்தும் இருந்தவரும் ஆவார் திருமூலரைப்போல இவர் நீண்டகாலம் வாழ்ந்த யோகியாதல் கூடும். குடந்தையைப் பாடல்களில் குறிக்கிறார்.

சிம்மவிஷ்ணு சிறந்த வைணவனாகலின் அவன்காலத்தும் இவர் வாழ்ந்தவர் ஆகலாம். இவரது பாடல்கள் சமயப் போராட்டங்களையும் காழ்ப்பினையும் புலப்படுத்துவன வாகலின் நாவுக்கரசரின் தொடக்ககாலமே அதற்குரியதாகும். இவ்வகையிலும் மகேந்திரன் காலம் உறுதியாகிறது. பிரபந்தத்தில் இவரதுபாடல்கள் முதலாழ்வார் பாடல்களுக்குப்பின் அமைந்தது அவர்க்கடுத்தவர் திரு

---

திருவந்தாதி - 93. § மு. ரா. ஆழ்வார் காலநிலை.

மழிசையென்பதனைக்குறிக்கலாம். அப்பர்க்குச்சமகாலத்த ராதல் கூடும். ஆரும் நூற்றுண்டில் திருவந்தாதி வெண்பாக்களும் ஏழில் சந்தவிருத்தமும் பாடியிருக்க லாம், ஏழாம் நூற்றுண்டு சம்பந்தர் அப்பரது சந்தப் பாடல்காலம். இவர் பாடல்கள் இருபிரிவாகக் கூறப் படலால் அப்பர்போன்று சமயமாறிப்பின் வைணவஞ் சேர்ந்திருக்கலாம், இவர் சைவஞ்சென்று திரும்பியிருக்க லாம். அதற்கேற்பச் சமயக் காழ்ப்புக் குறிப்புக்கள் உள்ளன. அந்தாதியில் மனு (76) ஆறுசமயம் (38) வித்துமிடல் வேண்டுங்கொல்லோ (23) என்பன இக் காலக்குறிப்புடையன. நாற்சாதி, கூர்மாவதாரம் பற்றியன 7 ஆம் நூற்றுண்டுக் குறிப்புக்களாகலாம்.

## நிகண்டுகள்

சேந்தன் திவாகரமும் பிங்கலமும் இந்நூற்றுண்டினைச் சேரும். தொல்காப்பியம் போன்ற இலக்கணங்களின் உரிச்சொற் பகுதியே தனியாகி விரிவடைந்து நிகண்டாக உருவெடுத்தது. திவாகரமும் பிங்கலமும் தொடர் புடையன. திவாகரரது மகனே பிங்கலர் எனக் கருதுவாரு முண்டு. ‡ இரண்டு நூல்களுக்கும் அமைப்பில் வேறு பாடுண்மையின் இடையிட்டகாலம் பெரிதாகலாமென அறிஞர் கருதுவர். எப்படியும் திவாகரரது வழியினர் பிங்கலர் என்பதில் தடையில்லை.

கணபதி வணக்கமும், சாளுக்கியர் குறிப்பும் திவா கரத்தில் உள்ளன. எனவே, கி. பி. ஆரும் நூற்றுண் டிற்குப் பின்பெனலாம்.

---

‡ கே. சி. ‘நிகண்டு’

சேந்தன் என்பவன் யார் என்பதுபற்றித் தடுமாற்றம் உள்ளது. கி. பி. ஏழாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் பாண்டியன் மாறவர்மன் அவனி சூளாமணிக்கடுத்து ஆண்ட சேந்தனே (செழியற் சேந்தன்) இவனுகலாம் என்பதில் தடைவேண்டியதில்லே. முன்பும் இவன் பல இலக்கியங்களுக்குக் காரணமானவன் என்பது ஆராயப் பட்டது. திவாகரத்தில் காணப்படும் அம்பர் கிழான் அருவந்தை ஔவையால்பாடப்பெற்றவன். வள்ளுவமாலே இணைப்புச் செய்யுளேப் பாடிய ஔவை யொருவர் இக் காலத்திற்குரியரென்ருேம்; அவ் ஔவையே அம்பர் கிழானைப் பாடியவராகலாம். திவாகரத்தில் அறுவகைச் சமயங்களே கூறப்பட்டன. பிங்கலத்தில் புறச்சமயங்க ளெல்லாம் விரிந்துள்ளன, எனவே 7-ஆம் நூற்ருண்டின் இறுதிக்காலமாகப் பிங்கலந்தையைக் கொள்ளலாம். பட்டாசாரியம் முதலிய மதங்கள் கி. பி 7-ஆம் நூற்ருண்டி லேயே ஏற்பட்டுவிட்டதாக தத்துவாசிரியர்கள் கருது கின்றனர். மற்றபடி அரசர் பெயர்கள் இருநூல்களிலும் ஒன்ருகவே யுள்ளன.

நிகண்டுகளில், காப்பியங்களுள் வரும் பதினெண் மொழிகள் விவரிக்கப்படுகின்றன. சம்பந்தர்காலப் பண் களேப் பற்றிய விளக்கம் பெரும் பயனுடையதாகும். அரட்டர் என்ற அரசர் பெயர் இராட்டிரகூடரைக் குறிக் கலாம். சளுக்கியரைச் சிறப்பாகக் குறித்தலால் புலிகேசி புகழ் பரவிய ஏழாம் நூற்ருண்டென்பது பொருத்தமே. ஆறுசமயமன்றி அகப்புறச்சமயக் குறிப்பு அப்பர் சம்பந் தரது காலத்தைக் குறிக்கும். புகார் நகருக்குக் காகந்தி என்ற பெயர் குறிக்கப்படுவது மணிமேகலே நினைவை யுண்டாக்குகின்றது. தேவார, பிரபந்தங்களில் இறைவன் சொல்லும் பொருளுமானுனெனப் பலவிடங்களில் வருகின் றது; இந்நூல்கள் சொற்பொருள் விளக்கமாகும்

# அப்பரும் சம்பந்தரும்

இக்கால இலக்கியத்திற்கும் சமூகத்திற்கும் பெருந் தொண்டு புரிந்தவர்கள் இவ்விரு நாயன்மாருமாவர். 12-திருமுறையில் 6-திருமுறைகளைப் பாடியவர்கள் இவ் விருவரும். இவர்கள் ஆழ்வாருள் திருமங்கையும் நம்மாழ் வாரும்போல மிகுதியான பாடல்களைப் பாடியவர்கள்.

ஆழ்வார் நாயன்மாரது பக்திப் பாடல்கள் தமிழிலக் கியத்தின் ஒரு சிறப்பியல்புடைய பகுதியாகும். நான்காஞ் சங்க காலத்திலக்கியங்களிலும் சிலப்பதிகார முதலிய நூல்களிலும் ஏழிசைபற்றி மிகுதியாகப் பேசப்படுகின்றது. அவ்வேழிசைக் கிலக்கியமாயவை இப் பக்திப் பாடல்கள். சம்பந்தர் தேவாரத்தில் மட்டும் 70-பண்களுக்குரிய அமைப்புக்களிருப்பதாகக் கண்டுள்ளனர்.

§மகேந்திரவர்மன் குணபரேச்சுரம் கட்டினன். அவற்குக் குணபரன் என்ற பெயர் கல்வெட்டிலறியப் படும். பல்லவரது மாபலிபுரக் கோயில்கள் வரலாற்றில் இடம் பெற்றவை. மற்றும் நரசிம்மவர்மன் காலத்தில் இவான்சுவாங் தென்னாட்டிற்கு வந்திருக்கிறான். கி பி. 7.ஆம் நூற்றாண்டுக் கடைசியில் பல்லவர் சீனத்திற்குத் தூதொன்று அனுப்பியுள்ளார். இவற்றாலெல்லாம் இவ் விருநாயன்மாரது காலமும் ஏழாம் நூற்றாண்டைய வரலா றும் தெளிவுபட விருக்கின்றன. §நரசிம்மனது வாதாபி வெற்றி வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். 7-ஆம் நூற் றாண்டு வைணவம் சிறிது அடங்கிச் சைவம் ஓங்கிய கால

---

§ ஔவை. சு. து: 'சைவ இலக்கிய வரலாறு'

மெனில் 8-ஆம் நூற்ருண்டு சைவமடங்கி வைணவம் ஓங்கிய காலமாகும். அதனைத் திருமங்கை, பெரியாழ் வார்களுக்குரிய காலமெனலாம்.

இக்காலவெல்லையில் மகேந்திரன், கூன்பாண்டியன் முதலிய அரசரும் எட்டாம் நூற்ருண்டில் பராந்தக நெடுஞ்சடையன் போன்ற அரசரும் தம்தம் சமயத்தை விட்டுச் சைவத்திற்கும் வைணவத்திற்கும் மாறியுள் ளனர். 7-ஆம் நூற்ருண்டில் இத்தகைய மாற்றத்திற்கு இவ்விரு நாயன்மாருமே காரணமாவர். அடுக்கி வந்த இன்னல்களை அசையாமற்ருங்கி இவர்கள் வளர்த்தது சமயமட்டுமின்றி இலக்கியமுமாகும். இவர்களதிலக்கி யங்கள், சமயத்துடனும் வாழ்க்கையுடனும் மிகவும் பிணைந் தவை. ‡திரு. சீனிவாசப்பிள்ளையவர்கள் இவ்விருவரது காலத்தையும் தமது தமிழ் வரலாற்றில் கி. பி. 7-ஆம் நூற்ருண்டின் முற்பகுதி என முடிவுகட்டுகிருர். இவருள் அப்பர் சுமார் 80-வயதிற்கு மேலும் வாழ்ந்தவராதல் கூடும். அதற்கேற்ப அவரது பாடல்களில் வாழ்க்கை யனுபவங்களும் அறங்களும் மிகுதியாகக் காணப்படு கின்றன.

கிறித்தவ சமயவாசிரியர் சிலர் இக்காலத்துத் தமிழகத்தில் வந்திருந்தனர். கிறித்தவர்கள் ஏற்றதுன்பங் களைச் சமயத்திற்காக இக்காலத்து நாயன்மார் ஏற்றனர். இன்றேல் இலக்கியங்களுங்கூட நெருப்பினின்றும் நீரி னின்றும் தப்பித்திருக்க முடியாது. நாவுக்கரசரென்பது அவரது இலக்கியத்தினைக்கண்டு வந்த பெயரேயாகும். இளமையில் அவர் சிறந்த சமயத் தலைமையும் தருக்கத் திறமையுமுடையராயிருந்தமையின் அவையாவும் அப்பரது

பாடல்களில் திறம்பெறக் காணப்படுகின்றன. வயதும் நீண்ட அனுபவமுமின்றியும் சிறந்த இலக்கியங்கள் எழுவதுண்டென்பதற்குச் சம்பந்தரது பாடல்களே சான்ருகும். இவற்ருல் அருளுணர்ச்சியும் பண்டே உள்ளத்தில் அமைந்துகிடக்கும் பண்புமே இலக்கியத் தோற்றத்திற்குப் பெருங்காரணம் என்பது புலப்படும். அப்பரது பாடல்களில் அறமும் உலகனுபவமும் மிகுதியாகக் காணப்படுமெனில் சம்பந்தரது பாடல்களில் இயற்கை வருணனை மிகுதியெனலாம். கி. பி. ஆரும் நூற்ருண்டு திருமூலர்க்குரிய சித்தர்காலம்; அப்பரும் சம்பந்தரும் செய்த சித்துச் செயல்களைக்குறிக்கும் பாடல் பல தேவாரத்துட் காணப்படுகின்றன. செங்கண்ணனும் சிம்மவிஷ்ணுவும் 6-ஆம் நூற்ருண்டிலேயே கோயில் கட்டிவிட்டனர், அவற்றைப் பாராட்டிப்பாடுவதே இவ்விருவர்க்கும் பணியாகிவிட்டது.

இயற்கை வருணனையின்பமும், இசைக்குறிப்புக்களும் மிகவுடையன சம்பந்தரது பாடல்கள். சிலப்பதிகார இசை இலக்கணத்திற்கு இலக்கியம் தேவாரப்பாடல்கள். எளிமையும் சொல்லணிப் பாடலும் இவர் தேவாரத்துள் மிக்கன. வச்ரநந்தி சங்கத்தூண்டுதலால் சமணர் எண்ணற்ற இலக்கியங்களை யாத்துச்சமயத்தைப் பரப்ப முயன்றனர்; அதற்கெதிராகச் சைவரும் செய்தமுயற்சியே தேவாரப் பாடல்களும் 11-ஆந் திருமுறைப் பாடல்களுமென்னலாம். பரிபாடல், பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம் ஆகியவற்றிலேயே இசைப்பாடல்கள் வந்துவிட்டன; இக்காலத்து அவை பெருகின. சமண எதிர்ப்பு சம்பந்தரது பாடல்களில் மிகுதி. இவரது தேவாரக் குறிப்புக்களைக் கொண்டே அவ்வூர்களில் பிற்காலச்சோழர் கற்கோயில்

கட்டவும் திருமுறையோதவும் ஏற்பாடு செய்தனர். இவ்விரு செயல்களுமே சைவம் அழியாமல் நின்றமைக்கும் வளர்ந்தமைக்கும் காரணங்கள்; அவற்றிற்கு வித்திட்டன தேவாரவிலக்கியங்கள்.

## பாண்டிக்கோவை

இறையனுரகப்பொருளுரையில் மேற்கோளாகக்காட்டப்படும் கோவை இலக்கியம் பாண்டியன் நின்றசீர் நெடுமாறன்மீது பாடப்பட்டதாகக்கருதப்படுகிறது; இவனே கூன்பாண்டியனுவான். இவனது நெல்வேலி வெற்றி இவ்விலக்கியத்தில் பெரிதாகப் பாராட்டப்பெறுகின்றது. பிரபந்த வகையுட் பல இக்காலத்திலேயே தோன்றி விட்டன. மும்மணிக்கோவையும் அந்தாதியும் நக்கீரர் பாடலுள்ளேயே காணப்படுகின்றன. இந்நூற்ருண்டில் உலா (திருக்கைலாய ஞானவுலா) தோன்றிவிட்டது. பாண்டிக்கோவையும், நாயன்மாருள் கலியநாயனுர் பாடிய கோவைப்பாடல்களும் இக்காலத்தனவே. கலியநாயனுரது பாடல்கள் இப்போது கிடைக்கவில்லை, அவையும் கிடைப்பின் வரலாற்றிற்கு மிகவும் பயன்படலாம். பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்கள் சில (செங்கீரை—சப்பாணி) 11-ஆம் திருமுறைப் பாடல்களிலேயே குறிக்கப்பெறுகின்றன. புறநானூறு, அகநானூறு தொகுக்கப்பெற்றகாலத்திற் கணித்தாகலின் கோவைப்பாடல்கள் 400-கணக்கில் இயற்றப்பட்டனவாகலாம்.

மும்மணிக்கோவையிலும் கோவையென்ற பெயருள்ளது. இவையெல்லாம் இஃதோர் நூல் தொகுப்புக் (கோவை செய்யும்) காலம் என்பதனை உணர்த்தும்.

கோவையிற் குறிக்கப்படும் அரசன் அரிகேசரி பாராங்குச னெனவும் அன்றி அவற்கு ஓரிருவரை யடுத்தவனெனவும் ஆசிரியர் கருதுவாருமுளர். எப்படியும் இக்கோவைக்கும் இறையனூர் களவியலுக்கும் இடையீடு 200-ஆண்டுகள் வரைக் கூறுவர் ஆசிரியரென்பது முன்புரைக்கப்பட்டது.

## புறப்பொருள் வெண்பாமாலை

ஐயனூரிதனூர் என்பவர் எழுதிய இந்நூலில் விநாயகர் சிவபெருமான் ஆகியோர்க்கு வணக்கங் கூறப்படுகின்றது. பன்னிரு படலத்தையொட்டியியன்ற புறத்திணையிலக்க ணம் இதுவாகும். பன்னிருபடலம் கிடைக்காமையின் இந்நூலுக்கு ஒரு ஏற்றங்கிடைத்து விட்டது. தொல்காப் பியத்தையன்றி, யாப்பருங்கலக் காரிகையையும் நம்பி யகப்பொருளையும் படிப்போர் புறத்திணையிலக்கியத்திற்கு இதனைப் படிக்கின்றனர்: பாடல்கள் தெளிவும் நல்ல நடையுமுடையன. இந்நூல் 7-ஆம் நூற்றுண்டின் இறு திப்பகுதிக்குரியதாகக் கருதப்படுகின்றது. இதனை ஆரும் நூற்றுண்டின் கடைசிக் காலத்து வைப்பதாற் குறையா தெனப் புலப்படவில்லை. இவரை 'வானவர் மருமான்' என்பதால் சேரநாட்டு இளவரசர் ஒருவரோ எனக்கருத வேண்டியுள்ளது. வேங்கடம் பாசூர் கச்சியாகியவிடங் களிலுள்ள கடவுளைத் துதிக்கின்றுர். அகப்பொருளுக்கு நூற்றுக்கணக்கான கோவைப் பாடல்கள் பாடப்பட்ட மாதிரி புறப்பொருளுக்கும் மிகுதியான பாடல்களைப் பாடிய காலமாகலாம் இது. நான்காஞ்சங்க காலத்தினும் சிறிது வளர்ச்சி கண்டு கார் 40, களவழி 40 என்பதுபோய் அகத்திற்கும் புறத்திற்கும் 400 என்ற அளவில் இக் காலத்துப் பாடல்கள் பெருகியுள்ளன. தொடர்நிலைச்

செய்யுள் காலமாகலின் ஓராசிரியர் ஒரு பொருளைப்பற்றிப் பன்னூறு பாடல்களை இக்காலத்தில் பாடியமைபுலனாகும். தொல்காப்பியம் அகத்தும் புறத்தும் கூறிய துறைகளை யெல்லாம் முற்றவும் முறையாகவும்பாடும் மரபு நான்காஞ் சங்க காலத்துச் சிறிது விடுபட்டிருந்தது. அதனை அடுத்த இக்காலம் அம்மரபினை மேற்கொண்டுள்ளது. மறைமுக மாகத் தொல்காப்பியம் நினைக்கப்பட்டுள்ளது. கந்தழி, வள்ளி, கொடிநிலையென்ற தொல்காப்பியக் குறிப்புகட்கு விளக்கம் கூறப்படுகின்றது. நீர்ப்படை, நடுகல்பற்றியன சிலப்பதிகாரத்து அக்காதைகளை நினைவூட்டுவன. கந்தழி முதலியன, சிலப்பதிகாரக் கடவுள் வாழ்த்தில் கையாளப் படும் கற்பனைகளில் விவரிக்கப்படுவனவாகலாம். பன்னிரு படலத்தையொட்டி இந்நூலியற்றப்பட்டதாகப்பாயிரம் கூறும். படலம் அகத்தியர்மாணவர் பன்னிருவராலியன்றதெனக்கூறப்பெறும் படலம் கிடைக்கவில்லை. எப்படியும் ஏழாம் நூற்றுண்டிற்கு முற்பட்டது. யாப்பருங்கலத்திலும் உரையாசிரியர் மேற்கோளிலுமே 5—6 பேரது பாக்கள் காட்டப்படுகின்றன. பனம்பாரரும் தொல்காப்பியரும் மற்றிருவர். கைக்கிளை பெருந்திணை முதலியவும் விளக்கப்படுகின்றன. இதனால் அகத்திற்குப்புறமே, புறத்துணையே புறத்திணையெனத் தொல்காப்பியம் கூறுவது புலப்படும்; மற்றபடி ஊர்களை யழித்தலையோ போர் முறைகளையோ மட்டும் கூறுவது புறத்திணையின் நோக்கமன்று.

## சுந்தரர்

சுந்தரர் காலம் கி. பி. எட்டாம் நூற்றுண்டு தொடக்க மென்பது பலரது கருத்தாகும். கி. பி. 9-ஆம் நூற்றுண்டென சிலர் கொண்ட கருத்து இப்போது மாறி விட்டதெனலாம்.

சுந்தரர் கயிலைக்குச் சென்றது கொல்லமாண்டுத் தொடக்க மெனவும் கொல்லமாண்டுத் தொடக்கம் கி. பி. 9-ஆம் நூற்றுண்டிலெனவும் 9-ஆம் நூற்றுண்டுக் கொள்கையினர் கொண்டனர். கொல்லமாண்டுத் தொடக்கத்தைப் பற்றிய அவர்களது கருத்து இப்போது தவருகிவிட்டது.

கடல் சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் என்பவனைத் தந்திவர்மனுக அவர்கள் கொண்டதனுல் இத்தவறு ஏற்பட்டது. கடல் சூழ்ந்த உலகை யெல்லாம் காக்கும் நிலையும் பெருமையும் முதல் நரசிம்மவர்மனைத் தொடர்ந்தாண்ட இராசசிம்மன் காலத்திலேயே இருந்தது. நரசிம்மவர்மனது வெற்றியை யெல்லாம் காத்தவன் இராசசிம்மன். மற்றும் கழற்சிங்கன் எனச் ‘சிம்மப் பெயரும்’ இராசசிம்மனில் உள்ளதுபோல அத்தொடரில் உள்ளது. இவற்றை யெல்லாம் விட்டுச் சென்றவிடத் தெல்லாம் தோல்வியே கண்டுவந்த தந்தி வர்மனைக் கொள்ளவேண்டாம். சோழனை மருகனுகக் கொண்ட பாண்டியனெருவன் சுந்தரரை மதுரையில் வர வேற்றுன்; சோழ பாண்டிய உறவு 9-ஆம் நூற்றுண்டிற் ருன் காணப்படுகிற தென்பர். நரசிம்மவர்மன் காலத்தும் இவ்வுறவு பேசப்படுகிறது. அது தொடர்ந்து இராச

சிம்மன் காலத்தும் இருந்திருக்கலாம். அப்பர் சம்பந் தரைத் தொடர்ந்த காலத்தில் சுந்தரர் வாழ்ந்தார் என்பதே பொருத்தமாகின்றது. சுந்தரர் நரசிம்ம முனையரையன் என்ற அரசனிடத்து வளர்ந்ததாக வரலாறு கூறும். அவன் முதல் நரசிம்மவர்மனே அல்லது அவனது படைத் தலைவனே யாகலாமென்பது பொருந்தி வருகின்றது. இவனுக்குப் பிறகு பரமேசுரன் இராசசிம்மன் ஆகிய மூவர் காலத்தும் சுந்தரர் வாழ்நதுள்ளார். பெரியபுரா ணத்தும் நரசிங்க முனையரையர் புராணமும் அடுத்து ஐயடிகள் புராணமும் பின்னர் காடவர்கோன் கழற்சிங்கர் புராணமும் வருகின்றன. ஐயடிகள் நரசிம்மவர்மனுக்கும் இராசசிம்மனுக்கும் இடைப்பட்ட பரமேசுரவர்மனுகலாம். ஐயடிகள் புராணமும் பரமேசுரன் வரலாறும் மகனுக்குப் பட்டங்கட்டிவிட்டுத் துறவு மேற்கொண்டதாகவே ஒரே மாதிரியுள்ளன. அவ்வாருயின் ஆரும் நூற்ருண்டிற்கூறிய ஐயடிகள் 7-ஆம் நூற்ருண்டிற்காகிருர். அங்கு இளம் பெருமானடிகளென்பது இளவரசன் விஷ்ணுகோபனையும் 'அதிராவடிகள்' சிம்மவிஷ்ணுவையும் குறிக்கலாம்.

காலவரிசை பெரிதும் தவருமலே திருத்தொண்டத் தொகையுள் சுந்தரர் பாடுகிருர். நின்றசீர் நெடுமாறற் கடுத்துத் தம் பெற்ருேர் பெயரைக் கூறுதலால் அப் பாண்டியற் கடுத்து இவரது பெற்ருேர் வாழ்ந்தனர் என் பது தெரியலாகும். நெடுமாறன் காலம் 7-ஆம் நூற் ருண்டின் பிற்பகுதியாகும். தொண்டத் தொகையுள் கூறப்பட்ட நாயன்மாரெல்லாம் பெரிதும் 7-ஆம் நூற் ருண்டிற்குரியவர், அடுத்து சுந்தரர் 9-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தாரெனில் இடைப்பட்ட ஒரு நூற்ருண்டுபற்றிய வரலாறு தெரியாமலே போய்விடுகின்றது. ஒரு நூற்ருண் டுக்கு சைவ அடியாரே இல்லையென வேண்டிவரும்.

நின்றசீர் நெடுமாறற் கடுத்துக் கோச்சடையன் ரணதீரன், அரிகேசரி பராங்குசன் முதலியோர் சிறந்த சைவர்கள்; வரகுணன் I வேறு இக்காலத்தில் வாழ்ந்திருக்கிறுன். இவர்களையெல்லாம் சுந்தரர் குறிக்காமல் இருக்கவே முடியாது. பல்லவருள் இராசிம்மனையடுத்து நந்திவர் மன் II சிறந்த சைவனுமாவான். இவர்களையெல்லாம் குறிக்காமையால் சுந்தரர் 7-ஆம் நூற்றுண்டிலேயே இருந் திருக்கவேண்டும். இராசசிம்மன் காஞ்சி கைலாயநாதர் கோவில் கட்டிய சிறந்த சைவன்.

சுந்தரர் பாடலுள் பஞ்சத்தைப் பற்றிய குறிப்பொன்று காலவாராய்ச்சிக்குப் பெரிதும் துணை செய்கின்றது. ‡இராசசிம்மன் காலத்தில் பஞ்சம் ஒன்று பரவியிருந்ததாக வரலாற்றில் தெளிவாகத் தெரிகின்றது. சுந்தரர் குறிக்கும் பஞ்சம் இதுவேயாக வேண்டும். ‘வாளன கண்மடவாள்’ என்ற பாடலால் சுந்தரரது மனைவி அப்பஞ்சத்தில் வாடி வருந்தியதாகத் தெரிகின்றது. சுந்தரர் 18-ஆண்டுகள் வாழ்ந்ததாகத் தெரிதலால் அவர் மணத்திற்குப் பிறகு 2—3 ஆண்டுகளே இருந்திருக்கக்கூடும். மணம் சுமார் 15-வது வயதில் நிகழ்ந்ததாகக் கொள்ளலாம். முதல் பரமேசுவரனுகிய ஐயடிகள் தம் மகனுக்குப் பட்டங்கட்டிச் சென்றவன் என்பதனுல் அவன் காலமாகிய கி. பி. 660 முதலே இராசசிம்மன் காலத்தைக் கணக்கிடலாம். எனவே சுந்தரர் கி. பி. 650—690 ஆகிய கால வெல்லை யுள் வாழ்ந்தவராவர்.

சுந்தரரும் சேரமான் பெருமாளும் ஒரு காலத்தவ ராகலின் சேரமானும் இக்காலத்திலேயே வாழ்ந்திருக்க

‡ Dr. Raja - பல்லவர் - 159.

வேண்டும். திருக்கைலாய ஞானவுலாவும், மற்ற 11-ஆந் திருமுறைப் பாடல்களும் சேரமான் பெருமாளால் இயற்றப் பெற்றவை.

சுந்தரர் பாடல்கள் நிலையாமையையும் உலகத் துன்பத்தையும் மிகவாக வற்புறுத்துவன; வரலாற்றுச் சான்றுகள் பொதிந்தன. சமயக்காழ்ப்பும் தெளிவாகக் காணப்படுகின்றது. வாழ்க்கையில் மிகவும் அடிப்பட்டமையால் அப்பர் சம்பந்தர் போன்று அவ்வளவு பாடல்களை சுந்தரர் எழுதமுடியவில்லை.

சேரமான்பெருமாளது ஞானவுலா அளவும் கற்பனை நயமும் உடையதாகும். குறள்கள் எடுத்தாளப்படுகின்றன. கோவைகட்கடுத்து உலாப் பிரபந்தம் இவரால் தொடங்கப் பெறுகின்றது.

# எட்டாம் நூற்ருண்டு

## திருமங்கையாழ்வார்

எட்டாம் நூற்ருண்டின் முற்பகுதிக்குரியவராகத் திருமங்கையைக் கருதலாம். சுந்தரரும் இவரும் ஒரு காலத்தவர் என்பதனே, இருவரும் அண்மைக்காலத்தவர் எனவோ அன்றி ஒருவரையொருவர் கண்டவராகவோ கருதலாம். வரலாற்றில் 20—30 ஆண்டுகள் வேறுபாடிருத்தல் ஒரு குறையாகாது.

குருபரம்பரை முதலிய சமய வரலாற்று நூல்களால் இந்நூற்ருண்டு ஆழ்வார் காலம் என அறிகிருேம். திருமங்கை, குலசேகரர், பெரியாழ்வார், நம்மாழ்வார் ஆகியவனைவரும் ஒரு காலத்தவராக இந்நூற்ருண்டில் வாழ்ந்துள்ளனர். 'முற்றத்துறந்து திருப்பதிகடோறும் சென்றுபாடித் திருமாலடியாரென்று தேசமறியத் திரிந்த கூட்டங்கள்' இந்நாட்டில் இருந்துள்ளன. அக்கூட்டத்துள் சேர்ந்தவராக ஆழ்வார் தம் பாடலுட்குறிக்கின்ருர். இந் நூற்ருண்டாழ்வாரெல்லலாம் இவ்வாறு வாழ்ந்தவர்களே. திருமங்மை மன்னனே ஆழ்வாருள் அப்பரென்னலாம். பிரபந்தத்துள் ஒருபெரும் பகுதியாகிய பெரிய திருமொழி இவராற் பாடப்பெற்றது. வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்தவை இவரது பாடல்கள். கோச்செங்கணுன் எண்டோளீசர்க்கு 70-மாடம் சமைத்த வரலாறு இவராலேயே தெளிவிக்கப்பட்டது. சமயத்திற்காக வாதாடிப் போராடித் துன்புற்றவர் இவ்வாழ்வார். †வைரமேகன் என்ற அரசனது பட்டப்பெயரைக் கொண்டு இவரது

---

† கே. சி. பிள்ளை: த. வ. II

காலத்தைக் கணிக்கவேண்டியுள்ளது. ஒரு அரசனை இப்பெயரால் ஆழ்வார் குறிக்கிறார். கல்வெட்டுக்களால், தந்திவர்மன் இரட்டவரசன் தந்திதுர்கன் ஆகிய இருவர்க்கும் இப்பட்டம் இருந்ததாக அறிகிறோம். தந்திவர்மனை தந்திதுர்கன் வென்றிருக்கலாம்; வென்றதற்கடையாளமாக தந்திவர்மனின் பட்டமாகிய வைரமேகன் என்பதனைத் தான் சூட்டிக்கொண்டிருக்கலாம். வென்றவரசர் பெயரைத்தாம் ஏற்றுக்கொள்ளுதல் அரசரியல்பு. தந்திவர்மனுக்கு முன்பு ஆண்ட பல்லவன் நந்திவர்மன் II. ஆழ்வார் தந்திவர்மன்காலத்தில், பல்லவர்கோன் பணிந்த என இறந்தகாலத்திற் குறிப்பது இவ்விரண்டாம் நந்திவர்மனையே ஆகவேண்டும். ஆகவே ஆழ்வார் இரண்டாம் நந்தி, தந்திவர்மன் ஆகிய இருவர் காலத்தும் வாழ்ந்தவராகலாம்.

'தொண்டையர்கோன் வணங்கு நீண்முடிமாலை வைரமேகன் தன்வலி தன்புகழ் 'சூழ்ந்தகச்சி' என்பது பல்லவ அரசன் தந்திரவர்மனையோ அன்றி இரட்டன் தந்திதுர்கனையோ யாரைக் குறிப்பினும் குறையில்லை. தந்திதுர்கன் மகளை இரண்டாம் நந்தி மணந்து பிறந்த மகனே தந்திவர்மன் என ஆராய்ச்சியாளர் கருதுவர். எனவே தந்திதுர்கன் பேரன் பல்லவ தந்திவர்மன்.

'பலராய்ப் பலவேந்தர் வணங்குகழற் பல்லவன்' என்பது II. நந்தியையே குறிப்பதாகக் கொள்ளலாம். இவர்காலத்தில் பல்லவரும் இரட்டரும் அடிக்கடிக் காஞ்சியைக் கைப்பற்றியாண்டுள்ளனர். எனவே காஞ்சியில் ஆட்சி ஒரு நிலைப்பட்டதாக இல்லை. எனவேதான் 'தொண்டையர்கோன் வணங்கும்' என்ற பாடலுக்கு

'ஈரரசு பட்டிருந்ததாக'ப் பெரியவாச்சான் பிள்ளை உரை செய்கிருர். ஈரரசென்பது முற்கூறியபடிப் பல்லவரும் இரட்டருமாவர். இது தந்திவர்மன் சைவத்திலிருந்து வைணவத்திற்கு மாறியதனைக் குறிக்குமென ஆசிரியர் பலர் கருதுவது தேவையற்றதாகும். ஈரரசு என்பது இரு சமயம் எனப்பொருளாகாது. மற்றும் தந்திதுர்கன் சைவனுயினும் சிறந்த வைணவன் என்பதிலும் தடையில்லை. இவன் காஞ்சி கோயிலுக்குப் பொற்குடமளித்தமையும் இவன்கால முத்தரையன் ஒருவன் திருவாலத்தூரில் மலையைக் குடைந்து பெருமாள் கோயிலெடுத்தமையும் கல்வெட்டினுல் அறியப்படுகின்றது.

ஆகவே ஆழ்வார் நந்தி II, தந்திவர்மன் ஆகிய இருவர்காலத்தும் வாழ்ந்தவராகலாம். 8-ஆம் நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்து 780-க்கு மேலும் இவர் வாழ்ந்திருப்பின் தந்திதுர்கன் காலத்தில் சில்லாண்டுகள் இருந்திருப்பார்.

## தொண்டரடிப்பொடியார்

இவர் திருமங்கை மன்னன் காலத்தே வாழ்ந்தவராவார். திருமங்கை மன்னன் திருவரங்கம் பெரியகோயிலுக்கு மதில் கட்டுவித்த காலத்தே தொண்டரடிப் பொடியாழ்வார் பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கிற இடம் எதிர்ப்பட்டதாக அவ்விடத்தை விட்டொதுக்கி மதில் கட்டுவித்ததாகக் குருபரம்பரை கூறும். இதனுல் இருவரும் ஒரு காலத்தவர் என்பது புலனுகும். இதனைக் கண்டு வந்த தொண்டரடிகளும் தாம் திருமாலை கொய்யு மாயுதத்திற்குத் திருமங்கையின் பெயராகிய 'அருள்மாரி' யென்பதனைச் சூட்டி மகிழ்ந்தாராம்.

'அடியார்க்குமடியேன்' எனச்சுந்தரர் கொண்ட அவ் வெளிமையே தொண்டரடிப்பொடி என்ற பெயரினும் உள்ளது. 'புறம் சுவர் மதிலெடுத்து' என்ற இவரது திருமாலைப்பாடல் ஓர் அகச்சான்ருகலாம்.

## திருப்பாணாழ்வார்

மற்ற ஆழ்வாரது காலமே இவர் காலமும் எனப் பரம்பரை கூறும். 'இழிகுலத்தவர்களேனும் எம்மடியார் களாகில்' எனத்தொண்டரடிப்பொடிகள் கூறுவது இவ் வாழ்வாரையே கருதியாகுமென ஆசிரியர் கருதுவர். அவ்வாருயின் தொண்டரடிகள் காலமும் இவர் காலமும் ஒன்றேயாகும். திருவரங்கக்கோயில் பெருமையோங்கி யிருந்தது இக்காலம். அமலனுதிபிரானென இவர் திரு வரங்கத் தெம்பெருமானையே பாடுகிருர். திருவரங்கத் தெம்பெருமான் திருமுற்றத்தடியார் கூட்டமொன்று இக் காலத்துப் பேசப்படுகிறது. அவருள் ஒருவர் இவரைச் சுமந்த யோகசாரங்கரெனப் பரம்பரை கூறும்.

## குலசேகராழ்வார்

திருவரங்கத் திருமுற்றத்தடியார் குழுவுள் இவரும் ஒருவரார்வார் எனக் குருபரம்பரை கூறுகின்றது. இவரும் குலசேகரர் பெரியாழ்வார் போன்ருரும் ஒருகாலத்தவர் என அறிதலால் இவரும் 8-ஆம் நூற்ருண்டுக்குரியவர். 'ஆடிப்பாடி யரங்கவோவென்றழைக்கும் தொண்ட ரடிப்பொடி' என்ற இவரது பாடற்ருெடரைக் கொண்டு ஆழ்வார் தொண்டரடிப்பொடிகள் காலத்தவர் எனக் கருதவேண்டியுள்ளது. தொண்டரடிகளை நினைத்து இப் பாடல் எழுந்தது அன்றி இத் தொடரைக்கொண்டு

தொண்டரடிக்குப் பெயர் உண்டாயிற்று எனக் கொள்ளலாம் என அறிஞர் கருதுகின்றனர். திருமங்கை வரலாற்றில் திருவரங்கத்திற்குத் திருமதில் கட்டுவது பற்றிக் கூறுப்பட்டது. இவரும் திருவரங்கத்தில் மூன்ரும் ஆவரணச்சுற்று கட்டியதாகவும் அதற்குக் குலசேகரன் திருவீதியெனப் பெயர் ஆயிற்றெனவும் குருபரம்பரை கூறுகின்றது. மற்றும் பெரியாழ்வாரைப்போல இவரும் தம் கன்னியைத் (பெண்) திருவரங்கமுடையானுக் களித்ததாகத் திவ்ய சூரிசரிதம் கூறுகின்றது. இவையெல்லாம் இவர் பெரியாழ்வார் திருமங்கை ஆகியோர் காலத்தினர் என்பதனைப் புலப்படுத்துகின்றன.

கொங்கர்க்கும் பாண்டியர்க்கும் சோழர்க்கும் தலைவனென்றெல்லாம் தன்னை ஆழ்வார் குறித்துக் கொள்கிருர். பாண்டியருள் 8-ஆம் நூற்றுண்டிற்குப் பிற்பகுதியில் பராந்தக நெடுஞ்சடையன் வலிமையுற்றவனுகிருன். பாண்டியர் வலியற்றது நின்றசீர் நெடுமாறற்கடுத்து இரணதீரனுக்கும் பிற்பட்ட காலத்திலாகலாம். சோழர் இப்போது தோன்றவில்லை. இரண்டாம் நந்திவர்மனுக்குப் பிறகு பல்லவரும் நிலைதடுமாறியுள்ளனர். இது 8-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதித் தொடக்கமாகும். இவர்கள் எல்லோரும் இந்நூற்றுண்டின் இடையில் 60—70 ஆண்டுக்குட்பட்ட காலப்பகுதியில் வாழ்ந்தவராதல் கூடும். சேர நாட்டினர்க்கும் இராமகதைக்கும் மிக்க தொடர்புள்ளது. மலையாள மொழியில் முதல் இலக்கியமே இராமாயணம். மற்றும் இக்காலமே அங்கு வட நாகரீகம் பரவி சேரம் மலையாளமாக மாறியதாகலாம்.

# பெரியாழ்வார்.

பெரியாழ்வார், குலசேகரர், திருமங்கை மன்னன் முதலோர் ஒருகாலத்தவரெனக் குருபரம்பரை கூறும். மற்றும் குலசேகரரும் இவரும் ஒரு காலத்தவ ராகலாம் என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. ஆழ்வார்களுக்குள்ளே இவர் இருவருமே இராமாவதா ரத்தில் மிகவும் ஈடுபட்டுள்ளவர்கள். மற்றும் தம் கன்னி யரைத் திருமாலுக் கடியவராக ஆக்கியவர்கள் இவரிருவரு மெனஅறிகிறோம். குலசேகரர் வரலாற்றினுள் இதுபற்றிக் குறிப்பிட்டோம்.

குருபரம்பரைகள் ஆழ்வாரைச் சீவல்லபன் என்ற பாண்டியன் காலத்தவராகக் கூறும். சீமாற சீவல்ல பன் என்பவன் காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டாகிறது. அது பொருந்தாது. பராந்தக நெடுஞ்சடையன் காலமே என்பார் பலர். அதுவாயினும் ஆழ்வார் 85 ஆண்டுகள் வாழ்ந்தவராக அறிதலால் அவர் நெடுஞ்சடையன் கால முதல் சீவல்லபன் காலம்வரை வழ்ந்தாரெனல் பொருந் தும்; பராந்தக நெடுஞ்சடையன் காலம் கி. பி. 767-784. சீவல்லபன் கி. பி. 862 வரை ஆண்டிருக்கிறான்.

ஆழ்வார் பாடல்களால் அவர்காலப் பாண்டியன் கோநெடுமாறன் எனப் பாராட்டப் பெறுகிறான். நெடு-மாறன் என்பதும், நெடுஞ்சடையன் என்பதும் ஒன்று போலவிருப்பதால் அந் நெடுஞ்சடையனே ஆழ்வார் காலப் பாண்டியன் எனக் கருதுகின்றனர். அவனும் சிறந்த வைணவனாக இருந்திருக்கிறான். திருமாலுக்கு ஆலயங்கள் எடுத்திருக்கிறான்.

அவன் சாசனமொன்றில் குரு சரிதம் கொண்டாடி என்றிருப்பது அவன் பெரியாழ்வாரை ஆசிரியராகக் கொண்டவன் என்பதனைத் தெரிவிக்கும். குரு என்பவர் பெரியாழ்வார். 'பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான்' என்றதொடரும் இதனை வலியுறுத்தும். இப் பாண்டியனது அமைச்சன் மாறன்காரியென்பான் ஒரு சிறந்த வைணவனுயிருந்திருக்கிருன். அவன் மதுரைக் கருகிலுள்ள ஆனைமலையில் நரசிம்மசுவாமி கோயிலைக் குடைந்தளித்திருக்கிருன். கோயிலமைக்கும் பணியில் பாண்டியனுக்கும் உடந்தையாக இருந்திருக்கிருன்.

இந்நெடுஞ்சடையனே வேள்விக்குடிச் சாசனத்தை யளித்தவன். அப்போது இவன் வைணவனுகத்தெரிய வில்லை. சிவனையும் அகத்தியரையுமே அச்சாசனத்தில் பாராட்டியிருக்கிருன். ஆனுல் ஆனைமலைக் கல்வெட்டில் அரசன் சிறந்த வைணவன். அக் கல்வெட்டின் காலம் கி. பி. 769-70. எனப்படுகிறது. எனவே இக்காலத்து ஆழ்வார் இருந்திருக்கலாமெனத் தெரிகின்றது. இவரது மகளே ஆண்டாள். மணிமேகலையைப்போல மணமின்றிச் சமயத்திற்காக வாழ்ந்தவள் இவள். இல்லறத்திற்காக்கந் தந்தது இக்காலமாதலால் இவள் திருமணத்தில் விருப்ப முற்று எம்பிரானையே காதலனுகக் கொண்டு பாடினுள். இவளது பாடல்களில் காதற் சுவையும் பக்திச் சுவையும் சொட்டுதற்குக் காரணமிதுவேயாகும். திருப்பாவையால் பேர்பெற்றவள் ஆண்டாள்; திருவெம்பாவை பாடிய மாணிக்கவாசகர் இக்காலத்தவரே என்பதனையும் நினைக்க வேண்டும். ஆழ்வார் தம் மகளிடம் வைத்த அன்பை இறைவனைக் குழந்தையாகக் கற்பனை செய்து வெளிப் படுத்துகிருர். பெண்கள் தம் நலத்தைத்துறந்து அடியா ராகவும் புலவராகவும் ஆதலருமை. மணிமேகலைபோல ஆண்டாளுக்கவ்வருமை கைகூடியமையால் அவள் ஆண் டாண்டுதோறும் மார்கழியில் தன்னை அனைவரும் நினைக்குமாருக்கிக்கொண்டாள்.

# ஒன்பதாம் நூற்றுண்டு

## நம்மாழ்வார்

வரகுணமங்கையையும் சீவரமங்கையையும் நம்மாழ்வார் பாடியிருத்தலால் நம்மாழ்வார் வரகுணனுக்குப் பிற்பட்டவராகலாமென அறிஞர் கருதுகின்றனர். வரகுண மங்கையென அவ்வூர் அம்மன் பெயரால் ஊர் ஏற்பட்டிருக்கலாமென வாதிப்போர் பலர். †மங்கையென்பது இயற்பெயரன்றெனவும் மங்கலமென்பதே மருவி மங்கையென்ருகுமெனவும் கல்வெட்டைக் கொண்டே எடுத்துக்காட்டி பட்டமங்கை உத்தரகோசமங்கை என்ற சான்றுகளையும் காட்டியுள்ளனர் ஆசிரியர்கள். பாண்டிய சடிலவர்மன் வேலங்குடி யென்ற ஊரை சீவரமங்கலமென மாற்றி மகதப் பிராமணன் ஒருவனுக்குக் கொடுத்துள்ளான். அதனையே சீவரமங்கை யென ஆழ்வார் பாடியுள்ளார். வரகுணமங்கைக்குரிய வரகுணன் காலம் கி. பி. 800—830 ஆகும்.

குலசேகரர், பெரியாழ்வார் நம்மாழ்வார் முதலோர் ஒரு காலத்தவர் எனப் பரம்பரைக் கதையுள்ளது. ‡மற்றும் பெரியாழ்வார் வரலாற்றில் நெடுஞ்சடையனது அமைச்சனுகக் குறிக்கப்பட்ட மாறன்காரி யென்பவர் நம்மாழ்வாரின் தந்தையாகிய காரியே யெனக் கருதுவாரும் உளர். இவற்ருல் ஆழ்வார் 8-ஆம் நூற்ருண்டின் கடைசியில் தோன்றி 9-ஆம் நூற்ருண்டிலும் வாழ்ந்தவராகக்

† கே. சீ: II.
‡ மு. ரா: ஆழ்வார்கள் காலநிலை.

கருதலாம். எப்படியும் ஆழ்வார் 9-ஆம் நூற்றூண்டிற் குரியவர்; 840-60-க்கு மேலும் அவர் இருந்திருக்க வேண்டும். பிரபந்தங்களைத் தொகுத்த நாதமுனிகள் 11-ஆம் நூற்றூண்டுத் தொடக்கத்தில் இருந்தவராகத் தெரிகின்றது. கங்கைகொண்டசோழபுரத் தொடர்பு அவர்க்குக் கூறப்படுகின்றது. அவர் 11-ஆம் நூற்றூண் டின் முற்பகுதியிலிருந்து இருந்தவராகக் கொள்ளலாம். மதுரகவிகளின் மாணவராகிய பராங்குசரை நாதமுனிகள் கண்டதாகப் பரம்பரை கூறுகிறது.

9-ஆம் நூற்றூண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஆழ் வார்க்கும் 11-ஆம் நூற்றூண்டின் முற்பகுதியில் வாழ்ந்த நாதமுனிகட்கும் இடையே 2-நூற்றூண்டுகளே உள்ளன. அக்காலத்து ஆழ்வாரின் மாணவரான மதுரகவிகளும் அவரது மாணவரான பராங்குசரும் வாழ்ந்திருக்க வேண்டும். அன்றியும் பராங்குசர் பலர் கருதுவதுபோல மதுரகவிகளின் மாணவர் பரம்பரையில் அடுத்தவர் என்ப தின்றி அண்மையினராகலாம். நாதமுனிகள் பிரபந்தங் களைத் தேடப் போனபோது "ஆழ்வார்கள் சோதிக்கெழுந் தருளியபின் நெடுங்காலமானவாறே" எனப் பரம்பரை கூறுதலால் இவ்விரு நூற்றூண்டிடையீடு பொருத்த மாகவே தோன்றுகிறது. ஜீயர் 'குலசேகராழ்வார் தோற்றத் தைச் சொல்கையில் 'இங்கே அவதாரக்ரமம் பார்க்கில் நம்மாழ்வார் திருவவதார வைபவம் சொல்லலாயிருக்க' என்கிறார். இதனால் நம்மாழ்வார் குலசேகரர்க்கு முந்திப் பிறந்தவர் எனத்தெரிகிறது.' குலசேகரர்க்குப்பின் நீண்ட காலம் வாழ்ந்து, கடைசியாழ்வாராக விளங்கியமையின் நம்மாழ்வார் வைப்பவத்தை அவர் கடைசியாகச் சொல்லி யிருக்கலாம். குலசேகரர் எட்டாம் நூற்றூண்டிற்குரிய

வர் எனவே நம்மாழ்வார் எட்டாம் நூற்றுண்டிலேயே தோன்றிவிட்டார் எனவாவது கூறலாம். இவ்வகையில் இவரும் மணிவாசகரும் சங்கரரும் ஒருகாலத்தவராகலாம். சங்கரது மாயாவாதம் மிக்க ஞானமுடையதெனப்படும். எனவே சிறந்த தத்துவக் கருத்துக்களைக்கொண்டு பாடி இவர்கள் (ஆழ்வாரும் வாசகரும்) அவ்வாதத்தை எதிர்த் திருக்கலாம். மற்ற ஆழ்வார் நாயன்மாரது பாடல்கள் பக்தியோகத்தைப்பற்றியவெனில் இவர்களது பாடல்கள் ஞானயோகம்பற்றியவாகும். இதனுலேயே இவ்வாழ்வார் ஆசாரியரெனக் கருதப்பட்டார். ஆசார்ய இருதயம் எழுந்தது இவரது நூலுக்கேயாகும். இவரது பாடல்களே பிற்காலத்தில் சமயதத்துவமாகக் கருதப்பட்டன.

## நம்பியாண்டார்

நம்பியாண்டாராலேயே குறிக்கப்படும் அரசன் ஆதித்தன். இவன் முதற் பராந்தகன் தந்தையாகிய முதல் ஆதித்தனே யாவான். வரகுணனைக் கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் (62) குறிக்கிருர். பலர் கருதுமாறு நம்பி, இராசராசன், குலோத்துங்கன் காலத் தில் திருமுறை கண்டவராயின் அவர்களைக் குறிக்கத் தவறியிரார். மற்றும் உத்தமசோழன் காலத்தேயே திரு முறை யோதப்பட்ட குறிப்புக் கிடைத்தலின் திருமுறை வகுப்பை உத்தமனுக்குப் பின் கொண்டுபோக முடியாது. இராசராசன் குலோத்துங்கன் காலத்து இத்தகைய சிறந்த நிகழ்ச்சி நடந்திருப்பின் கிடைக்கும் அவர்களது அளவற்ற கல்வெட்டுக்களில் அதுபற்றிய குறிப்பு பொறிக்கப்பட்டிருக்கும்.

உத்தமசோழனுக்கு முன் இருந்த ஆதித்தப் பெய ருடையவர் மூவர். முதல் ஆதித்தன்; முதற் பராந்தகன் மகன் இராசாதித்தன்; ஆதித்த கரிகாலன். ‡திருமுறை கண்டசோழன், அம்பலம் பொன் வேய்ந்தவன், ஈழத்தை வென்றவன், இராசராச குலசேகரன் என்ற பட்டத்தை யுடையவன், கொடும்பாளூர் உறவுடையவன் என்ற சிறப் புக்களை யுடையனுகக் கூறப்படுகிருன். ஆதித்தகரிகாலன் நீண்டகாலம் வாழவில்லை; திடீரெனக் கொல்லப்பட்டிருக் கிருன். முதல் ஆதித்தன் அம்பலன் பொன் வேய்ந்த தாகவோ கொங்கு நாட்டையும் ஈழத்தையும் வென்ற தாகவோ குறிப்பில்லை. எனவே இராசாதித்தனுக்கே மேற் கூறிய சிறப்புக்கள் பொருந்தி வருகின்றன. ஈழ வெற்றி யும் அம்பலப் பொன் வேய்வும் முதல் பராந்தகன் காலத் தில் நிகழ்ந்தன; அவை இராசாதித்தன் தலைமையிலேயே நடந்தன. இராசாதித்தன் தில்லைக்கருகே திருநாமநல் லூரில் இருந்து ஆண்டுகொண்டிருந்தவன். இவன் நம்பி காலத்திலேயே தக்கோலப்போரில் யானைமீதிருந்து உயி ரிழந்தவன். பராந்தகனுக் கேற்பட்ட கொடுங்கோளுருறவு இவனுக்குமிருந்தது. பாண்டியரையும் ஈழத்தையும் வென்று பராந்தகன் பெருமைகுன்ருமல் விளங்கியமையின் இவன் இராசராசகுலசேகரன் எனப்பட்டான். இவன் ஒரு தனியரசனுகவே ஆண்டிருக்கிருன். சிறந்த சைவன். இவன் மனைவியும் சேனுதிபதியருங்கூட சிறந்த சைவர் கள். திருச்செந்துறைக்கோயில் இவன் மனைவி ஆதித்த பிடாரியால் கட்டப்பட்டது. நாமல்நலூர் இராசாதித்தபுர மெனவும் அவ்வூர்க்கோயில் இராசாதித்தேச்சுரம் எனவும் வழங்குமளவு இவனுட்சி சிறந்திருந்தது.

---

‡ செந்தமிழ்: சோமசுந்தரதேசிகர்.

பராந்தகன் I வீரநாராயணத் தேரியையும் வீரநாராயணபுரத்தையும் உண்டாக்கியவன். வீரநாராயணபுரமென்பது காட்டுமன்னார்கோயில் ஆகும். அவ்வூர்க்குப் போகும் வழியிலேயே பொல்லாப் பிள்ளையாரது திருநாறையூர் உள்ளது. திருமுறை காண்பதற்குக் காரணமானவரும் நம்பியாண்டார் வழிபட்டவரும் இப்பிள்ளையார்தான். இவ்வேரியையும் ஊரையும் உண்டாக்குவதிலும் பொன் வேய்தலிலும் இராசாதித்தனே மிகவுந் துணைபுரிந்தவனாக வேண்டும். எனவே இவ்வழியில் அடிக்கடிச் சென்றுவரும் வாய்ப்புற்றபோது நம்பியாண்டாரது தொடர்புண்டாகி, அதன்வழியே திருமுறைகாணும் நிகழ்ச்சியும் ஏற்பட்டிருக்கவேண்டும்.

இவன் திருநாமநல்லூரிலிருந்து ஆளத் தொடங்கியது கி. பி. 936-இல் என்பர். இறந்தது, 949-இல். இவ்விரண்டெல்லையுள்பட்ட 16-அண்டு காலத்தில் பொன் வேய்வும் திருமுறை கண்டதும் நிகழ்ந்திருக்கலாம். ஆகத் திருமுறை கண்டது கி. பி. 953 வரை யாண்ட பராந்தகன் காலத்தில் நிகழ்ந்திருக்கிறது. வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்த நம்பியது பாடல்கள் 11-ஆம் திருமுறையில் இடம்பெற்றுள்ளன; வீரநாராயணத்தேரி நீரில்விளைந்தன. சம்பந்தர்க்காகப் பல பிரபந்தங்களைப் பாடி அவர்க்கோர் தலைமை தந்துள்ளார். ஒரு பிரபந்தத்தால் அப்பரைச் சிறப்பித்துள்ளார். சுந்தரரை ஏனோ தனியாகப் பாடவில்லை! திருக்கோவையை யடுத்தமையின் இக்காலக் கட்டளைக் கலித்துறைகள் செம்மையுற்று விட்டன. பாடல் கற்பனை வளமும் தெளிவுமுடையன.

## மாணிக்கவாசகர்

கி. பி. 10-ஆம் நூற்றுண்டிலக்கியங்களிற்றுன் முதன் முதல் மாணிக்கவாசகர் குறிக்கப்படுகிறுர். §நம்பியாண்டார் நம்பிகள் மணிவாசகரைத் திருவாசகத்திற்கும் திருக்கோவையாருக்கும் ஆசிரியரென்கிறுர். †10-ஆம் நூற்றுண்டில் திருவிசைப்பா பாடிய சேந்தனுரையமைச்சராகக் கொண்ட பட்டினத்தார்

'வித்தகப் பாடல் முத்திறத்தடியரும்
திருந்தியவன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்'

என மணிவாசகரைக் குறிக்கிறுர். மணிவாசகரைக் குறிக்கும் இவ்விருவரும் வரகுணனையும் பாராட்டுவர். அவர்கள் மூவரைக் குறித்த பின்னரே வரகுணனைக் குறித்தலால் அவன் 9-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவனேயாவான். நம்பியும் தம்காலத்தரசர்களையே பாடலில் குறிக்கின்றுர். நம்பி கி. பி 10-ஆம் நூற்றுண்டின் இடைக்காலத்தவர் எனக் கண்டோம். எனவே 10-ஆம் நூற்றுண்டுக்கு முன்பே மணிவாசகர் காலத்தை யாராய வேண்டும். திருக்கோவையில் மணிவாசகர் வரகுணனைக் குறிக்கிறுர். அவன் நம்பி குறிப்பவனுகவே இருக்க வேண்டும். திருவிளையாடலிற் காணும் வரகுணன் மூவருக்கு முந்தியவனுகலாம், ஆனுல் அவன் வரலாற்றுள் வாதவூரர் பெயரோ நரிபரியாக்கிய கதையோ எதுவும் இணைக்கப்படவில்லை. எனவே இவர் குறிக்கும் வரகுணன் அடுத்து 9-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவனேயாக வேண்டும்.

---

§ கோயில் திருப்பண்ணியர் திருவிருத்தம்-58
† கே. சி. பிள்ளை: 'பட்டினத்தார்'

சுந்தரர் தொண்டத் தொகையில் குறிக்காமையால் வாசகர் மூவருக்கு முந்தியவரல்லர் என்னவே வேண்டும். பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலியோர் தமிழ் நாட்டின ரல்லர், சைவத்திற்காக வாழ்ந்த தொண்டரல்லர், தமிழ் நாட்டைப் பார்க்க வந்தவர்களே. சிலபாடல்களே பாடிய 11-ஆம் திருமுறை யடியார்களையும் பொய்யடிமையில்லாத புலவரெனப் பாராட்டினர் சுந்தரர். எனவே இருபே ரிலக்கியங்களை எழுதி அளப்பிலாத் துன்பமுற்றுச் சிவத் தொண்டாற்றிய மணிவாசகர் தமக்குமுன் இருந்திருப்பின் சுந்தரர் அவரைக் குறிக்கத் தவறியிரார்.

கி. பி. 6-ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்ட கல்லா டமே திருவிளையாடல்களைப்பற்றிய சிறந்த ஆதாரம். அதனில் நரியைப்பரியாக்கியதுபற்றிப் பேசப்படுகிறதே யன்றி அங்கு மணிவாசகர் பெயர் இணைக்கப்படவில்லை. பாண்டியனுக்குச் சுரந்தீர்த்த சம்பந்தர் பெயர் அங்கில்லை. எனவே பிற்காலத்தில் இந்நிகழ்ச்சிகளுடன் சம்பந்தர் மணிவாசகர் ஆகியோர் பெயர்கள் தொடர்புறுத்தப்பட் டுள்ளன என்பது உணரப்படும். ஆனல் திருவிளையாட லில் இவ்விருவரைப்பற்றிய நிகழ்ச்சிகளும் முன்பின் அமைந்துவிட்டன. அதனுல் சம்பந்தர்க்கு முந்தியவரோ மணிவாசகர் எனக் கருதவேண்டி வந்தது. ஆனல் உண்மை வேறு; நரியைக் குதிரை செய்வானும் என்ற தேவாரத்தாலும், நரி பரியாக்கியது கல்லாடத்திற் காணப் படலாலும் அது. பழமையுடையதாகலின் முதல் வைக்கப் பட்டது, எனவே அக்கதையோடிணைந்த மணிவாசகரும் முன்னவரானர். பின்னல் இணைக்கப்பட்ட சமணரை வென்றது, சுரந்தீர்த்தது ஆகிய திருவிளையாடல்களுடன் இணைந்த சம்பந்தர் பின்னவரானர். இந்நிகழ்ச்சிகள்

கல்லாடத்தில் இல்லை. 9-ஆம் நூற்றுண்டிற்குரிய மணி வாசகர் திருவிளையாடலில் சம்பந்தர்க்கு முன்னே வைக்கப் பட்டதன் காரணமிதுவேயாகும். சம்பந்தர்க்குச் சற்று முன்னவர் மணிவாசகரென்றால் அவரைத் திருத்தொண் டத்தொகையில் சுந்தரர் தவருமல் பாடியிருப்பார். எனவே இருவரது வரலாறுகளும் திருவிளையாடலில் பின் முன்னுக அமைந்தனவென்பது பொருத்தமேயாகும். 'அம்பொற்பொலிதரு புலியூர்ப்பொது' எனத் தில்லைப் பொன்னம்பலத்தைக் குறிக்கிருர் மணிவாசகர். இது, பராந்தகன் கி. பி. 10-ஆம் நூற்றுண்டில் அம்பலத்திற்குப் பொன்வேய்ந்த பிறகு பாடப்பட்டதனைக் குறிக்கலாம்.

ஒன்பதாம் திருமுறைப் பாடல்களை மிகுதியும் திருவாசகம் ஒத்திருக்கின்றது. சொற்களும் பொருளும் பெரிதும் ஒற்றுமையுடையன. மகேந்திரமலையை இரண்டு நூல்களும் முதலாவதாகப் பாராட்டுகின்றன. தேவாரத் தில் இக்குறிப்பில்லை. சொற்கள் பலவும் பாடலமைப்பும் இரண்டற்கும் பொதுவாயுள்ளன. 9-ஆம் திருமுறையில் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பாடிய அடியவர்களும் பெரிதும் 10—11-ஆம் நூற்றுண்டுக்குரியவர்களே. அவர்கள் மூவரைப் பாடுகையில் நாலாமவராக மணி வாசகரைக் குறிக்காமையால் இவரும் அவர்கள் காலத் தண்மையில் வாழ்ந்திருக்க வேண்டும்; பெயர் அவ்வள வாகப்பரவவில்லை யென்பதாம்.

வாசகரை வீரசைவர் எனக் கருதுவாரும் உண்டு. வீரசைவர் திருவாசகத்தையே வேதமாகக் கருதுபவர்கள். வீ பத்திரர் பெயர் திருவாசகத்தில் அடிக்கடி வருகின்றது. தக்கயாகக் குறிப்புக்களும் மிகுதியாகப் பேசப்படுகின்றன.

திருவிளையாடலில் நரி பரியாக்கிய படலத்தில் குதிரைச் சேவகன் முஸ்லீமாகவும் மக்கவாசியாகவும் காட்சியளிக்கிறான். முஸ்லீம்கள் முதன் முதல் இந்தியாவில் கி. பி. 7-ஆம் நூற்றாண்டிலேயே சிந்துவில் காலடிவைத்தனர். ஆகவே இக்குறிப்பைக்கொண்டு நரி பரியாக்கிய திருவிளையாடலை 7-ஆம் நூற்றாண்டுக்குப்பின்பே கொண்டுசெல்ல வேண்டும். இக்குதிரை வாணிபத்தினையும் அரபியர் தொடர்பினையும் பற்றி 13-ஆம் நூற்றாண்டின் கடைசியிலேயே மார்க்கபோலோ பேசுகிறான். திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி முதலிய இலக்கியத் துறைகள் ஆண்டாள்காலத்தை நினைவூட்டுகின்றன. திருவுந்தியார், பொற்சுண்ணம், பொன்னூசல், திருப்பூவல்லி முதலிய துறைகள் பிற்காலப் பிரபந்தங்களுக் குரியவாகவே காணப்படுகின்றன.

கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் சங்கரரது மாயாவாதம் நாட்டில் பெரிதும் பரவியிருந்தது. அதற்குரிய குறிப்பு திருவாசகத்தில் 'மிண்டிய மாயாவாதமெனும் சண்ட மாருதம்' எனக் காணப்படலால் இவரைச் சங்கரருக்குப் பிற்பட்டவர் எனக்கருத இடமிருக்கின்றது. சங்கரர் 8-ஆம் நூற்றாண்டவரெனத் தத்துவாசிரியர் கூறுவர். வரகுணனென்பவன் முதல் வரகுணனேயெனப் பலர் கருதுவதிற் பொருத்தமிருக்கின்றது. அவன் எட்டாம் நூற்றாண்டுக்கடைசியில் இருந்தவன்; சிறந்த வெற்றியும் ஆட்சியுமுடையவனுயிருந்தவன். II வரகுணனைப்பற்றி அதிகச் செய்தி கிடைக்கவில்லை; கிடைக்கும் ஓரிரண்டு கல்வெட்டுக்களில் அவன் தோல்வியுடையவனுகக் குறிப்புள்ளது. †அரிகேசரியாய் போற்றி (திருவாசகம்) யென்பதில் அரசக் குறிப்பிருப்பதாகக் கொள்வதிற் குறையில்லை.

† போற்றித் திருவகவல்—190;

பராந்தக நெடுஞ்சடையனுக்கு முன்பாண்ட II இராச சிம்மன் ஒரு அரிகேசரி பட்டமுடையவன். அரிமர்த்தனன் என்ற திருவிளையாடற் பெயருக்கும் அரிகேசரி இராச சிம்மன் என்ற பெருக்கும் ஏதோ வொற்றுமையில்லாம லில்லை. எனவே மாணிக்கவாசகர் II இராசசிம்மன் காலத்திலும் I வரகுணன் காலத்திலும் இருந்தவராக லாம். †எனவே 8-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிக்கு அவரது காலம் செல்கின்றது.

இவரது பாடல்துறைகளில் 'அச்சோ, தும்பிபறத்தல், குயில்' போன்றனவும் வேறு பலவும் இக்காலப் பெரி யாழ்வார், சித்தர் முதலியோர் பாடல்களில் காணப்படு கின்றன. பராந்தகநெடுஞ்சடையன், வரகுணன் I முதலோர் காலத்திவர்கள் இருந்திருக்கக்கூடுமாகவின் நெடுஞ்சடையன் முதலோர் மதமாறினர் என்பதினும் இவ் வரசர் சமயப்பொதுமை யுடையோராக இருந்திருக்கலாம்.

## பாரதவெண்பா

இந்நூல் தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்தில் கி. பி. 9-ஆம் நூற்றுண்டில் இயற்றப்பட்டது. ஆசிரியரே நந்திவர்மனைத் தமது பாடல்களில் குறிக்கிருர். பாரதம் பாடிய பெருந்தேவனுரினும் இப்பெருந்தேவனுர் வேருன வர் என முன்பும் கூறினேம். இந்நூல் பாட்டும் உரையும் கலந்தது. சம்பு காவியம் எனப்படும் உரை யிடப்பட்ட பாட்டுடைச் செய்யுளமைப்பில் இது காணப் படவில்லை என்பதனைச் சிலப்பதிகாரத்தை ஒப்பிட்டறிய லாம். இதிலுள்ளஉரை பாடலுக்குரைபோலவும் அடுத்த பாடலுக்கிடையுள்ள கதை விளக்கமாகவும் அமைந்துள்

† ஔவை. சைவ இலக்கிய வரலாறு.

ளது. இந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை, ஏதோ ஒரு பகுதியே கிடைக்கிறது. நான்காஞ்சங்கப் பெருந்தேவனுர் ஆசிரியத்தில் பாரதம் பாடியமையின் இவர் வெண்பாவி லொன்றியற்றினுராகலாம்; அன்றி அது வழக்கிழந்திருக்க லாம். தமிழ் மக்களை இராமாயணத்தினும் பாரதம் மிகுதி யும் கவர்ந்துள்ளது. பல்லவரும் பிற தமிழரசரும் பாரதம் படிக்க நிறைய நிலங்கள் அளித்துள்ளனர். பாரதம் வாழ்க்கையின் பல துறைகளையும் தொடுவதாகும். பாண்டவர்ரத முதலியன மாபலிபுரச் சிற்பத்துள் பேர்போனவை.

## நந்திக்கலம்பகம்

இதுவும் நந்திவர்மன் II காலத்தில் அவன்பேரி லேயே இயற்றப்பட்டது. ‡இதன்கடைசிப்பாடலைப் புலவ ரெல்லாம் பாராட்டி மகிழ்வர். நந்திவர்மனது நூற்றுண் டும் நந்திவர்மனும் இனிய இலக்கியங்கள் பலதோன்று தற்குக் காரணமானவர்கள். இவன் சிறந்தகொடையாளி யென அறிகிறோம்; கடையெழு வள்ளல் வரிசையில் வைக்கத்தக்கவனுகலாம். தமிழுக்காக்கந்தந்த பல்லவருட் சிறந்தவன். இவனைக்கொல்லுதற்காகவே பகைவனெரு வனுல் நந்திக்கலம்பகம் பாடப்பட்டதென்பர். ஈமச்சிதை

---

‡ 'வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியினை யடைந்தாள்
செந்தழல் அடைந்ததுன் தேகம்
யானுமென் கலியும் எங்ஙனே புகுவோம்
எந்தையே நந்தி நாயகனே'

யடுக்கி அதன்மேலிருந்து 100-பாடல்களேயும் கேட்டதாக வும் கடைசிபாடலில் அவன் இறந்துவிட்டதாகவும் கதை கூறப்படும். பாடல்களின் இனிமையைப் புலப்படுத்தவோ, உயிரையுமீந்து இலக்கியங்களே வளர்த்ததனைப் புலப் படுத்தவோ இக்கதை கட்டப்பட்டது! எப்படியும் நந்தியின் காலம் இலக்கியத்திற்கு ஒரு நல்லகாலம். பாண்டியர்க் குக்கோவைகளும் சோழர்க்குலாக்களும் இருத்தல்போலப் பல்லவர்க்கு இது வ ர லா ற் று நூலெனலாம். நந்தி, சோழருள் 'பராந்தகன்' போன்றவன். பல்லவர் வர லாற்றைப் பலவாருக இந்நூலறிவிக்கின்றது. கலம்பகம், இந்நூலிலிருந்துதான் தோன்றுகின்றது. பாடலில் பிரிவு களும், உறுப்புக்களும் அணிகளும் பலவாக விரிந்தபின் அவற்றைக் கதம்பமாக்கி மகிழ்வதே கலம்பகம். இக் காலத்தே பிள்ளேத்தமிழும் தோன்றியிருக்கலாம். ஆழ் வார், 11-ஆம் திருமுறைப்பாடல்களில் சப்பாணி, செங் கீரைப்பருவங்கள் குறிக்கப்படுகின்றன. விநாயகன், முருகன், கண்ணன் இவர்களேக் குழந்தைகளாக வழி பட்டமையின் விளேவாகும் இது.

# 10–12 - நூற்ருண்டுகள்

## சோழர் காலம்

## (பத்தாம் நூற்ருண்டு)

### 9-ஆம் திருமுறை:

கருவூர்த்தேவர் முதலிய 9-தொண்டர்கள் பாடிய பாடல்களை 9-ஆம் திருமுறையாக வகுத்தனா. இவர்கள் பெரிதும் 10—11-ஆம் நூற்ருண்டுகளில் இருந்தவர்கள். மணிவாசகர் பாடல்களை 8-ஆம் திருமுறையாக்கியமையால் இவ்விரண்டினமைப்பளவில், திருவிசைப்பா ஆசிரியர்க் கடுத்த முற்காலத்தவர் மணிவாசகர் என்பது உணரப் படும். இத்திருமுறையாசிரியர்கள் இராசராசேச்சுரத்தை யும் கங்கைகொண்டசோழேச்சுரத்தையும் பாடியுள்ளனர். கருவூர்த்தேவர் இவ்விரு கோயில்களையும் பாடியவரென் பது தெளிவாகத்தெரிகின்றது. எனவே 10—11-ஆம் நூற்ருண்டுகளில் வாழ்ந்திருந்தவராவார். §கருவூர்த் தேவரும் திருமாளிகைத்வேரும் ஒருகாலத்தவரெனத் தெரிகின்றது. சேந்தனும் திருமாளிகைத்தேவரும் தில்லையில் ஓடாமல் நின்ற தேரை ஓடச்செய்தனரெனக் கூறப்படுகின்றது. இவரிருவரைப்பற்றிய கல்வெட்டொன்று திருவீழிமிழலையிற் கிடைத்துள்ளது. எனவே இவர்களும் கருவூர்த்தேவர் காலத்தவராவர். கண்டராதித்தர் என்பவர் I பராந்தகன் மகனுய்ச் சிறந்த சைவராய் விளங்கிய சோழவரசரேயாக வேண்டும். 'தென்னுடும் ஈழமும் கொண்ட' எனப்பராந்தகனதுவெற்றியைஇவர்தம்பாடலிற்

---

§ கே. எஸ். பிள்ளை: இ. வ. II

குறிக்கிறார். திருவாலியமுதனாரும், பூந்துருத்திக்காடவ நம்பியும் மூவரையும் தம் பாடலிற் குறிக்கின்றனர்.

இவர்களது பாடல்கள் ஒரே அமைப்புடையன; திருவாசகத்துடன் நெருங்கிய ஒற்றுமையுடையவென முன்பும் கூறப்பட்டது. பாடல்கள் ஒழுகிய நடையும், கசிவும், நீண்ட பாடல்களாகலின் நெஞ்சத்தைப்பிணித்தலும் உடையன. இவரது பாடல்களும் பட்டினத்தார் சிவவாக்கியர் முதலோரது பாடல்களுமே 10—11-ஆம் நூற்றாண்டுச் சைவத்தை வளர்த்தன. நால்வர் பாடல்களைப்படித்த தேர்ச்சி இப்பாடல்களிற் காணப்படுகின்றது. 'பெரியாழ்வார் பாடலிற் பல்லாண்டு' சிறந்தது; வழியாக 9-ஆம் திருமுறைப்பகுதியே 'திருப்பல்லாண்டாயிற்று'.

## பட்டினத்தடிகள்

இவர் தம் பாடல்களில் வரகுணனைப் பாராட்டுதலால் கி. பி. 9-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னவர் எனவறியலாம். 10-நூற்றாண்டுத் திருவிசைப்பாவாசிரியரான சேந்தனாரைத் அமைச்சராகக்கொண்டவர் என அறிதலால் இவர் காலமும் 10-ஆம் நூற்றாண்டேயாகும். ‡இவரது பாடலும் நம்பியாண்டாரது பாட்லுமே மணிவாசகர் கால ஆராய்ச்சிக்குப் பெருந்துணை செய்கின்றன. இவரிருவரதுபாடல்களும் 11-ஆம்திருமுறையில் வைக்கப்

‡ வித்தகப்பாடல் முத்திறத்தடியரும்
திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும்
பெருகிய அன்பின் வரகுணதேவரும்.
சித்தமார் சிவவாக்கியரும்

—திருவிடை......கோவை.

பட்டன. இவர்கள் 10-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராகலாம்; திருவிசைப்பா ஆசிரியர்கள் 11-ஆம் நூற்றுண்டிலும் இருந்துள்ளனர்.

சிவவர்க்கியரை, இவர் தம் பாடலில் மணிவாசக ருக்குப்பின் பாராட்டுதலால் அவரும் 10-ஆம்நூற்றுண்டுக் குரியவராவார். சிவவாக்கியர் ஒருயோகி; சந்தப்பாடல் களைப் பாடியவர். இவரது பாடல்களும் திருமழிசை யாழ்வார் பாடல்களும் சந்தவொற்றுமை யுடைமையால் இருவரையும் ஒன்ருக்கிக் குழப்புகின்றன பரம்பரைக் கதைகளும். ஆனல் திருமழிசையும் சிவவாக்கியரும் வேருனவர்களே. தொடர்பில்லாத பலகாலத்தவரிடையே யும் பாடல்கள் ஒற்றுமையுடையவாய்க் காணப்படலாம். சந்தப்பாடல்களை வில்லிபுத்தூராரும் பாடியுள்ளார். பட்டினத்தார் பாடல் என வழங்கும் பாடல்களைப்பாடிய வரும் வேறு வேருனவராகக் கருதப்படுவர். பிற்காலத்த வரது பாடல்கள் திருமுறையில் இடம் பெருமையே அதற்குக் காரணமாகலாம். பத்ரகிரியாரும் பின்னவரும் ஒருகாலத்தவர்கள். இவரிருவரும் தாயுமானவரும், 'கண் ணிப்பாடல்களினுல் உள்ளத்தையுருக்கி யுயிர்க்கு நல்வழி காட்டியவராவர். திருமுறையில் பட்டினத்தாரது பாடல்கள் எளிமையும் தெளிவுமுடையன, எனவே இனிமையும் கசிவுமுடையவாகின்றன. 9-ஆம் நூற்றுண்டுடன் ஆழ் வார் நாயன்மார் காலம் முடிந்துவிட்டதென்னலாம். 10—11-பட்டினத்தாரனைய தனியடியார் காலம். இக் காலச் சைவத்திற்கிலக்கியமீந்தவர் இவர்களேயாவர்.

## சித்தர்கள்

அகத்தியர், திருமூலர் முதலோர் சித்தர் தலைவர்க ளாகக் கூறப்படுகின்றனர், நான்காஞ்சங்க காலத்தில் கி. பி. 5-ஆம் நூற்றுண்டளவில் வாழ்ந்த அகத்தியரே இத்தலைவராகலாம். திருவிளையாடலில் நக்கீரர்க்கு இலக் கணமுபதேசித்தவர் இவரேயாகலாம். இவர்க்கடுத்த திருமூலர் நான்காஞ் சங்கத்திருந்தவரே யென்பது திரு மந்திரப் பாடல்களால் அறியலாம். அங்குக் குறிப்பிட்ட இடைக்காடரே சித்தருட் குறிக்கப்படுபவரும் ஆகலாம். வள்ளுவமாலைக்குப் பிற்சேர்க்கையிலும், இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலத்திலும் குறிக்கப்படுபவர் அவரே யாகலாம். 10-ஆம் நூற்றுண்டில் முன்பு குறித்த சிவ வாக்கியரும் சித்தருள் ஒருவர். மற்றும் நாடறிந்த பெயர் களான அகப்பேய், குதம்பேய், பாம்பாட்டி, தேரையர், தன்வந்திரி, கோரக்கர், மச்சமுனி, சட்டைமுனி, கமல முனி முதலியோரும் 18-சித்தர் என்ற பரம்பரையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் சரியை கிரியைகளைச் சிறிது வெறுத்து யோக ஞான நெறிகளையே பற்றுக்கோடாகக் கொண்டவர்கள். உருவ வழிபாடு, நித்திய பூசைக்கிரி யைகள் முதலியவற்றை வெறுத்தவர்கள். சமயங்களை யும், கட்டுப்பாடுகளையும் கடந்தவர்கள். மக்களனைவரை யும் ஒன்றெனத்ததழுவிய பொதுமையுள்ளம் படைத்த வர்கள். உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான், உயிரை வளர்க்க உடம்பை வளர்க்கவேண்டுமென்னும் கோட்பாடுடையவர்கள் ஆகலின் வைத்தியம், மந்திரம், தந்திரம், சோதிடம் முதலிய அறிவியல் துறைகளிலும் தேர்ச்சிகொண்டு வாழ்ந்தவர்கள்.

இவர்களது பாடல்கள் வரலாற்றிற்குப் பெரிதும் துணைபுரிவன. வைத்தியம் சோதிடம் என எதுபற்றிய வேனும் இவர்களது பாடல்களைத் தொகுக்கும் முயற்சி யொன்று நாட்டில் தோன்றுமானால் அது மிகப்பயனுடைய தாகும். இவர்கள் பெரிதும் பத்தாம் நூற்றாண்டுக்குரிய வர்கள். சிற்றூர்களில் காணும் முனீஸ்வரர் கோயில்கள் இவர்களை வழிபடுதற்காகவே அமைந்தனவாகவேண்டும். பாடலிலும் கருத்திலும் இந்நூற்றாண்டின் புரட்சிக்கவிகள், தேசியக்கவிகள், புதுமைக்கவிகள் எனப்படுவோர்க்கு உணர்ச்சியும் வழிகாட்டியுமாயவர்கள் †இச்சித்தர்களே யாவர். இவர்களது பாடல்கள் பரதேசிகளால் பார்-மக்களனைவர்க்கும் பாடப்பட்டு வந்தன. எனவே பொது மக்களைக்கவர நினைத்த புதுக்கவிஞர்கள் சித்தர் நடையைப் பின்பற்றினர். இக்காலப் பாடல்கள் பாவிலக்கணத்துள்

---

† "தைத்தாளம் ஏதுக்கடீ; பல்லாக்கு
ஏதுக்கடீ—குதம்பாய்"
"தாவாரமில்லைத் தனக்கொரு வீடில்லை
தேவார மேதுக்கடீ—குதம்பாய்"
"எட்டுமலைகளைப் பந்தாயெடுத் தெறிவோம்
ஏழுகடலையுங்குடித் தேப்பம் விடுவோம்
செப்பரிய மூன்றுலகும் செம்பொன்னாக்குவோம்
நாதனுடன் சமமாக நாங்கள் வாழ்வோம்"
—பாம்பாட்டி.
"போற்றுஞ்சடங்கை நண்ணாதே"
கஞ்சா புகை பிடியாதே—வெறி
காட்டி மயங்கிக் கட்குடியாதே
அஞ்ச உயிர் மடியாதே—புத்தி
அற்றவரஞ்ஞான நூல்படியாதே"
"கள்ளவேடம் புனையாதே" —கடுவெளி.

எவ்வகையதென இன்னும் திட்டப்படுத்தவில்லே. ஆனல் சித்தரது பாடல் வகைகளும் இவையும் ஓரேயாப்பமைதி யுடையன; ஒருவித சிந்துநடையெனலாம். படித்தபிறகு, சித்தரது புரட்சி மனப்பான்மையை இன்னும் நாம் எட்டிப்பிடிக்கவில்லே எனத் தோன்றுகின்றது. பாரதியார்–தாசன் ஆகியோரது பாடலுணர்ச்சியிலும் பீறிட்டெழுகின்றது சித்தரதுணர்ச்சியெனவேண்டும்.

## சூடாமணி நிகண்டு

இந்நிகண்டின் ஆசிரியர் மண்டலபுருடர். இவரது ஆசிரியர் குணபத்திரர். குணபத்திரரே வடமொழியில் மாபுராணம் எழுதியவர். அதனில் கி.பி. 898-ல் அகால வருடன்காலத்தில் அப்புராணம் முடிந்ததாகக் கூறுகிருர். இதனுல் மண்டலபுருடர் காலம் 10-ஆம் நூற்ருண்டு என்ருகின்றது. அமோகவர்ஷன், குணபத்ரர் முதலிய ஜைனர்களே ஆதரித்ததனே வின்சன்ட்ஸ்மித் போன்ற சரித்திர ஆசிரியரே குறிப்பிடுகின்றனர்.

சூடாமணியார் தம் நூலில் அவ்வரசனேக் கிருட்டின ராயன் என்கிருர். இதனேப் பலர் கிருஷ்ணதேவராயன் என்ற தெலுங்கரசனுகக் கொள்கின்றனர். அவன் ஜைனனுமல்லன், அவர்களே யாதரித்தவனுமல்லன். தமிழை வளர்த்தலில் அவற்கவ்வளவு ஊக்கமும் இருந்த தில்லே. அமோகவர்ஷன் தமிழை வளர்த்த ஜைனப் புலவரை ஆதரித்துள்ளான், இக்கருத்தினேக்கூறும் திரு. சீனிவாசப்பிள்ளே யவர்களது முடிவுஏற்றுக்கொள்ளத்தக்க தேயாம்.மற்றும் சளுக்கியர் பெயர் சூடாமணி நிகண்டில் குறிக்கப்படாமையால் அவர்கள் மறைந்ததும் மாயாவாதம் பற்றிய குறிப்புக் காணப்படலால் அது தோன்றியதுமாகிய 8-ஆம் நூற்ருண்டுக்குப் பிற்பட்டவர் என்பதுபொருத்தமே.

# பதிஞேராம் நூற்ருண்டு

## யாப்பருங்கலம்

இதன் ஆசிரியர் அமிதசாகரர். நூற்பாயிரத்தில் அளப்பருங்கடற் பெயர் அருந்தவத்தோன் எனக் காணப் படுகிறது. இவர் ஜைனரெனவும், தென்றேயத்தில் விளங்கிய திரமிள சங்கத்தில் நந்திகணத்திற்குரிய அருங் கலான்வயத்திற்குரியரெனவும் கூறப்படுகிருர். இவ்வருங் கலான் வயத்தார் திருவாரூர்க் கடுத்துள்ள தீபங்குடியராக முதலில் இருந்திருக்கவேண்டும். அருங்கலான் வயத்தில் தோன்றியதால் அருங்கலம் எனப் பெயர் பெற்றது. இவ் வகுப்பினர் புகழ் பரவியது கி. பி 10-ஆம் நூற்ருண்டாக லின் அதுவே அமிதசாகரர் காலமாகலாமெனக் கருதப்படு கிறது. அதற்கேற்ப (1070—1118) குலோத்துங்கனது நீடூர்ச் சிவன்கோயிற் சாசனமொன்றில் அமிதசாகரர் ஒருவர் இருந்ததாகக் கூறப்படுகிறது. இதில் குறிக்கப் படுபவரும் யாப்பருங்கலத்தாரும் ஒருவரே யாகலாம். இதன்படி அமிதசாகரர் 11-ஆம் நூற்ருண்டவராகிருர். யாப்பருங்கலக்காரிகையியற்றியவரும் இவரே. வீர சோழியம், இளம்பூரணம், மயிலைநாதருரை முதலிய வற்றில் யாப்பருங்கலக் குறிப்பு காணப்படுகின்றது. உரையாசிரியர்க் கெல்லாம் இந்நூல் மிகப்பயன்பட்டிருந் துள்ளது. சந்தம், தாண்டகம் முதலிய பிற்காலப் பாடற் றுறைகளுக்கு இலக்கணங் கூறுதலாலும் இதனுரை, பழமைக் குறிப்புக்கள் பலவற்றிற் கிடமாக இருப்பதாலும் இந்நூல் ஆராய்ச்சியாளரால் போற்றப்படுகின்றது. மற்ற படி கற்போர்க்குக் காரிகையே பயன்படுகின்றது. இதனை

யாப்பிலக்கணத்திற்கோர் செம்மையான இலக்கண மென்னலாம்.

## நாதமுனிகள்

கங்கைகொண்ட சோழபுரம் முதல் இராசேந்திரன் காலத்தில் ஏற்பட்டது. அந்நகரத்தரசனை நாதமுனிகள் கண்டு பிரபந்தங்களுக்குப் பண்ணமைப்புப் பற்றிப் பேசி யிருக்கிறார். எனவே அவர் 11-ஆம் நூற்றாண்டில் இருந் திருக்கிறார். பண்ணமைப்பு 11-ஆம் நூற்றாண்டிலாயினும் நாதமுனிகளின் காலமும் பிரபந்தங்களைக் கண்டதும் பத்தாம் நூற்றாண்டிற்குரிய நிகழ்ச்சிகளாகக் கொள்ளலாம். நம்பியாண்டார் திருமுறை கண்டதும் இந்நூற்றாண்டிலே யாம். இவ்விருவகை இலக்கியங்களையும் வெளிப்படுத்திய நெறியில் ஒற்றுமையுள்ளது. தேவாரங்கள் ஏடுகளில் எழுதப்பட்டு வழக்கிழந்து மறைந்துகிடந்தன. பிரபந் தங்கள் மனப்பாடமாகவே இருந்தனவாக வறிகிறோம். †வடதேசத்திலிருந்து வந்த அடியார்கள் திருவாய்மொழி யில் 1 பதிகத்தையே மனப்பாடமாக்கி நாதமுனியிடம் கூறி யுள்ளனர். மற்ற யாவும் தெரியாதெனக் கூறியுள்ளனர். அவற்றை யெல்லாம், திருக்குருகூரில் நம்மாழ்வார் உருவத்தின்முன், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பாடலை நாதமுனிகள் கூறி நினைந்து நின்றபோது, ஆழ்வாரே அசரீரியாகக் கூறியதாகப் பரம்பரை யுள்ளது.

*திருவாய்மொழியின் ஒரு பதிகமே அடியார்களுக்கு நினைவிருந்ததாலும், நம்மாழ்வார் மற்ற 3000 பாடல் களையும் நாதமுனிகட் கருளினரெனக் கூறப்படுவதாலும் கடைசியில் வாழ்ந்த ஆழ்வார் நம்மாழ்வாரே யாகலாம்.

---

* குருபரம்பரை.

எனக்கருதவேண்டி யுள்ளது. நம்மாழ்வார் உயிரோ டிருந்த காலத்தில் மற்றவர் பாடல்களும் அவர்க்கு மனப் பாடமாகி யிருக்கவேண்டும். 'திருவாய் மொழியைமட்டு மின்றி மற்றுமுள்ள பிரபந்தங்களேயும்' ஆழ்வாரிடம் அருளுமாறு நாதமுனிகள் கேட்டுக்கொண்டதாகப் பரம் பரை கூறுவதிலும் நம்மாழ்வார் கடைசியிலிருந்தவர் என்ற குறிப்பு உணரப்படுகிறது; இன்றேலவர் மற்ற ஆழ்வார் களேக் கேட்டிருக்கலாம்.

நம்மாழ்வாரது மாணவர் மதுரகவிகள். அவரது மாணவர் பராங்குசர். அவரைக்கண்டே பிரபந்தங் களேப் பற்றி நாதமுனிகள் கேட்டிருக்கிருர். நம்மாழ்வார் 9-ஆம் நூற்ருண்டெனக் கூறப்பட்டது. அவரது இரண்டு மாணவத் தலைமுறையைத்தாண்டிய நாதமுனிகள் 11-ஆம் நூற்ருண்டுக்குரியவர் எனல் பொருத்தமேயாகும். நாத முனிகளும் நம்பியாண்டாரும் தமிழிலக்கியத்தில் புதைந்து போன செல்வங்களேத் தோண்டி யெடுத்துதவியவர்கள். கி. பி. 12-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த கம்பர் நாதமுனிகள் தலைமையில் திருவரங்கத்தில் இராம காதையை அரங் கேற்றியதாக (விநோதரசமஞ்சரி)ஒரு செய்தியுள்ளது; அப்படியாயின் நாதமுனிகள் 11, 12-ஆம் நூற்ருண்டுகட் குரியராகவேண்டும்; பராங்குசர் மதுரகவிகளின் அடுத்த வரென்பதின்றி அண்மையினராய மாணவர்ப் பரம்பரை யினராகவேண்டும்.

## வீரசோழியம்

இவ்விலக்கணம் வீரசோழன் (1063 — 1070) காலத்தில் புத்தமித்திரரால் இயற்றப்பெற்றது என்பது பெயராலேயே விளங்கும். ஐந்திலக்கணத்தையும்பற்றிக் கூறும் சிறிய நூல் இதுவாகும். இதுவே 'ழகரத்திற்கு

முன் வல்லினம் வரின் 'டகாரமாகத்திரியும் எனப் புணர்ச்சி விதி கூறிய இலக்கணநூல். ஐந்திலக்கணம் எழுதப்போய் ஓரிலக்கணமும் திறம்பெறவில்லை. நன்னூல், காரிகை, தண்டி, நம்பியகப்பொருள், புறப் பொருள் வெண்பாமாலை முதலியன ஐந்திலக்கணத்தை யும் விரிவாகக் கூறியமையின் இதனெளி குன்றிவிட்டது. இதுவும் நேமிநாத முதலியனவும் வடமொழி இலக்கணங் களுடன் ஒப்பிட்டுக்கூறத் தொடங்கியவையாகும். அவ் வொப்பீடு மக்களுக்குப் பிடிக்காமல் காலப்போக்கில் நூல் மறக்கப்பட்டு வருகின்றது. இதற்குப் பெருந்தேவனர் என்பவர் உரை யெழுதியுள்ளார். இவர் நான்காம் பெருந்தேவனராகலாம்.

## கந்தபுராணம்

ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியார் காஞ்சிக்குமர கோட்டத்தில் பூசனை செய்யுமுரிமையில் இருந்தவர். 'திகடச்சக்கர' என்ற தொடரைக் கொண்டு புராணம் தொடங்குகின்றது. திகழ்—தசக்கரம் என்பது இவ்வாறு புணர்தற்குரிய விதி வீரசோழியத்தில் இருப்பதாக முன்பு கூறப்பட்டது. இத்தொடரைக் கொண்டு பலரும் இந் நூலுக்குத் தடையெழுப்ப ஆசிரியர் வீரசோழியத்தை எடுத்துக்காட்டி அவர்கட்கமைதி கூறினரென்பர். எனவே இது 11-ஆம் நூற்ருண்டுக் கடைசியில் அல்லது 12-ஆம் நூற்ருண்டில் இயற்றப்பட்டதாகும். புராணம் 6-காண்டங் களை யுடையது. பதினுயிரத்திற்கு மேற்பட்ட பாடல்கள் எளிமையும் அழகும் ஒழுக்கமுமுடையன. இக்காலத் தேயே வைணவத்திற்குக் கம்பரது இராமாயணம் தோன்றியது. பரணி முதலிய 'போர், வீரம், வெற்றி' ஆயவைபற்றிய இலக்கியங்கள் மிகுந்தகாலம் இதுவாகும்.

# பன்னிரண்டாம் நூற்றுண்டு

## கலிங்கத்துப்பரணி

பரணிக்கோர் ஜெயங்கொண்டார் என இவ்வாசிரியர் பெயரும் நூலின் சிறப்பும் புலனுகின்றன. தொல்காப்பியப் புறத்திணையியலுக்கும் புறப்பொருள் வெண்பாமாலைக்கும் இலக்கியங்கள் இத்தகைய நூல்களெனலாம். களவழி நாற்பதும் இவ்வகைப்பட்டதே. போர்க்கடவுள் காளியென்ற வழக்கு இந்நூலில் விளக்கமடைகின்றது. புறப்பொருள் வெண்பாமாலையிற் குறிப்பிடப்படும் பேய்கள் இங்கு விரிவாக வருணிக்கப்படுகின்றன. பாடல்கள் நயமும் கற்பனையுமுடையன. முதற் குலோத்துங்கனது கலிங்கவெற்றியைப் பாராட்டி 11-ஆம் நூற்றுண்டுக் கடைசியில் எழுதப்பட்டது. தமிழிலக்கியத்துப் பிரபந்தகாலம் இப்போதிருந்தே தொடங்குகின்றது. மாலை வருணனையும் தலைவியர் ஊடல்தீர்க்கும் பகுதியும் மிக்கசுவையுடையன. அகநானூறு கலித்தொகை முதலிய நூல்களில்காணும் பாலைவருணனைகளும் இந்நூலில் §பாலைவருணனையும் ஒப்பிட்டுப் படித்தின்புறத்தக்கன. "முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும் திருகிச்செருகும் குழன்மடவீர்" என்ற கற்பனையில் முருகன் நினைக்கப்படுவது, இது கச்சியப்பர் கந்தபுராணம் பாடிய 'முருகன்புகழ்பரவிய' காலமென்பதனைக்குறிக்கும்.

---

§ 'காடிதனைக் கடத்துமெனக் கருமுகிலும் வெண்மதியும் கடக்கவப்பால்
ஓடியிளைத்துடல் வியர்த்த வியர்வன்றே உருபுனலும் பனியுமையே.

கம்பன் இராமாயணம் பாடிய காலமிது வென்பதனை "அணிகொண்ட குரங்கினங்கள் அலைகடலுக் கப்பாலே மணலொன்று காணுமல் வரையெடுத்து மயங்கினவே" என்ற கற்பனை நினைவூட்டுகின்றது. இதே காலத்தில் ஒட்டக்கூத்தர் தக்கயாகப் பரணி பாடினுர். ஆனால் இது குலோத்துங்கன் போன்ற பேரரசனைப் பற்றியதாகலானும் ‡கற்பனை வளத்தில் வெற்றி கொண்டதாலும் மக்கள் உள்ளத்தில் நிலைப்பதாயிற்று. ஆசிரியர் சேக்கிழார் போன்று அரசியல் செல்வாக்குடையவர் என்பது மற்றென்று. பரணி பிரபந்தம், இதிலிருந்து மறப்போர்கள் மலிந்துவிட்டமையின், அவற்றின் நினைவாகத்தோன்றின.

## பெரியபுராணம்

ஆசிரியர் சேக்கிழார், முதற்குலோத்துங்கன் இரண்டாம் குலோத்துங்கன் ஆகிய இருவருள் இண்டாமவரது காலத்தவராகவே காணப்படுகின்றுர். அபயன் அநபாயன் என்ற சிறப்புப் பெயர்கள் இவனுக்கிருந்துள்ளன. தம்மரசனைக் குறிப்பாகச் சேக்கிழார் 'பொன்மலைப் புலி நின்ருேங்கப்புதுமலை யிடித்துப் போற்றும் அந்நெறிவழியே யாக அயல்வழி யடைத்தசோழன்' எனக்கூறுவது II குலோத்துங்கனுக்கே பொருந்தும். தன் வெற்றிக்காகப் புதுமலையை (மேரு) இடித்தலோ அயல்வழியை யடைத்தலோ ஒரு அ ர ச ன து சிறப்பன்று, அஃதியல்பாகும். ஆனால் சைவத்தை வளர்ப்பதற்காகப் பிறசமயங்களை அழித்ததனையே இது குறிக்கவேண்டும். இவனிடமிருந்த சிறப்புச்செயல் இதுவேயாகும். வைணவம் ஓங்காமல் மிகவும் தடுத்திருக்கிருன். தில்லைக் கோவிந்தராசர் உருவத்தைக் கடலில் எறிந்ததும், இராமாநுசரைத் துன் புறுத்தி மைசூருக்கோட்டியதும் இவன் காலத்திலேயாம்.

கிராமக் கோயில்களில் சிவனுக்குச் சமமாகத் திருமால் பூசை நடத்தினுல் தண்டம் விதிக்கப்பட்டிருக்கிறது.

பெரியபுராண காலத்தரசன் தில்லைப்பேரம்பலத்திற் குப்பொன்வேய்ந்திருக்கிருன். இதனை முதற் குலோத் துங்கனும் செய்தானென்பர். ஆனுல் *தில்லைத்திருவீதியை யணிசெய்ததும் திருக்காமக்கோட்டம் கட்டியதுமாகிய செயல் I குலோத்துங்கனுக்கில்லை. இமயப்பெருங் கடவுட்குன்ற மறக்கும்படி செல்வமல்கச் சிறக்கும் திருக் காமக்கோட்டம் என அது பாராட்டப்படுகின்றது. பரணி, களவழி, இறையனுர் அகப்பொருள் முதலியவற்றைப் பாராட்டிய அக்காலத்து ஒட்டக்கூத்தர் பெரியபுராணத் தைப்பற்றி ஒன்றுஞ்சொல்லவில்லை யென்பது ஆசிரியர்கள் எழுப்பும் ஒருதடை. இதற்குப் புலமைப் பொருமையும் தலைமைப்பொருமையும் ஒரு காரணமாகலாம். சேக்கி ழார் சோழரவையில் அமைச்சர். கூத்தர் புலவர். ஒரு காலத்தவரை மதிப்பதென்பதும் ஒரு அருமையாகும். கோட்பாட்டிலும் இருவரும் வேறுபட்டவர்கள். பிரபந்தங் களாகிய சிற்றிலக்கணங்களையும் சிறுமனிசரையுமே (அர சர்) பாடிக்கொண்டிருந்தவர் ஒட்டக்கூத்தர். சேக்கிழார் பேரிலக்கியங்களையும் பேரிறைவனையும் பாடியவர். அரசனைப்பற்றிப் படித்துக்கொண்டிருந்தவர்களை அடியார் களைப்பற்றிப் படிக்கத்தூண்டியவர். கூத்தர் தக்கயாகப் பரணி பாடினுரேயெனில் அது பிறர் நெருக்கியதாலும், உயிரைக் காத்துக்கொள்ளவுமன்றி உணர்ச்சியொத்த தன்று என்பது அறியத்தக்கதாம். கூத்தர் சேக்கிழாரைப் புகழாமைக்கு இவ்வடிப்படைக் காரணங்கள் பலவிருக்க லாம். பிறசமயங்களை ஒடுக்கியது, தில்லைத் திருவீதி சமைத்தது போன்ற நிகழ்ச்சிகளைக்கொண்டு இரண்டாம்

குலோத்துங்கனே சேக்கிழார் காலத்தவன் என முடிவு கட்டவேண்டியுள்ளது.

பாடல்நடை, அமைப்பு ஆகியவற்றிற்கும் இந்நூலைப் பரஞ்சோதி திருவிளையாடலுடன் ஒப்பிட்டுப்படிக்கவேண்டும். செவ்விய வரலாறென்றைத் தமிழகத்திற்களித்தவர் சேக்கிழார். நாயன்மாரது பாடலுக்குப் பின் 12-ஆம் நூற்றுண்டிற்குமேல் சைவத்தை வளர்த்ததும் காத்ததும் இவ்விலக்கியமேயாகும். திறம்பட்ட வரலாற்றுசிரியன் எழுதும் அலெக்சாண்டர், அக்பர், இராசேந்திரன் ஆகியோரது வரலாறுகளும், உணர்ச்சியையும் படிக்கும் ஊக்கத்தையுமளிக்கத் தவறுவதில்லை. அவ்வாறே செய்யுளில் இயன்றது பெரியபுராணம்.

## ஒட்டக்கூத்தர்

முதற் குலோத்துங்கனுக்குப் பிற்பட்ட விக்ரமன், II குலோத்துங்கன் இராசராசன் ஆகிய மூன்றரசர்காலத்தும் கூத்தர் வாழ்ந்திருக்கிறுர். இவர் செங்குந்த மரபினர். ஈட்டியெழுபது நாலாயிரக்கோவை என்பன இவர் முதலில் பாடிய பிரபந்தங்கள். குலோத்துங்கன்மீது பிள்ளைத்தமிழும் உலாவும் பாடிப் பாராட்டினர். தக்கயாகப்பரணி இவரது நூல்களில் தலை சிறந்தது கால வரலாற்றிற்கு இவை பெரிதும் பயன்படுகின்றன. இராமாயண உத்தரகாண்டம் இவர் எழுதியதாகக்கூறப் படுவதனை ஏற்கத்தடையுள்ளது. அக்காலத்து வாழ்ந்த வாணிதாதன் என்ற புலவன் அதனை எழுதியிருக்கக் கூடுமென்பது 'உத்தரகாண்டம் வாணிதாதன்அரங்கேற்ற வைத்தார் சோழமண்டலமே' என்ற சோழமண்டலசதகத்தால்தெரிகின்றது. II குலோத்துங்கனது ஆசிரியர் இவர்;

அச்சோழர்க்குச் சமயப்பொறை யில்லாதது போலவே இவர்க்குப் புலமைபொறையும் இல்லாமை உணரப்படு கின்றது. கம்பர், புகழேந்தி ஒட்டக்கூத்தர் பூசல்களெல் லாம் இதற்குச் சான்ருகலாம்.

மானிடம் பாடாமல் இறைவனைப் பாடவேண்டு மென்ற கிளர்ச்சியும், சமயவளர்ச்சிபற்றிய கிளர்ச்சியும் இக்காலத்திருந்துள்ளது. I இராசராசன், இராசேந்திரன், குலோத்துங்கன் ஆகியோரது வெற்றியும் வீரமும் முருகன், சிவன், திருமால் ஆகியோரது வெற்றிகளை நினைவூட்டியுள்ளன. எனவே பரணிகளும் கந்தபுராண மும், கம்பராமாயணமும், பெரியபுராணமும் தோன்றின. இராராசனும் இராசேநதிரனும் நாட்டைப்பெருக்குதலிலும் அமைதிப்படுத்துவதிலும் அதிககாலத்தைச் செலவழித்து விட்டனர். குலோத்துங்கள் புலவர்காக்கமளித்து அவ் வமைதியில் செய்துமுடிக்க வேண்டுவதனை முடித்தான். மற்றும் புலவர் போட்டியும் பொருமையும் இக்கால இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு தூண்டுதலாக இருந்துள்ளது. இவர், தம்காலத்துப் புலவர்களாகிய கம்பர் புழேந்தி, ஔவை முதலோருடன் காழ்ப்புக்கொண்டு பூசலிழைத் துக்கொண்டே இருந்திருக்கிருர். எனவே அமைதியற்ற மனமுடையவராய் இவரெழுதிய நூல்கள் தக்கயாகப் பரணி முதலியன தலையெடுக்காமலேபோயின. கம்பரைத் தவிர புலவரென்ற சீர்த்தியுடன் இவர்கள் சேக்கிழார், ஆகியோர்க்குமுன் நிற்கமுடியவில்லையெனத் தெரிகின்றது. ஆனுல் இவரது உலா பிரபந்தங்கள் வரலாறும் வளமும் உடையன. பிள்ளைத்தமிழ்ப்பிரபந்தம் இவரது குலோத் துங்கன் பிள்ளைத்தமிழிலிருந்துதான் தொடங்குகின்றது.

## புகழேந்தி

ஆசிரியர், புகழேந்தியென்ற அழகான பெயரை யுடையவர்; நளவெண்பாவைப் பாடி வெண்பாவிற் புகழேந்தி யென்ற பாராட்டுதலைப்பெற்றவர். ஒரு நூல் பாடி அதனையும் ஒப்பற்றதாக்கி ஒப்பற்றவராகவும் திகழ்ந்துவிட்டவர். ஒட்டக்கூத்தர் காலத்தவர் இவரென் பதற்குப் பல கதைகள் கூறப்படுகின்றன. கடைச்சங்க காலத்திற்குப்பின் இக்காலத்தும் வள்ளல்கள் பலர் வாழ்ந்து இக்காலவிலக்கியங்களுக்கு ஆக்கமளித்துள்ள னர். ஒட்டக்கூத்தரைக் காங்கேயன் என்ற வள்ளலும் புகழேந்தியை சந்திரன் சுவர்க்கியும் கம்பரைச் சடையப்ப னும் ஆதரித்தமை அறிபப்படுகின்றது. செஞ்சியர்கோன் கொற்றிங்கையைப் புகழேந்தி ஒரு கலம்பகம் பாடிப் பாராட்டினர் எனப்படுகின்றது. ஒட்டக்கூத்தர் விக்ரம சோழனுலாவில் குறிக்கும் செஞ்சியர்கோன்காடவன் அவனுனல், இருவரும் ஒருகாலத்தவராகின்றனர். இவ ரது பாடல்கள் எளிய இனிய ஒழுகிய நடையுடையன; படிக்கும்போதே உரைநடை போன்று எளிதிற்பொருள் புலனுகின்றது. இக்காலத்துப் பரணி முதலியவற்றின் தட்டியெதிர்த்துச் செல்லும் (பிரிமொழி) நடையாகாமல் செம்மொழி நடையாகலின் இவர் கூத்தர் முதலோரினும் புகழேந்தியாயினுர். இவரும் தமது காவியத்திற்கு ஓர் அரசகதையை யெடுத்துக்கொண்டார். அக்கதை இது வரைப் பிறபுலவரால் மேற்கொள்ளாததும் மக்களிடம் பரவியிருந்ததுமாகும்; பாரதம்போன்று வாழ்க்கைத்திருத்த முடையதுமாகும். உதயணன், சீவகன் முதலிய (எந் நாட்டவராயினும்) எந்த சிறந்த மனிதக் கதையையும் 'தமிழிலக்கியம் புறக்கணித்துவிடவில்லை. எனவே

வெண்பா புகழேந்தியது. புலவர் ஈழம் சென்று ஆரிய சக்கரவர்த்தி என்பானிடம் பரிசில் பெற்றதாகச் செய்தி கூறுகின்றது. இவ்வாரிய சக்ரவர்த்தி கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் பாண்டியன் முதல் மாறவர்மனது படைத் தலைவனெனவும் அவன் பாண்டியற்காக ஈழத்தை வென்று அங்கிருந்தபோது அங்குப்புலவர் சென்று பரிசில் பெற்றார் எனவும் இதற்கு விளக்கம் கூறுவர் ஆசிரியர். பாண்டியன் படைத் தலைவனிடம் பரிசுபெறப் புலவர் ஈழம் செல்லவேண்டுவதில்லை, மேலும் அப்பரிசிலுக்குப் பிறகு பாண்டியன் வேறு பரிசிலளிக்கிறான். எனவே இது ஈழவரசற்கெதிராக அளிக்கப்பட்டதாகும். ஈழவரசர் ஆரியர், பாண்டியனுடன் பிணக்குற்ற அரசர். அவனெதிரி யாய ஈழவரசனிடம் பரிசில் பெற்றார், அதனைப்பொறாத பாண்டியன் பின்னர் தானும் பரிசளிக்கிறான் என்பது பொருத்தமே.

'தூபங்கமழும் வெங்கோதையர் விக்ரமன்

மானேர் அபயன் இரவி குலோத்துங்கன் வாசல்'

என்ற நாவலர் சரிதைக் குறிப்பு புலவர் விக்ரமன், குலோத்துங்கன் ஆகிய இருவர் காலத்தும் இருந்திருக்கிறார் என்பதனையே உணர்த்துகின்றது. எனவே இது ஒட்டக்கூத்தர் காலமாகின்றது. (கி. பி. 1076—1136).

# கம்பர்

கம்பர் காலம் 9-ஆம் நூற்ருண்டென்பது பொருந்துவதுபோலத் தோன்றினும் அவர் 12-ஆம் நூற்ருண்டினர் என்பதே உண்மையாகும். இந்தியர் வரலாற்றிலும் 10, 11, 12 ஆகிய மூன்று நூற்ருண்டுகளும் ஒரு தொகுதியாகக் கொள்ளப்பட்டுள்ளன. சோழர் வரலாற்றில் 9-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியிலிருந்து 12-ஆம் நூற்ருண்டுவரைய நிகழ்ச்சிகள் ஒருமாதிரியாகவே உள்ளன. அதாவது சமூக அரசியல் அமைப்புக்கள் ஒரே மாதிரியுள்ளன. கம்ப ராமாயணத்தில் கம்பரது காலத்திற்குரிய அகச்சான்ருகவும் சில பாடல்கள் உள்ளன. பாலகாண்டம் உலாவியற்படலத்தில் (47—49) உள்ள பாடல்கள் கம்பர் கால அரசர்களின் குறிப்புக்களாக உள்ளன;

> கங்கர் கொங்கர் கலிங்கர் தெலுங்கர்கள்
> சிங்களாதிபர் சேரலர் தென்னவர்
> அங்கராசர் குலிந்த ரவந்திகர்
> வங்கர் மாளவர் சோழர் மராடரே
> மானமாதகர் மச்சர் மிலேச்சர்கள்
> ஏனை வீரர் இலாடர் விதர்ப்பர்கள்
> சீனர் தெங்கணர் சிந்துகர் சோமகர்
> சோன கேசர் துருக்கர் குருக்களே
> ஏதியாதவர் ஏழ்வகைக் கொங்கணர்
> சேதிராசர்கள்

இவருள் பலர் இராமன் காலத்தில் இருந்தவரல்லர், எனவே கம்பர் காலத்தவர்கள். வரலாற்றில் இவர்கள் 9-ஆம் நூற்ருண்டிலும் 12-ஆம் நூற்ருண்டு வரையும் இருந்தவர்கள். இராட்டிரகூடரும் சாளுக்கியரும் இங்குக் குறிக்கப்படாதது அவர்கள் இனம் இக்காலத்து மறைந்து விட்டமையாலாகலாம். மற்ருெரு குறிப்பு ‡'தியாகமா விநோதன்' எனச் சோழனைக்குறிப்பது. II குலோத் துங்கன் விக்ரம சோழன் முதலோர்க்கு இப்பட்டப் பெயர்கள் இருந்துள்ளன. எனவே இதனுலும் இவர் 12-ஆம் நூற்ருண்டினராகிருர்.

தமிழ் நாவலர் சரிதையில் இவர் வாரங்கல் பிரதாப ருத்திரனைப் பாடிய பாடலொன்று காணப்படுகிறது. அவன் காலம் கி. பி. 1162—1185. நாவலர் சரிதைக் குறிப்பினைத் தள்ளிவிடுவதற்கில்லை. மற்ற காரணங்க ளாலும் பொருந்திவருமாயின் ஏற்றுக்கொள்ளத்தக்கதே யாம். குலோத்துங்கன் கால முதல் தெலுங்குப்பகுதி நாடுகட்கும் தமிழகத்திற்கும் மிக்க தொடர்பேற்பட்டது. கம்பராமாயணத்தில் தெலுங்குச் சொற்கள் மிகுதி.

இக்காலத்திலும் வள்ளல்கள் பலர் வாழ்ந்துள்ளனர். கம்பரை ஆதரித்தவன் வெண்ணெய்நல்லூர் சடையப்பன். அவனைப் பலவிடங்களில் கம்பர் பாராட்டுகிருர். இவன் தந்தை சங்கரன் என்பவனுகவும் அவற்கும் ஒட்டக் கூத்தர்க்கும் நட்புண்டென்றும் வரலாறு கூறப்படுகின்றது. அப்படியாயின் கூத்தர் காலமும் ஒன்றேயாகின்றது.

‡ யுத்தகாண்டம் மருத்துமலைப்படலம்; 'வன்னிநாட்டிய' தெ. பொ. மீ. & ரா. பி. சே; கலைக்களஞ்சியம்–'தமிழ்; கம்ப இராமாயணம்.'

கம்பர் புகழேந்தி ஒட்டக்கூத்தர் ஆகிய மூவரும் ஒரு காலத்தவர் என்பதற்குப் பலகதைகள் வழங்குகின்றன. இவர்கள் காலத்தில் பாண்டியரும், சோழரும் அமைதியாக இருந்தவர்களல்லர்; வலியற்றவராய்ப் பிறநாட்டுடன் போரிட்டுக் கொண்டிருந்தனர். சமையப் பொறையும் குன்றியிருந்தது. எனவே புலவரை நிலையாகப்புரக்கவில்லை; அவர்கள் அடிக்கடிப் பிறநாட்டரசரிடம் ஆதரவு தேடிச் சென்றுள்ளனர். ஒட்டக்கூத்தர் புதுவைக்காங்கையன் என்ற வள்ளலை நாடியிருக்கிறார். கம்பர் பிரதாபருத்திரனை நாடினார்; புகழேந்தி ஈழத்து ஆரியச்சக்கரவர்த்தியிடம் சென்றார். இவர்கள் காலத்தில் இரண்டாம் குலோத்துங்கன் வாழ்ந்திருக்கிறான். அவன் வைணவர்க்கெதிரியெனவும் இராமாநுசரை விரட்டியவனெனவும் கூறப்பட்டது. வைணவத்திற்கேற்றந்தந்து இராமகாதை பாடியதால் கம்பரையும் அவன் வெறுத்திருக்கலாமெனத் தோன்றுகின்றது. எனவே இவரை வெறுத்த சோழன் II குலோத்துங்கனேயாகவேண்டும்.

சீவகசிந்தாமணியை இக்காலத்துச் சோழவரசர்கள் படித்துக்கொண்டிருந்ததை மாற்றவே பெரிபுராணம் எழுந்தது. கம்பரும் சிந்தாமணியில் ஒரு அகப்பை மொண்டு கொண்டதாகக் கூறப்படுவதுண்டு. சிந்தாமணியிலும் சிறந்ததாக நூலெழுதும் நோக்குடனேயே கம்பர் இராமகாதை எழுதியிருக்கிறார். 7-ஆம் நூற்றாண்டு முதல் தேவார பிரபந்தங்களிலும் திருவாசக முதலிய திருமுறைகளிலும் வளர்ந்த விருத்தப்பாக்களின் பயனாகக் கம்பராமாயணமும் பெரியபுராணமும் கந்தபுராணமும் உருவெடுத்தன. தேவார முதலியன தனித்தனிப்பாடல்கள். இது சங்ககாலத்து ஆசிரிய தனிப்பாடல்களின் விரிவாக

நான்காஞ்சங்க காலத்துச் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய தொடர்நிலைச்செய்யுட்கள் தோன்றியதுபோலாகும், நாதமுனிகள் தலைமையில் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றினர் என்றதொரு கதை கூறப்படுகிறது. நாதமுனிகள் 11-ஆம் நூற்றாண்டிலும்—அவர் கங்கை கொண்டசோழபுரம் சென்றதாகத் தெரிதலால்—இருந் திருக்கிறார். கம்பர் 12-ஆம் நூற்றாண்டினர்; அந்நுற்றாண் டுத் தொடக்கத்திலிருந்து இருந்திருந்தால் நாதமுனி கட்கு அணிமையாகிறார். இவ்வண்மையைத்தான் கதை இருவரையும் பிணைத்தே கூறிவிட்டதாகலாம்,

கம்பரைச் சோழன் யானைக் காலிலிட்டும் அம்பா லெய்தும் கொன்றதாகவும் அதற்கு நொந்து அவன் குலம் அழிகவெனக் கம்பர் சபித்ததாகவும் கூறப்படு கின்றது. II குலோத்துங்கனுக்கடுத்துச் சோழர்கள் கீழ் நிலையுற்று விரைவில் குலமே மறைந்துபோதலால் அது உண்மையாகின்றது. 11-ஆம் நூற்றாண்டில் நாதமுனிகள் நம்மாழ்வார் அருளால் பிரபந்தங்களைப் பெற்றமையால் ஆழ்வாரது புகழ் அந்நூற்றாண்டிலும் அடுத்தும் பரவி யிருக்கவேண்டும். கம்பர் சடகோபரந்தாதி பாடினர். சரஸ்வதியந்தாதியும் இவர் பாடியதே. ஏரெழுபது முத லியன இளமையில் பாடியவாகலாம். கம்பர் மகனைச் சோழகுமாரனும் சோழன்மகளைக் கம்பர்மகன் அம்பிகாபதி யும் கைப்பற்றத் தொடங்கி ஏற்பட்ட அலைச்சல்களால் புலவரது கடைசிக்கால வாழ்க்கை மிகவும் அல்லல் நிறைந்ததாயிருக்கலாம், எனவேதான் அவர் உத்தர காண்டத்தை எழுதவியலவில்லையெனக் கருதலாம். கி. பி. 12-ஆம் நூற்றாண்டிற்குரிய ஓர் அவ்வையைப் பற்றிப் பின்பு கூறப்படும். தனிப்பாடலில் ஔவையும்

கம்பரும் 'அகளங்கள்' என்ற விக்ரமனைக்குறிக்கின்றனர். எனவே இருவரும் ஒரு காலத்தவராவர். அச்சுதன் என்பதோர் அரசப்பெயரும் கம்பர் தனிப் பாடலில் வருகின்றது. "உத்தரகாண்டம், வாணிதாதன் அரங்கேற்றவைத்தார் சோழமண்டலமே" என்ற சோழ மண்டலச்சதகக் குறிப்பால் கம்பர் காலத்தில் வாழ்ந்த வாணியப் புலவன் வாணிதாதனென்பவனே உத்தர காண்டமெழுதினனெனத் தெரிகின்றது. தமிழ் நாவலர் சரிதையில் இவனைப்பற்றிய தனிப்பாடல்கள் பலவுள்ளன.

## ஔவை.

கடைச்சங்க காலத்தும் நான்காஞ்சங்க காலத்தும் வாழ்ந்த ஔவைகளைப்பறி முன்பு கூறப்பட்டது. இக் காலத்தொருவர் வாழ்ந்துள்ளார். அவரே ஆத்திசூடி கொன்றைவேந்தன், மூதுரை முதலிய நூல்களை இயற் றியவர். தேவர் குறளும் என்ற வெண்பாவில் இவர் திருவாசகமும் எனக்குறிப்பிடலால் கி. பி. 8-ஆம் நூற் ருண்டுக்குப் பிற்பட்டவர் எனத் தெரிகின்றது. கம்பர் புகழேந்தியுடன் ஔவை வாழ்ந்ததாகக் கதைகள் உண்மையில் இவர் 12-ஆம் நூற்றுண்டினராகலாமென வும் கொள்ளவேண்டியுள்ளது. இவரும், கம்பரும் அக ளங்கன் என்ற ஒரு அரசனைத் தம் தனிப்பாடலுள் குறிக் கின்றனர். அகளங்கன், என்ற பட்டம் விக்ரமசோழர்க் (1111—1136) கிருந்துள்ளது. ஆத்திசூடி, மூதுரை நல்வழி முதலிய நூல்களால் தமிழ் மாணவர் முதல் அனைவர் உள்ளத்தும் அழியா விளக்காயவர்; குமர குருபரரது நீதிநெறி விளக்கத்திற்கும் சிவப்பிரகாசரது நன் னெறிக்கும் தூண்டுதலாயவர். அறமுரைப்பதில் வள்ளு

வர்போல 'பிற்காலத்தில்' ஒப்பற்று நின்றவர். இவர் மூன்ருவது ஔவையார். அன்றும் கடைச்சங்கத்தில் கபில பரணர் நக்கீரர் முதலோரது பாடல்களுக் கெதிராக மங்காமல் நின்றவர். ஓர் ஔவையார் இன்றும் கம்பர் புகழேந்தி முதலோர்க் கெதிராக அசையாப் புகழ்பெற்ற வர். மூதுரையென்ற பெயரால் ஔவைகளுள் பாட்டி யாக விளங்கியவர் இவரேயாகலாமெனத் தோன்றுகிறது. இவரது தனிப்பாடல்களில் முருகன்—ஔவைக்கதைக ளெல்லாம் கூறப்படுகின்றன. இது கச்சியப்பரது கந்த புராணக் காலம்.

## இலக்கண நூல்கள்.

இரண்டாங் குலோத்துங்கன் காலத்தே குணவீர பண்டிதர் 'நேமிநாதமென்னும்' இலக்கண நூலை இயற்றி ஞர். அது எழுத்து சொற்கிலக்கணங் கூறுவது. இவ் விலக்கணங்களையெல்லாம் நன்னூல் விஞ்சிவிட்டது. 'வச்சணந்திமாலை' யென்னும் வெண்பாப்பாட்டியலும் இவ ராலேயே இயற்றப்பட்டதென்பர். இது பிரபந்த வகை களுக்கெல்லாம் இலக்கணம் கூறுகின்றது. எழுத்து முத லியவற்றில் சாதி பிரித்தல் முதலிய வேண்டா விலக்க ணம் சிலவும் கூறுகின்றது. குலசேகரபாண்டியன் காலத்தே நாற்கவிராசநம்பி 'அகப்பொருள்' இயற்றினர் அதுவே நம்பியகப்பொருள். இது புறப்பொருள் வெண்பா மாலைக்கீடாக அகப்பொருள் இலக்கணத்தைக் கூறுவது. பிற்கால அகப்பொருள் நூல்களுட் சிறந்தது. தஞ்சை வாணன் கோவைச் செய்யுட்களை மேற்கோளாகக் கொண்டது. **தண்டியலங்காரம்** யாப்பருக்கலக் காரிகைக் கீடாக அணிஇலக்கணத்தைக் கூறுவதாகும். அணிபற்றிய

பிற்காலத் திட்டமானதொரு இலக்கணமாக இது திகழ்கின்றது. உரையாசிரிர் பலராலும் மேற்கோள் பாடல்கள் எடுத்தாளப்படுகின்றன. அப்பாடல்களும் நூலாசிரியராலேயே இயன்றவை. அனபாயன் என்ற II குலோத்துங்கனைப்பற்றியவை. எனவே 12-ஆம் நூற்ருண்டிற்குரியவர்; இலக்கியத்திற்கு இது ஓர் பொற்காலம். வடநூன் மரபோடு ஒப்பிட்டறிவது இக்காலம். அவ்வகையில் காப்பிய இலக்கணத்தையும், கௌடவைதர்ப்ப நெறிகளையும் கூறுவது. தொல்காப்பியம் பெரியதெனக் கருதிச் சிறிய எளிய நூல்களை விழைந்த காலத்தில் இவை தோன்றி நிலைத்தன. இவற்றின் நிலைப்பிற்கு மேற்கோள் பாடல்கள் ஓர் காரணம். அக்காலத்தரசரைப் பற்றிய அவை அழகியன, இனியன. நம்பியகப் பொருளுக்கு மேற்கோளாய தஞ்சை வாணன் கோவையும் இக்காலவரசனைப்பற்றியதே. பொய்யாமொழியாரால் பாடப்பெற்றது. வாணன் பாண்டியர்க்குச் சிற்றரசன் என்பது (T. V. S.) பொருந்தலாம். மற்றும் இதனுசிரியர் தனிப் பாடலில் 'குலோத்துங்கச் சாவகன்' என்ற பெயரைக் குறிப்பதுகொண்டு குலோத்துங்கச் சோழன் காலத்தை நினைவூட்டுகிருர்.

# 13, 14-நூற்ருண்டுகள்

## உரையாசிரியர் காலம்

### உரையாசிரியர்

தொல்காப்பியம், திருக்குறள், பிரபந்தங்கள் முதலிய வற்றின் உரையாசிரியருள் பெரும்பாலோர் இக்காலத்திலேயே விளங்கியுள்ளனர். கம்பர் காலத்திருந்திருந்ததாகக் கருதப்படும் ஔவையினது 'கொன்றைவேய்ந்த' என்ற பாடலை மேற்கோளாகக்காட்டும் இளம்பூரணர் கி. பி. 13-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்திருக்கலாம் என முன்பு கூறப்பட்டது. அவரே உரையாசிரியர்; அவரைத் தொடர்ந்தே மற்றவர்கள் வாழ்ந்தவராவர். பேராசிரியர் தண்டியலங்கார மேற்கோட் செய்யுளை உதாரணமாகக் கொள்கிருர். அச்செய்யுட்கள் II குலோத்துங்கனைப் பற்றியவாகக் காணப்படுகின்றன. எனவே 13-ஆம் நூற்ருண்டின் முற்பகுதியினராகலாம்; அன்றி இளம் பூரணருக்கும் சேனுவரையருக்கும் இடைப்பட்டவர் பேராசிரியர். சேனுவரையர்க்குச் சாசனக்குறிப்புக்கள் கிடைக்கின்றன. சேனுவரையர் என்பது படைத்தலைவரின் பெயர். அக்குடியில் பிறந்து கி. பி. 1280-வரை அவர் விளங்கியவர் எனவறிகிருேம். சிவஞான முனிவரால் இவருரை பெரிதும் போற்றப்படும். இவரைப் பலவிடங்களில்மறுக்கும் நச்சினுர்க்கினியர் 14-ஆம் நூற்ருண்டினராகலாம். தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சிந்தாமணி ஆகியவற்றிற்கு நச்சினுர்க்கினியரது உரைகள் கிடைக்கும்பேறு பெற்ருேம். தனியாகச் சிந்திக்கும் ஆற்றலுடையவர் இவர்.

உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் என்பதற்கு, புலவர்தம் உச்சிமேற் கொண்டு பாராட்டப்பெறுபவர் என்பது ஒரு கருத்து. ஆனால் 'புலவரைத் தம் உச்சிமேற்கொண்டு பாராட்டுபவர் நச்சினார்க்கினியரெனவும் கொள்ள இடமிருக்கின்றது. பரிமேலழகர் காலத்து வாழ்ந்தவரெனவும் அவரது குறளுரையில் சில குறைகளாகத்தாம் கருதியவற்றைப் பரிமேலழகரையே நேரிற் கண்டு விளக்குமாறு கேட்டதாகவும், அதற்குப் பரிமேலழகர் கூறிய விளக்கத்தைக்கேட்டு 'மெய்யுரை மெய்யுரையென' அதனைத்தம் தலைமீது வைத்துக்கொண்டு நச்சினார்க்கினியர் கூத்தாடினாரெனவும் ஒரு நிகழ்ச்சி கூறப்படுகின்றது. இவரது வாழ்வே ஓர் தமிழ் வாழ்வெனலாம்; இவ்வளவு இலக்கண இலக்கியங்கட்குரை யெழுதியவர் உரையாசிரியருள் யாருமில்லை. பரந்த இலக்கண இலக்கியவறிவுடையவர். இவரை வடநூலறிவற்றவராகச் சிவஞானமுனிவர் கூறுவது பொருந்தாதது. இளம்பூரணரையும் முனிவர் வடநூலறிவற்றவராக இகழ்கிறார்; சேனாவரையரை வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்தவராகப் பாராட்டுகிறார். இலக்கண இலக்கிய விளக்கத்திற்கும் நல்லறிவிற்கும் பிறமொழியறிவு இன்றியமையாதாகலாம்; பிறமொழியுடன் ஒப்பிடும்போதே ஒருமொழியின் தன்மையும் சிறப்பும் தெளிவுபடுகின்றன. அதற்கு நேரான பிறமொழியறிவு வேண்டுமென்பதில்லை. அம்மொழிபற்றிய அறிவும் போதியதாகலாம். அவ்வகையில் இளம்பூரணர் முதலோர் வடமொழி வியாகரணங்களைப்பற்றிய தெளிந்த அறிவுடையராகவே இருந்திருக்கவேண்டும். பரிமேலழகர் காலத்து வாழ்ந்தவராகச் சிலரால் கருதப்படும் நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுத்துள்ளார். சேனாவரையர் 13-ஆம் நூற்றாண்டுப் பிற்பகுதியினரெனில் மற்றவரெல்லாம் அந்

நூற்றுண்டுப் பிற்பகுதியிலும் 14-ஆம் நூற்றுண்டிலும் வாழ்ந்தவராகக் கருதவிருக்கின்றது. மாத்யூ ஆர்னல்ட் இலக்கிய காலத்தை ஆக்ககாலம், (Creative) மதிப்பீட்டுக் காலம் (Critic) என இரண்டாகக் கூறுவார். இதற்கு முன்பும் பின்பும் ஈராண்டுகள் அக்காலமெனில் இது உரையால் 'மதிப்பீட்டுக்' காலமாகலாம்.

## இளம்பூரணர்.

உரையாசியர் எனப்படுவர் இவரே. முதல் தொல் காப்பிய உரை இவராலேயே எழுதப்பட்டதென்பர். இவர் 11-ஆம் நூற்றுண்டினரென்பது பலரது கொள்கை ஆனுல் 'கொன்றைவேய்ந்த செல்வனடியிணே' என்ற ஔவைப்பாடலே இவர் செய்யுளியலில் மேற்கோளாகக் கொண்டமையின் 12-ஆம் நூற்றுண்டினராகக் காணப் படுகிருர். யாப்பருங்கலவிருத்தி, நம்பியாண்டாரது மூத்த நாயனுர் திருவிரட்டைமணிமாலே முதலியவற்றினின்றும் இவர்மேற்கோள் காட்டுகிருர். மயிலேநாதர் உரையிலிருந்து இவர்ஜைனரெனத் தெரிகின்றது. தெளிவாகவும்,அளவாக வும் உரையெழுதியவர் இவர் என்னலாம். நன்னூற் சூத்திரங்களே மேற்கோள்காட்டித் தொல்காப்பியப்பாயிரத் திற்குரை கூறலால் இவரை 13-ஆம் நூற்றுண்டினரோ வெனக் கருதலாம். இவர் நச்சினுர்க்கினியர் முதலியவர்க் காசிரியரெனவும் தெரிகின்றது. உளங்கூர் கேள்வி இளம்பூரணர் என இவர் பாராட்டப்படுதலின் உரையா சிரியர்களுக்கு மிகுந்த பரந்த நூலறிவு வேண்டுமெனத் தெரிகின்றது. நூலாசிரியரினும் மேம்பட்ட வழக்கறிவு இவர்கட்கிருந்தாற்ருன் பிற்காலப் புதிய வழக்குகளேயும் குறிக்க முடியும். இக்காலத்தில் ஐந்திலக்கணம் பற்றியும் புதிய இலக்கணங்கள் தோன்றியிருந்தமையின்,தொல்காப்

பியத்தின் தலைமையைக் காத்து அது வழக்கிழக்கா திருக்க உரைகளை எழுதினராகலாம்.

## பேராசிரியர்.

இளம்பூரணருக் கடுத்து உரை எழுதியவர் எனக் கருதப்படுபவர். தம் உரையில் தண்டியலங்கார உதாரணச் செய்யுளை எடுத்தாள்வதால் அவ்வெண்பாக்கள் குறிக்கும் II குலோத்துங்கன் (அநபாயன்) காலத்திற்குப் பிற்பட்டவராகலாம், ஆகவே 13-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியினராகப் பேராசிரியர் கருதப்படலாம். இவர் இளம்பூரணர் போன்றே தம்காலத்து மேம்பட்டு விளங்கியமையின் பேராசிரியர் எனக் கருதப்பட்டிருக்கலாம். இவர் வரலாற்றுக்குறிப்புகளை மிகுதியாகக் காட்டுகிறுர். முச்சங்க வரலாற்றிற்கு இவரது குறிப்புக்கள் மிகுதியும் பயன்படும். செய்யுளியலுக்கு இவரது உரை மிகச்சீரியதும் அரியதுமாகும். இவர் மதுரையாசிரியரெனவும் பேராசிரியரெனவும் வழங்கப்பட்டார்; இளம்பூரணருக்காசிரியராகலாம் எனச் சிலர் கருதுவது மரபுக்கு மாறுனதாகும். பேராசிரியர், யாவர்க்கும் பேராசிரியர் என்ற சிலரது கற்பனையால் வந்த கருத்திதுவாகலாம். இவருடன் இளம்பூரணர் நச்சினுர்க்கினியர் பரிமேலழகர் முதலோரை ஒரு காலத்தவராகக் கருதுவர்.

## அடியார்க்கு நல்லார்.

சிலப்பதிகாரத்திற்குரை யெழுதியவர். இவரெல்லாம் ஒரு நூற்கெழுதினும் ஒப்பற்ற உரைகளை எழுதியவர்கள். கலிங்கத்துப் பரணியிலிருந்து மேற்கோள் காட்டுதலால் இவர் 13-ஆம் நூற்றுண்டினராகலாம். தமிழிசை நாடகம் பற்றியும், தமிழ்ச்சங்கங்களைப் பற்றியும் இவர் வெளியிட்ட

குறிப்புக்கள் அருமையும் பெருமையுமுடையன. நக்கீரனுருக்குப்பின் இவராலேயே தமிழ்ச்சங்க வரலாறு ஓரளவு தெளிவுபடுகின்றது. தமிழிசை நாடகவமைப்புக்களைப் பற்றியும் வேறெவரும் இத்தனை விளக்கமாக எழுதவில்லை. ஏராளமான நூல்களிலிருந்து மேற்கோள் காட்டுதலால் இவரது பரந்த நூலறிவு புலனாகின்றது. வஞ்சிக் காண்டத்திற்கும் இவரதுரை கிடைத்திருப்பின் மிகவும் பயனுடையதாயிருக்கும். வழக்கிழந்த நூல்கள் சுமார் இருபதிலிருந்து மேற்கோள் காட்டுகிறார். சிலப்பதிகார நாடக இசைக் குறிப்புக்கள் மிகவும் அருமையானவை; மற்ற தமிழ் நூல்களில் கிடைக்காதவை; அவற்றிற்கு அடியார்க்குநல்லாரெழுதிய விளக்கமும் விவரமும் அதனிலும் அரியன. அவரதுரையே பிற்காலத் தமிழிசைப் பற்றிய நூல்களுக்குப் பேராதாரமாயின. விபுலாநந்தரது யாழ்நூலுக்கும் அபிரகாம் பண்டிதரது கருணாமிர்த சாகரத்திற்கும் ஊற்றாயதிவ்வுரையே. இன்று தமிழிசை தனித்தது உயர்ந்தது என்று பேசும் பெருமைக்குப் பெரும் ஆதரவாயதும் இவ்வுரையே யாகும்.

## குறள் உரைகள்

**பரிமேலழகர்** 11-ஆம் நூற்றாண்டின் போசனைத் தமதுரையில் குறித்தலால் அந்நூற்றாண்டுக்குப் பிற்பட்டவராவார். காஞ்சிப் பெருமாள்கோயிலில் கிடைத்தகல்வெட்டொன்றால் இவரது வரலாற்றினைக் கணிக்கிறார்கள். அக்கல்வெட்டு கி. பி. 1272-ஆம் ஆண்டினதாகும். இதனில் இவர் ஒரு சிறந்த வைணவ ஆசிரியரெனத் தெரிகின்றது. மணக்குடவர் உரையே இவருக்கு முதல் நூலாகும். பழைய உரை எனவொன்றும் குறளுக்கு உள்ளது. அவை 12-அல்லது 13-ஆம் நூற்றாண்டுத்

தொடக்கமெனலாம். பழைய உரையைப் பரிதி பின் பற்றுதலால் அவரும் பரிமேலழகருக்கு முன் பின்னுகலாம்.

காளிங்கர் பரிமேலகரையே தெளிவாகப் பின்பற்று கிருர். அன்றி காளிங்கரை முன்னவராகக் கருதுவாரு முளர். பரிபாடலுக்குப் பரிமேலழகர் உரையெழுதின ரென்பதில்,அதுஇவருரையாஎன்பது ஆராயத்தக்கதாகும்; மணக்குடவரும் இளம்பூரணரும் ஒருவரேயெனக் கருது வாருமுள்ர் (T. V. S: தமிழ்ப்பொழில்). மணக்குடவர் உரை இளம்பூரணருரை போன்றுச் சுருக்கமும் தெளிவும் அளவுமுடையதேயாகும்; இவரது நேரான உரையைக் கண்டபிறகே பரிமேலழகர் பலவிடங்களில் நச்சினூர்க் கினியர் போன்று (பொருந்தாதாயினும்) வேறுரைகளை யெழுதுதற்குதவி கிடைத்தது. பரிதி பல விடங்களில் விளங்காதபோது பளிச்சென்று விளங்குமாறு சிலகுறிப் புக்களைத்தருகிருர். காளிங்கர் வளவளவென்றெழுதுவது போற் ருேன்றுகிறது. எனினும் மற்றவர்கள் நினைத்த தற்குமேல் நினைத்துப் பிற்காலத்தார் கருதும் புதுவுரை பலவற்றைத் தாமும் நினைக்கத்தொடங்கியுள்ளார்.

## பிரபந்தவுரைகள்

திருவாய்மொழிக்கும் மற்ற பிரபந்தப் பாடல்களுக்கும் உரையெனப்படும் வியாக்யானங்கள் இக்காலத்தேயே தோன்றின. இராமாநுசரது மாணவராகிய திருக்குருகைப் பிரான்பிள்ளான் என்பவர் திருவாய்மொழிக்கு 12-ஆம் நூற்றுண்டில் ஆறுயிரப்படி எழுதினுர். படியென்பது யாப்பியலுக்குரிய எழுத்துக்களைக்கொண்டு கணக்கிடுவ தாகும். இது இக்காலத்து இத்தனை சொற்களால் எழுதப்பட்டது, பேசப்பட்டது என அளவுரைத்தல்

போலாகும். இராமாநுசரது மாணவராகிய கூரத்தாழ்வாருக்கு மகன் பட்டர் என்பவர். பட்டர் மாணவர் நஞ்சீயர்; திருவாய்மொழி ஒன்பதினுயிரப்படியும் பெரிய திருமொழி உரையுமெழுதினுர். நஞ்சீயர் மாணவர் நம்பிள்ளையும் திருவாய்மொழிக்கும் (9000) திருவிருத்த முதலியவற்றிற்கும் உரை வகுத்தார்.

நம்பிள்ளை மாணவர்களே பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத்திருவீதிப் பிள்ளையுமாவர். இவர்கள் பிரபந்தத்திற்கு 24000-படியும், திருவாய்மொழிக்கு 36-ஆயிரப் படியுமெழுதினர். இவையெல்லாம் 14-ஆம் நூற்றுண்டுக்குரியவாகலாம். **நம்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளை**யும் பயன்மிகவுடையதும் பாராட்டத்தக்கதுமாய உரைகளையெழுதினர். இவ்வுரைகள் தனி இலக்கியமாகவும் சமயதத்துவங்களாகவும் கருதப்படுவன. இது வடமொழி கலப்புக்காலம். எனவே வடநூல் தத்துவங்களோடொப்பிட்டு இவை யெழுந்தவையாகும். சங்கரரது மாயாவாதம் சமயதத்துவம் நிறைந்தது. அதனை எதிர்க்க சங்கரரைப்போலவே சமய ஆசாரியர் பலரைச் சைவ வைணவர் இக்காலத்து நினைந்தனர். நம்பியாண்டார் சம்பந்தரை ஆசாரியராக நினைத்தமை பாடலாலறியலாம். மதுரகவிகள் நம்மாழ்வாரை அவ்வாறு நினைத்து வழிபட்டுப் பாடியுள்ளார். பிற்காலத்து வைணவர்கள், ஆழ்வார் தம் பாடல்களை விடவும் இவ்வுரைகளையே சமயமாகக் கருதிப் பின்பற்றவும், விளக்கமுரைக்கவும் தொடங்கினர்.

## இலக்கணங்கள்.

இரண்டு நூற்றுண்டுகளாகப் பல புலவர்கள் எழுதிய 'பன்னிரு பாட்டியல்' என்ற இலக்கண நூல் இக்

காலத்துத் தொகுக்கப்பட்டது. யாப்பருங்கலம்போன்று தாண்டவ முதலிய அரிய யாப்பு வகைகளையெல்லாம் விளக்கும் சிறந்த இலக்கணநூல் இதுவாகும். தொல் காப்பியத்திற்கடுத்து இவை இரண்டும் கற்கத்தக்கன.

## நன்னூல்

இக்காலத்தெழுந்த சிறந்த இலக்கணம். சீயகங்கன் (1178—1216) என்ற மைசூர் கங்கவரசன் காலத்தெழுந்தது. பவணந்தியென்ற ஜைனர் இதனாசிரி யர். இதற்கு முதலுரைகண்ட மயிலைநாதரும் இக்காலத் தவரேயாகலாம். இவர் மைலாப்பூருக்குரியவர்; கங்கன் என்ற அரசனைப் பாராட்டுகிறார் சீயகங்கன் முதலிய வர்கள் இக்காலச் சோழர்க்குச் சிற்றரசராயிருந்தவர்கள். இவ்வுரையாசிரியர் தொல்காப்பிய உரைகாரரைப்போல வன்றி நூலாசிரிவர் காலத்திற்கண்மையில் வாழ்ந்து அவர்கண்ட நூல்கள், வழக்கு முதலியவற்றைத் தாமும் கண்டு எழுதியவராவர். இன்றுவரை நின்று விளங்கும் எழுத்து, சொல்லிலக்கணம் இதுவேயாகும். மயிலைநாத ருரை இளம்பூரணருரை போன்ற சுருக்கமும் தெளிவு முடையதாகும்; இதனில் ஐந்திலக்கணம் கூறப்பட்டதாகக் கொண்ட கருத்து ஆதாரமற்றதாகும். மயிலைநாதருரை யும் யாப்பருங்கல வுரையும் தமிழ் வரலாற்றுப் புதை பொருள் என்னலாம். இப் பழைய வுரைகளால் மறைந்துபோன நூல்களைப்பற்றி அறிந்துகொள்ள முடி கின்றது. அந்நூற் பாடல்கள் பலமேற்கோளாகக் காட்டப் படும்போது அவற்றின் அருமை பெருமைகள் தெரி கின்றன.

## இலக்கிய நூல்கள்.

உரையாசிரியர் காலமாகிய இவ்விருநூற்றுண்டும் பெரிதும் ஜைன ஆசிரியர்களுக்குரியவை. இக்காலத்து இலக்கிய நூல்களும் பல பெருகின. திருக்கலம்பகம் திருநூற்றந்தாதி யென்பன சிறு பிரபந்தங்களுட் சேர்ந்தன வாகும். இவை அருகக்கடவுள்மீது இயன்றவாகும்; சமய தத்துவங்களை விளக்குபவை. அறநெறிச்சாரம் என்னும் நீதிநூல் இக்காலத்தது. ஏலாதி, திரிகடுகம்போன்ற கீழ்க்கணக்கு நூல் வரிசையில் வைக்கத்தக்கது. இந்நூல் திருமுனைப்பாடியார்என்னும் தீபங்குடி அருங்கலான்வயத்தைச்சேர்ந்த புலவரால் பாடப்பட்டது. 222 பாடல்களைக் கொண்டு அருகனையும் சிவனையும் சமமாகக் கருதுவது இந்நூல். சிவனையும் திருமாலையும் ஒன்ருகக் கருதிய கம்பர் காலத்திற் கடுத்தவர் இவ்வாசிரியர். II குலோத்துங்கனது சமய வெறுப்பில் அல்லற்பட்டு மாறியமைந்த மனத்தினையுடையவர்கள் இப் புலவர்கள். குறளுக்குமுன் இந்நீதிநூல்கள் மின்மினியாயின. பிற் காலத்தே குமரகுருபரர் சிவப்பிரகாசர் போன்ருேர் மக்கட் குரிய சைவப்பற்றுகொண்டு எழுதிய நீதிநூல்களும்இதனை மங்கச்செய்துவிட்டன. மற்றும் புராணங்களும் பிரபந்தங் களும்வேறு பெருகிவிட்டன.

சீவக சிந்தாமணியின்ற கி. பி. 6-ஆம் நூற்ருண்டி னைப்போன்ற சமயப்பொறையும் ஆராய்ச்சியுமுடைய காலம் இதுவாகலாம். சோழரது வலிகுன்றியமையால் சைவ முதலிய சமயங்கட்குரிய இலக்கியங்கள் தோன்ரு மல் ஆராய்ச்சி இலக்கியங்களும் தத்துவங்களும் பெரு கின. இத்தகைய இடைக்காலங்களில் வைணவரும்,

சைவரும் மங்கியபோது ஜைனர்கள் தலையெடுத்து இலக்கியப்பணி செய்துள்ளனர். ஜைனர்கள் பெரிதும் இலக்கணம், அகராதி, நீதி முதலியவற்றில் மனஞ் செலுத்தியுள்ளனர். தமிழிலக்கியவரலாற்றில் இத்தகு கருவி நூல்களுக்குப் பொதுவாக அவர்கள் காரணமாகியுள்ளனர். சைவ வைணவ நூல்களையாக்க மனமில்லை; தம் சமய விலக்கியங்களுக்கு மக்களும் அரசரும் அதிக ஊக்கமளிக்கவில்லை. எனவே பொதுவான உரைகள், இலக்கணங்கள் ஆகியவற்றாலேயே மக்களைக் கவரமுடியும் என அவர்கள் கண்டனர் போலும்! இக்காலத்தே தான் சைனரது முதல் தமிழ்ப்புராணமாகிய மேருமந்தர புராணம் வாமனுச்சாரியாரால் இயற்றப்பட்டது. காஞ்சிக்கடுத்த திருப்பருத்திக்குன்றத்தில் இருந்தவர் இவ்வாசிரியர். ஜீவகன் வரலாற்றைப் போன்ற கதையமைப்புடையது இப் புராணம். தமிழிலியன்ற முதற் புராணங்கள் சிலவற்றுள் இதுவுமொன்றாகலாம். புராணத் தொடக்க காலம் இது; பெரியபுராணம், கந்தபுராணங்கள் தொடங்கின.

## தத்துவ நூல்கள்

இவர்க்கடுத்த காலத்தவரே வேதாந்த தேசிகர். இவர் வடமொழியில் 95-ம் தமிழில் 24-ம் நூல்களியற்றினார். . அர்த்த பஞ்சகம் பிரபந்தங்கள் முதலியன தமிழ் நூல்கள். நம்பிள்ளையின் மற்றொரு மாணவராய பின் பழகியபெரியர்பெருமாளே குருபரம்பரை நூலை வகுத்தனரென்பர். ஆழ்வார்களின் வரலாற்றினை யறிதற்கு இது மிகவும் சிறந்த துணையாகும். வடக்குத்திருவீதிப்பிள்ளையின் மக்கள் இருவர் பிள்ளை லோகாச்சாரியரும் அழகிய

மணவாள நாயகனுருமாவர். லோகாசாரியர் சிவச்னபூடண முதலிய நூல்களையெழுதினர். மணவாளப்பெருமாள் **ஆசாரிய இருதயம்** முதலியவற்றை யெழுதினுர். இவ்விரண்டும் வைணவ சமய தத்துவத்தை விளக்கும் சிறந்த நூல்களாகக் கருதப்படுவன. ஆருயிரப்படியென்னும் திருப்பாவை உரையும் இவர் எழுதியதே; ஆசார்ய இருதயமென்பது சிவஞானபோதம் போன்று மிகச் சுருங்கிய தொடர்களாலானது; நம்மாழ்வாரது வாய்மொழி முதலிய நூல்களைக்கொண்டு உயர்தத்துவங்களை விளக்குவது. சைவத்திற்கும் 14-சித்தாந்த சாத்திரங்களுள் இரண்டு இவற்றிற்கு முன்பு 12-ஆம் நூற்ருண்டிலேயே தோன்றியிருந்தவாக அறியப்படுகின்றன. கி. பி. 1148-ல் திருவுந்தியாரும் கி. பி. 1178-ல் திருக்களிற்றுப்படியாரும் தோன்றியவாகத் திரு. கா. சு. பிள்ளையவர்கள் கூறுகிருர்கள். ஆசிரியர் மெய்கண்டார் சிவஞானபோதமியற்றியதும் இக்காலத்திற்ருன். சாசனத்தினுல் இவர் III இராசராசன் (கி. பி. 1216—1248) காலத்தவராக உணர்கிரேும். இவரது மாணவராகவே கருதப்படும் அருணந்தி சிவாச்சாரியாரும் சிவஞான சித்தியார் என்னும் நூலை எழுதினுர். அவர் மாணவர் மறைஞான சம்பந்தர். அவருக்கு மாணவர் உமாபதி சிவம், திருவருட்பயன் சிவப்பிரகாசமென்னும் நூல்களை எழுதியவர். சேக்கிழார் புராணமும், கோயிற் புராணமும் எழுதியவர் இவரே. மெய்கண்டாரது மற்றெருரு மாணவர் மனவாசகங் கடந்தார் உண்மை விளக்கமென்னும் நூலெழுதினுர்.

**சிவஞானபோதம்**

சிவஞானபோதம் 12-சூத்திரங்களாலாயது. சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்கிற்கும் திருமந்திரம்

ஞானமிர்தம் முதலியவற்றையே முதல் நூல்களாகக் கொள்ளலாம். சிவஞானபோதத்திற்கோர் நச்சினர்க்கினியர் தோன்றினர், அவர் சிவஞான முனிவர்; சிவஞான மாபாடியம் எழுதி அதனைப் பரிமேலழகர் உரை போன்று நினைக்கச் செய்தார். சிவஞான சித்தியார் விரிவானது. இதன் பரபக்கம் தனிச்சிறப்புடையது. பிற சமயங்களுடன் சைவத்தை ஒப்பிட்டுயர்வது. சிவப்பிரகாசம், 100 சூத்திரங்களுடன் எளியதும் தெளிவுடையது மாகும். சைவதத்துவத்தை எளிமையாகப் புரிந்து கொள்ள வேண்டுமென்பார்க்குரியது. இம்மூன்றையும் பின்பற்றுவனவும் விளக்குவனவுமே மற்றைய 11 நூல்களும். இவற்றின் துணைகொண்டே பிற்காலத்தே சைவப் புராணங்கள், சமயம் தத்துவம்பற்றியெல்லாம் விரிக்கத் தொடங்கினவெனலாம். தமிழிலக்கியத்தில் ஒரு சிறந்த பகுதி இத்தத்துவ நூல்களும், உரைகளுமாகும். ஆசாரிய இருதயம் நம்மாழ்வாரது திருவாய் மொழியைக் கொண்டெழுந்தது. எனவே இத்தத்துவ நூல்கள் தேவாரம், பரபந்தம் ஆகியவற்றையே அடிப்படையாகக் கொண்டவை. சிவஞான போதமும் தேவார திருவாசகமிவ்வற்றையே அடிப்படையாகக் கொண்டதாகும்; வடமொழிப் பெயர்ப்பென்பதெல்லாம் பொருந்தாது.

# 15, 16, 17- நூற்றுண்டுகள்

## 15-ஆம் நூற்றுண்டு

இந்நூற்றுண்டில் சிறந்த புலவர்கள் இரட்டையர் காளமேகம், அருணகிரி, வில்லிபுத்தூரார் முதலியவராவர். தத்துவ நூல்களின் வழியாகச் சைவ வைணவ சமயங்கள் முன்னைய நூற்றுண்டுகளில் நிலைத்திருந்தன. 12-ஆம் நூற்றுண்டில் கந்தபுராணம் பாடப்பெற்றது. முருகனது புகழ் தொடர்ந்து இந்நூற்றுண்டில் அருணகிரியால் உயர்த்தப்படுகின்றது. வில்லிபுத்தூரார் வைணவத்தை வளர்க்கிருர். இரட்டையரும் காளமேகமும் சைவப் பாடல்களைப் பாடுகின்றனர். விசயநகரத்தரசர் செல்வாக்கு தமிழகத்தில் பரவத் தொடங்குகிறது. 15, 16, 17 ஆகிய மூன்று நூற்றுண்டுகளையும் பிரபந்த காலம் அல்லது புராணகாலமென்னலாம். புராணங்களையும் பெரிய பிரபந்த நூலாகக் கொள்ளலாம். நாயக்கர்கள், ஹொய்சலர்கள், மகம்மதியர் காகதீயர் ஆகியவர்க்கெதிரே தமிழ்ப்புலவர்கள் சைவ வைணவப் பூசல்களையும் பிணக்கினையு மறந்து இரு சமயங்களையும் வலிவாக்குகின்றனர். சோழராட்சி மறைந்து பாண்டியர் மட்டும் வலியற்றவராய் உயிர்த்துக்கொண்டனர்.

வலிமையற்ற அரசர்கள் நாட்டில் அயற்பகுதியினருடன் அடிக்கடிப் போரில் ஈடுபட்டிருந்தமையின் புலவர்களும் போதிய ஆதரவும் தலைமையுமற்றுத் தம்முள் சொற்போரிட்டுக் கொண்டிருந்துள்ளனர். ஆசிரியரில்லாத வகுப்பில் மாணவர் தம் திறமையைக் காட்டிச்

சண்டையிட்டுக்கொண்டிருத்தல் இயல்பு. மற்றும் அயல வரிடமிருந்து சமயத்தையும் இலக்கியத்தையும் காக்க இவர்கள் சித்திரக் கவிகளையும், பாடுந்திறனில் தோற்ற வர்களைக் §குட்டுதல், காதையறுத்தல், மொட்டையடித்தல் முதலிய தண்டனைகளையும் கையாண்டன ரென்னலாம். அரசியலில் கைவைத்த மாதிரி நிலைத்த இலக்கியத்திலும் கைவைக்க வேண்டாமென அச்சுறுத்து முறையாகலாம் இது. ஏழாம் நூற்றாண்டில் நாயன்மார் சமயத்திற்காக ஒரு காப்புப் போர் செய்தமாதிரி இக்காலத்துப் புலவர் கள் இலக்கியத்திற்காக ஒரு காப்புப் போர் (Cross) செய்துள்ளனர். சீத்தலைச்சாத்தனார் தவறுகண்டவிடத் துத் தாமே தலையில் எழுத்தாணியால் குத்திக்கொண் டார். ஆனால் இவர்கள் தவறாகப் பாடியவர்களையே குத்தியுள்ளனர். இத்தகைய ஒறுப்புமுறைகள் ஒட்டக் கூத்தர் காலத்திலேயே தொடங்கிவிட்டவாக அறிகிறோம். இக்காலத்தின் தவறிழைப்பின், குட்டுவேன், காதை யறுத்துவிடுவேன், மொட்டையடித்துவிடுவேன் என வஞ் சினங் கூறுதலாகிய மரபு வில்லிகாலத்திலிருந்து வருவ தாகத் தெரிகின்றது. இலக்கியம் வாழ அன்று இத்த கைய அவமானங்களையும் கொடுந்துன்பங்களையும் ஏற் றுள்ளனர்.

---

§ குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியனுரில்லை குறும்பியள
வாக் காதைக் குழித்துத் தோண்டி
எட்டிநாவறுப்பதற்கோ வில்லியில்லை இரண்டொன்று
மயிரைமுடித் திறங்கப் போட்டு
வெட்டுதற்குக் கவியொட்டக் கூத்தனில்லை விளையாட்டுக்
கவிப்பாட்டு விரைந்துபாடித்
தொட்டுதற்குத் தமிழறியாத் துரைகளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே.

## காளமேகப் புலவர்.

கம்பரைப்போல இவரும் கோயிற்பூசை செய்வோர் குடியிற் பிறந்தவர். சக்தியினருளைப்பெற்றுப் பாடத் தொடங்கியவர். சோழபாண்டியர் அடிக்கடி செய்த போர்களில் காளியை வழிபட்டமையால் சக்தி வழிபாடு இக்காலத்து மிக்கிருந்திருக்கவேண்டும். "வெள்ளைக்கலையுயுடுத்து" யென்ற கலைமகள் வாழ்த்துப்பாடி அவளருளைப் பெற்றார். நகைச்சுவைப்படக் கவிதை எழுதுவதுபற்றி ஆங்கிலப் புலவர் பாராட்டப் பெறுவர். இவர் அவ்வகையில் எண்ணற்ற பாடல்களைப் பாடிப் புகழ் பெற்றவர். யாப்பருங்கலம் வீரசோழிய முதலிய யாப்பிலக்கணங்கள் முன்னூருண்டுகளிற் பெருகின. 15-ஆம் நூற்ருண்டு முதல் பாடுந்திறமையும் சித்திரக்கவிகளும் பெருகின. காளமேகத்திற்கெதிரானவர் மதுரகவி. இவர் யமகம் முதலிய பாடும் சித்திரக்கவியுமாவார். வில்லிபுத்தூரார் வித்தாரகவியெனலாம். அருணகிரியைச் சித்திரகவியேயென்னலாம். இவர் இளமையில் எழுதியது திருவானைக்காவுலா. திருமலைராயன் பட்டணத்திருந்த அதிமதுரகவிக்கும் இவர்க்கும் சொற்போர் நிகழ்ந்தது, அதனில் இவர் வெற்றிபெற்ருர். தனிப்பாடற்றிரட்டில் இவரது பாடல்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. யாவரும் பாடுதற்கஞ்சும் யமகண்டத்தைப் பாடியவர் இப்புலவர். சதுரத்திக்குழிக்குமேல் இரும்புத்தூண் முடிவிலிருந்து கீழே கொதிக்கும் எண்ணெய்க் கொப்பரையையும் அஞ்சாது பாடுவதுவே யமகண்டம். பாடலிற்றவறு நேர்ந்தால் கீழேயிருக்கும் தீயிலும், கொப்பரையிலும் விழவேண்டும். அவற்றுள் தள்ளுவதற்குத் தூணுடன் யானைகள் கயிற்ருல் பிணைக்கப்பட்டிருக்கும். கி. பி. 1450—80ல்

ஆண்ட திருமலைராயன் காலத்திருந்தவராக இவரது தனிப்பாடல் கூறும். சோழருக்குப்பின் புலவரைப் புரப் போரின்மையின் இவர் வசைக்கவி பாடுபவராயினர். 'கொடார்ப்பழித்தல்' வேண்டுமென்பதும் தொல்காப்பிய இலக்கணம். கடைச்சங்ககாலத்துக் 'கொடுப்போரேத்தல்' மட்டும் மிகுதியாக நிகழ்ந்தது. எனவே இவர் வசையி லும் ஆசு கவியிலும் சிறந்தவரானர்.

† இம்மென்னுமுன்னே எழுனூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரமும்' பாடினர். இப் பரம்பரை திரிசிர புரம் மீனட்சிசுந்தரம் பிள்ளை காலம் வரை வந்துள்ளது. புதிய கற்பனைகளும் சுறுக்கென்னும் ஒருவரிச்சுவைகளும் நிறைந்தன இவரது பாடல்கள். ஆசுகவி முதலிய நாற்

---

† 1 வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர் செயங்கொண்
 டான் விருத்தமென்னும்
ஒண்பாவிற் குயர் கம்பன் கோவையுலா அந்தாதிக்கு
 ஒட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் இரட்டையர்கள் வசைபாடக்
 காளமேகம்
பண்பாக உயர்சந்தம் படிக்காசலா தொருவர்
 பகரொணுதே.

2 தூதஞ்சு நாழிகையில் ஆறு நாழிகைதனில்
 பல்சந்த மாலை சொலவும்
சூழ் உலா அந்தாதி ஏழு நாழிகையினில்
 தொகைபெற வகுத்தோதவும்
பாதஞ் செய்மடல் கோவை பத்து நாழிகையினில்
 பரணியொரு நாள் முழுதினில்
பாரகா வியமெலாம் ஈரிருதினத்தினில்
 பகரவே கொடி கட்டினேன்,

கவித்திறன் பரவிய காலம் இது. அதி 'மதுரகவி' என்றே ஒருவர் இக்காலத்திருந்துள்ளார். காளமேகத்தை எதிர்த்தவர் அவரே. ஒரு இலக்கியத்தையும் புலவனை யும் நிலைத்ததாக்க ஒரு பாடலே ஏன் அதன் ஒருவரி தொடரே போதும். வெள்ளைக்கலையுடுத்தி என்றபாட லும் மண்தின்ற பாணம் என்றதொடரும் காளமேகத்தைக் காலங்கடந்த கவியாக்கியுள்ளன. 'எல்லோரும் எல்லாச் செல்வமும்எய்தலாலே' என்பதுபோன்ற பல தொடர்கள் கம்பர் பெயரை நிலைபெறச் செய்வன. காளமேகம் இறந்தபோது இத்தொடரை நினைத்து இரட்டைப்புலவர் கள் 'வேகுதே ஐயையோ மண்திறந்த பாணமென்ற வாய்' எனப் புலம்பியுள்ளனர். எனவே இரட்டையர் காலத்திருந்தவர் காளமேகம் என்பது புலனாகும். எதிரிக்கஞ்சாத கவியுள்ளம், ஔவை, அப்பர் முதலோர்க் கிருந்ததுபோலவே இவர்க்கும் இருந்துள்ளது.

## இரட்டையர்கள்

சோழநாட்டில் செங்குந்தமரபினர். ஒருவர் குருடர், மற்றவர் முடவர். குருடர் முடவரைச் சுமந்ததாகவும் முடவர் வழி காட்டியதாகவும் கூறப்படும். இருவரும் திறம்பெற்ற கவிஞர்கள். ஒருவர் பாடும் இரண்டடிகளை மற்றவர் இரண்டடி பாடி முடிப்பார். இப்படி இருவர் இணைந்து பாடும் பாடல்வகை ஆங்கிலத்திலும் உண்டு. அம்மானை, சாழல் முதலிய பாடல் வகைகள் அத்தகை யவே. வரபதியாட்கொண்டானென்ற கொங்கு மன்னன் இவர்களைப் போற்றினன். ஏகாம்பரநாதருலா, கச்சிக் கலம்பகம் முதலியன இவர்கள் பாடிய பிரபந்தங்கள். 1449—1485-ஆகிய ஆண்டுகளில் விசயநகரத்தரசப்

பிரதிநிதி திருமலைராயன் காலத்தில் இவர்கள் வாழ்ந் திருக்கக்கூடுமென்பர். காளமேகப் புலவர் காலமும் அதுவேயாகும்.

வரபதியாட்கொண்டானை வில்லிபுத்தூராரும் குறித் தலால் இவர்களும் வில்லிபுத்தூராரும் ஒரு காலத்தவ ரெனக் கருதுவர் ஆசிரியர். ஏகாம்பரநாதருலாவில் இவர்கள் திருமல்லிநாதன் உயர்சம்புபதி என்பவனைக் குறிக்கின்றனர். அச்சம்புபதியே சகாப்தம் 1331—1383-ல் ஆண்ட இராசநாரயண சம்புவாகலாம் என அறிஞர் கருதுவர். 'கலம்பகத்திற்கிரட்டையர்கள்' என இவர்கள் ஒன்றிய புகழை நாட்டிக்கொண்டனர். புலவர் தம் திறனுக்கும் மனதிற்குமுகந்த ஒரு வகை நூலையே மேலுமேலும் வ்ளர்த்தல் இலக்கிய வளர்ச்சிக்கு இன்றி யமையாததென்பது இதனாற் புலப்படும். ஒட்டக்கூத்தன் காலத்துத் தொடங்கிய பிரபந்தகாலம் இம்மூன்று நூற் றாண்டுகளிலும் ஒளிவிட்டு விளங்கியுள்ளது.

## வில்லிபுத்தூரார்

வரபதி யாட்கொண்டானே வில்லியைப் பாரதம் பாடுவித்தவன். இரட்டையர் 'அவனைப்பாடியுள்ளனர். 'வடித்தசுடர்வேற் சம்பன்வாழ் மல்லிநாதன்' எனச்சம்பு என்ற ஒரு அரசனை இரட்டையர்தம் ஏகாம்பரநாதருலா வில் பாராட்டுகின்றனர். பல்லவப்பிரிவினருள் மண் கொண்ட சம்புராயன் (1321—39) அவன் மகன் இராசநாராயண சம்புராயன் என இருவர் இக்காலத் திருந்துள்ளனர். வில்லி முதல் சம்பு காலத்தவரெனவும் இரண்டாம் சம்பு காலத்தவரெனவும் இரு காலங்களில் வைக்கப்படுகிறார். திரு. மு. ரா. முதலோர் பின்னவன் காலத்தவர் வில்லியெனவே கருதுகின்றனர்.

அருணகிரியும் வில்லியும் ஒரு காலத்தவர் என்ற கொள்கைக்குப் பின்னவன் காலமே பொருந்துகின்றது. பரம்பரைச் செய்தியை வீணே மறுக்கவேண்டியதில்லை. 14-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிவரை வாழ்ந்து இரட்டையர் வரபதியையும் பாராட்டியிருக்கலாம். வில்லி 14-இன் கடைசியிலும் 15-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தும் இருந்து அத்தொடக்கத்திருந்த அருணகிரியுடன் சம காலத்தவராயிருக்கலாம். வில்லி பாரதம் பெரியபுராண நினைவுடன் எழுதப்பட்டிருக்கலாம். இரண்டும் அமைப்பில் ஒற்றுமையுடையன. இது சந்தப்பாக்கள் வளர்ந்த கால முமாகும். வில்லியும் அருணகிரியும் சந்தப்பாக்கள் பாடுதலில் வல்லவர்கள். திருக்குறளைப்போலத் திருப்புகழும் அத்தகைய பாவகையில் ஒப்பற்றதாகும். முன்னும் பின்னும் அவ்வகை நூலொன்று சிறக்கவேயில்லை. கம்ப ராமாயணமும் இக்காலத்தே புகழ் பரவியிருக்க வேண்டும். நல்லாப்பிள்ளைப் பாரதமும் வில்லிக்குமுன் நிற்கவில்லை. இன்றுவரை ஆண்டுதோறும் ஊர்ப்புரங்களில் பாரதம் சொல்வோர் இப்பாரதத்தையே துணையாகக் கொண்டு வந்தனர். கம்பராமாயணம் பெரிதும் கற்றோரிடையே மிகுதியும் பழகியது; இவரது பாரதப் பாடல்கள் கல்லாதவர் வரையும் சென்று அனைவரையும் பிணித்தது. இருவரும் தமிழகத்தில் சைவ வைணவப் பொதுமையை நிலை நாட்டியவராவர். 'முடிமேல் அடி வைத்தவன்' எனப் பெரியபுராண காலத்திலேயே நிலை குலைந்த சமயப்பொதுமையை மீண்டும் நிலை நாட்டப்பிற் காலத்தே இவர்கள் பெரும்பாடுபட்டுள்ளனர். இவர்களெல்லாம் தமிழுக்காக வாழ்ந்த நக்கீரப்பரம்பரையினர். ஆந்திரச் (ராயர்) செல்வாக்குத் தமிழகத்திற் பரவியதால் ஆந்திர (தெலுங்கு) மொழிபோன்று தெலுங்கும்

ஆரியமயமாக ஆகிவிடாமல் காத்தவர் இவர்களாவர். திறங்காட்டிக்கவிதை பாடிய காலம் இதுவெனக் காளமேகத்தைப்பற்றிக் கூறியபோதே கூறப்பட்டது. காளமேகம், வில்லி, அருணகிரி முதலியவர்கள் இவ்வாறு திறங்காட்டிக் கவி (திறக்கவி) பாடியவர்கள்.

## அருணகிரி

திருமுனைப்பாடி நாட்டிற் பிறந்த வில்லிபுத்தூரார் எதிரிகளைக் குறும்பியளவாக் காதை எட்டினமட்டும் தோண்டியறுப்பவர். அவரே அருணகிரியின் கந்தரந்தாதி 54-ஆம் பாடலுக்குப் பொருளுரைக்கையில் திகைத்துத்தோற்றனர் என்பர். அருணகிரியின் கருத்திற்கிணங்கியே இவர் விநாயகர் வணக்கம் பாடியதாகக் கூறப்படுகின்றது. இவர் கம்பரைப்போலவே சைவ வைணவப் பிணக்கின்றிச் சமரசமாகவே பாடியுள்ளார். முருகன் சைவத்திற்குரியனாகக் கருதப்படினும் அருணகிரி ஒவ்வொரு பாடலிலும் அவனைத் திருமால் மருகனாகப்பாடிச் சமரசங்காட்டியுள்ளார். இக்கால விஜயநகர ராயர்கள் நல்ல வைணவர்கள்.

திருப்புகழ் பதினாயிரத்துடன் கந்தரந்தாதி கந்தரனுபூதி முதலியனவும் அருணகிரி இயற்றின. பதினாயிரக் கணக்கான பாடல் பாடுந்திறன் கம்பர்போன்றோர்க்கே இருந்ததாகும். வில்லிபாரதம் 4000-பாடல்களையுடையது. ‡'கந்தரனுபூதி பெற்றுக் கந்தரனுபூதி சொன்ன எந்தை

---

‡ "வாக்கிற் கருணகிரி வாதவூரர் கனிவில்
தாக்கிற்கு ஞான சம்பந்தர் — நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்."

அருணகிரியெனத் தாயுமானவர் அருணகிரியைப்போற்றி யுள்ளார். முருக-நாயனுர் அருணகிரியெனலாம். ஏழாம் நூற்ருண்டிலிருந்தவர்கள் சைவ-நாயன்மார். ஊர்தோறும் சென்று முருகன் புகழைப்பாடினுர். கந்தபுராணப்புகழ் பரவியகாலமிதுவாகலாம். சிவன் திருமால் கோயிலிருந்த ஊர்களிலெல்லாம் இவரால் முருகன் கோயில்கள் தோன்றின; புதிய ஊர்களிலும் தோன்றின. முருகன், சிறுவன் என்பதின்றிச் சிவன் மால் முதலியோர்க்கும் ஒப்பானவனென நினைக்குமாறு செய்தவர் அருணகிரியா வார். வில்லி, அருணகிரி இருவரையும் தொடர்ந்து படிக்காசுப்புலவர் சந்தத்தில் பேர்பெற்றிருக்கிருர். திருப் புகழ்படித்தல் அரிய இலக்கியப் பயிற்சியாகவிருந்துள்ளது தேவாரம்போன்று இசைப் பாடலாகவும் அவை பயன் பட்டுள்ளன.

## 16-ஆம் நூற்ருண்டு.

இந்நூற்ருண்டு புராண வளர்ச்சி மிக்கது. பரஞ் சோதி, அதிவீரராமன் நூற்ருண்டென இதனைக் கூற லாம். தஞ்சையிலும் மதுரையிலும் நாயக்கர் ஆட்சி உயர்ந்துவிட்டது. பாண்டிய குலத்தைச்சேர்ந்த அதிவீர ராமன் தென்காசியில் சென்று தங்கிவிட்டார். பரஞ் சோதி திருமறைக் காட்டில் வாழ்ந்தவர். ஆள்வோர் வைணவர்களாதலால் சைவத்தைச்சார்ந்த இவர்கள் தலைநகரத்திற்குத் தொலைவிட்டவிடத்தில் இருந்து அமைதி

‡"காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே — தேசு பெறும்
ஊழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு."

யாக இலக்கியப்பணி செய்தனர். சைவசித்தாந்த நூல்கள் பலவும் இக்காலத்தில் பெருகின. அரிதாசர் இரு சமய விளக்கமும் இரேவண சித்தர் சிவஞான தீபமும் ஆறுமுக சுவாமிகள் நிட்டானுபூதியும் இயற்றினர். மறைஞானசம்பந்தர் சிவதருமோத்திர மியற்றினார். பாண்டிய நாட்டில் வீரகவி யென்ற பொற்கொல்லர் அரிச்சந்திர புராணம் பாடினார்; திருவுத்தரகோசமங்கைப் புராணமும் திருவொற்றியூர்ப் புராணமும் திருவாரூர்ப் புராணமும் இக்காலத்தேதான் தோன்றின. செவ்வைப்பூச் சூடுவார் என்பவர் பாகவத புராணமியற்றியது இந் நூற்றாண்டின் குறிப்பிடத்தக்க வளர்ச்சியாகும். அதிவீரராமர் நிரம்ப அழகிய தேசிகரின் மாணவர்; பரஞ்சோதி, தேசிகரின் உடன்பயின்ற மாணவராகக் கூறப்படுகிறார். தேசிகர், சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு உரையெழுதினார்; இவர் எழுதியது சேதுபுராணமாகும். இலக்கண நயம்பெறப் பாடுபவர்.

## அதிவீரராம பாண்டியன்:

தோற்றம் 1565. வெற்றிவேற்கையால் புகழை நாட்டியவர் வீரராமர், இவரது குடும்ப முழுவதும் புலமை நலம்வாய்ந்தது. இவரது அண்ணன் வரதுங்கராம பாண்டியனும் அவர் மனைவியும் சிறந்த புலமையுடையவர்கள். வரதுங்கரது மனைவியே நைடதத்தைப்பற்றி, ‘நாய் விரைந்தோடி இளைத்தாற்போன்று முதலில் விறுவிறுப்பாகவும் போகப்போக தளர்ச்சியுற்றும் கவிதை செல்வதாகக் கூறியவர்.’ அவரே பாடுந் திறமையுடையவர். நைடதத்தால் பெருமை பெற்றவர் அதிவீரராமர். அகப்பொருளில் சுவைகண்ட தமிழுக்கு நைடதம் ஒரு

சிறந்த இலக்கியமாகியது. காசிகாண்டம், இலிங்க புராணம்,மாக புராணம் முதலியவற்றையாக்கினர்.கருவை பயந்தாதி குட்டித்திருவாசகம் என்ற பெயரைப் பெற்ற தாகும். வரதுங்கர் கொக்கோகம், பிரமோத்தரகாண்டம் முதலியவற்றை இயற்றினர்.

இன்பச்சுவை சொட்டச்சொட்ட பாடப்பட்டது நைடதம். கொக்கோகம் பாடியவரது தம்பி வீரராமர்! நீண்ட காலமாக அகச்சுவையிலக்கண விலக்கியங்களை நல்லனவாகக் காணுத தமிழகம் இவரது நைடதத்தை நன்குப்பாராட்டிக்கொண்டது. இவர் பாண்டிய மரபினர்; நாயக்கமன்னர்க் குட்பட்டுச் சிறு குடியினராய் இருந்திருக்கிருர். 'குடைநிழலிருந்து' என்ற இவரது வெற்றிவேற்கைப் பாடல் ஓர் அகச்சான்ருகலாம். இவர் வெற்றிவேற்கையிலும், வில்லி, பாரதத்திலும், குமரகுருபரர் சிவப்பிரகாசர் ஆகியோர் நீதிநெறி விளக்கம் நன்னெறி ஆகியவற்றிலும் நீதிக்கருத்துக்களை வற்புறுத்தியவராவர். வெற்றிவேற்கை, அண்மையில் ஔவையால் பரவிய ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் முதலிய ஒருவரிப்பாக்களைத் தழுவியது- கம்பரும், சிவப்பிரகாசரும் குறளை நன்கறிந்தவர்கள். அறநெறிச்சாரம் இக்காலத்தண்மையில் ஏற்பட்டது எனவே இந்நூற்ருண்டுகளிலும் இவர்கள் பக்தியுடன் அறநெறிகளையும் நீதிகளையும் விடாமல் பரப்ப வேண்டியிருந்தது. வசதிகளுடன் அமைதியாகவிருக்கும் செல்வர்கள் இலக்கியப்பணியில் இறங்கிருல் எவ்வளவு நன்ருகுமென்பதற்கு அதிவீரர் வாழ்க்கையே சான்ருகலாம். பல்லாயிரக்கணக்கானப் பாடல்களைப் பாடினர். குட்டித்திருவாசகம் எனப்பாராட்டப்படுமளவு தனது பாடல்களையும், பக்தியையும் ஆக்கிக்கொண்டார். இவரும்

பரஞ்சோதியும் இந்நூற்றாண்டினை ஒளியுடையதாக ஆக்கியுள்ளனர்.

## பரஞ்சோதி முனிவர்

இந்நூற்றாண்டின் வில்லி யெனத்தக்கவர். சோழர் பெருமையைப் பெரியபுராணம் பாடியதுபோல இவரது திருவிளையாடல் பாண்டியரது பெருமையைப் பாடியது. இவர்க்கு முன்னியற்றப்பட்ட நம்பி திருவிளையாடலினும் இவரது புராணம் பரவி வழங்கியது. கடைச்சங்கத்திற்குப்பின் கி. பி. 6-ஆம் நூற்றாண்டுவரைப்பட்ட பாண்டியர் வரலாறு திருவிளையாடலில் அடங்கியுள்ளது. இப்பாண்டியரது கால வரிசையொன்று நான்காஞ்சங்க கால வாராய்ச்சியில் கணிக்கப்பட்டது. அக்கால நிலையையறிதற்கும் இப்புராணம் பெருந்துணை செய்யும். இவ்வகையில் வேள்விக்குடிச் சாசனத்துடன் பெருந்தொடர்புடையது திருவிளையாடற் புராணம். இது வரலாற்றுக் குறிப்புக்கள் மிகவுடையது. பாண்டியர் பெயர்களையெல்லாம் ஒருவாறறிந்து குறிப்பிட்டதே இப்புராணத்தின் சிறப்பாகும்.

இக்காலத்திலேயே 'சுந்தரபாண்டியம்' என்னும் மதுரை மான்மியத்தை யெழுதினர். அதனினும் மேம்பட்டு விளங்கியது திருவிளையாடற் புராணம். பெருங்காப்பிய நயங்களுடன் சைவசித்தாந்தக் கருத்துக்களை மிகுதியாகக் கொண்டது இந்நூல். இவர் தமிழுணர்ச்சியும் பற்றுமிகவுடையவர்; 'தொண்டர்நாதனை, வடமொழியை' என்ற இவரது பாடல்கள் மிகவும் வரலாற்றுண்மை கொண்டவை. இறைவனே தமிழைப்படைத்தவன் எனக்

கருதிய இவர் சைவத்திற்கொண்ட பற்றினை மொழியிலும் கொண்டார். இக்காலத்தில் இவர் சோழ நாட்டிலும், அதிவீரராமர் பாண்டிய நாட்டிலும் தமிழை வளர்த்தவ ராவர். சோழ நாட்டிற்றோன்றிய பெரிய புராணத்திற் கொப்பாகப் பாண்டிய நாட்டில் தோன்றியது திருவிளை யாடல் புராணமாகும். கம்பரும் வில்லியும் காவியப் புலவருள் இரட்டைகளெனில் சேக்கிழாரும் பரஞ்சோதி யும் சைவப்புராண இரட்டைகளெனலாம். பக்திநலமும் சைவ தத்துவ நலமும் கொண்டது திருவிளையாடல். வாழ்க்கையின் பலதுறையுணர்ச்சிகட்கும் விருந்தளிப்பது. சாமுத்திரிகா இலக்கணம், குதிரை இலக்கணம், நவமணி இலக்கணம், இசை நாட்டிய (பரதம்) இலக்கணம் ஆயவற்றிற்கெல்லாம் நுண் குறிப்புக்களையுடையது. இவ் வகையிற் சிலப்பதிகாரத்தை நினைவூட்டுவது; இந்நூல் நம்பி திருவிளையாடலையும் விஞ்சிவிட்டது. சைவத்தைப் பிற்காலத்தே நிலைக்கச்செய்தன இவ்விரு புராணங்களே.

## 17-ஆம் நூற்றாண்டு

இந் நூற்றாண்டு பெரிதும் பிரபந்தத்திற்குரியது; இதனைக் குமரகுருபரர், சிவப்பிரகாசர் நூற்றாண்டென்ன லாம். குமரகுருபரர் வரலாற்றில் மகம்மதியச் செல் வாக்கு வளர்ச்சிபற்றிய குறிப்புள்ளது. உமறுப்புலவர் இக்காலத்துத்தோன்றி சீறாப்புராணம் பாடினர். இந் நூற்றாண்டிலக்கியத்திற்குச் சீதக்காதியென்ற வள்ளல் ஆக்கம் தந்துள்ளான். செத்தும் கொடைகொடுத்த சீதக் காதி இவனே, 'பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகர்வொணாதே' யெனச் சந்தப்பாட்டில் சிறந்தோங்கிய படிக்காசுப் புலவர் இவ்வள்ளலுடன் நட் புடையவர். தொண்டைமண்டல சதகம்பாடிச் சதகப்

பிரபந்தவகையைத் தொடங்கி வைத்தார். இச்சதகம் சிறந்த இலக்கிய வரலாருகும். கொங்கு, சோழ மண்டல சதகங்களும் இக்காலத்தேயியன்ற இலக்கிய வரலாறு களேயாகும். இவரும் சீருப்புராணமியற்றிய உமறுப் புலவரும் சீதக்காதித் தொடர்புள்ளவர்கள்.

"தமிழ் நாவலரை ஓட்டாண்டியாக்கி அவர்கள் தம் வாயில்
ஒருபிடிமண், போட்டான் அவனும் ஒழிந்தான் சமாதிக்
குழிபுகுந்தே"

என அவனது மறைவு குறித்து இரங்கிப் பாடினுர் படிக்காசுப் புலவர். எட்டயபுரத்தரசரும், மச்சபுராண மியற்றிய வடமலையப்ப பிள்ளையும் இக்காலத்தவரே. மாறனலங்காரம் இலக்கண விளக்கம் இலக்கணக் கொத்து முதலிய இலக்கண நூல்கள் இந்நூற்ருண்டில் இயன்றன. இலக்கண விளக்கமுதலியவை குறைபாடு மிகவுடைய வென்பதற்குச் சிவஞான முனிவர்போன்ற வர்கள் அவற்றிற்கு மறுப்பெழுதியமையாற் புலனுகும். 'ஐந்தெழுத்தாலொரு பாடையும் உண்டென்றறையவும் நாணுவர் அறிவுடையோரே' எனத்தமிழைத் தாழ்த்திக் கூறிய இலக்கணக் கொத்தினர் மொழிவரலாறுணராது முட்டுப்பட்டவர் என்பது பலராலும் அறியப்பட்டது. இலக்கண விளக்கம் தொல்காப்பியத்தை நினைத்தெழுதிய விரிவான ஐந்திலக்கணம். சிவஞானபோதத்திற்குப் பாண்டியப்பெருமாள் உரை ஏற்பட்டது. இந்நூற்ருண்டு முதல் சைவமடங்கள் வளர்ந்து தமிழிலக்கியங்களுக்கு ஊக்கமளித்துள்ளன.

அந்தகக்கவி வீரராகவ முதலியார் சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், திருவாருருலா முதலியன பாடினுர்.

இரட்டையரும் இவரும் உடலில் இருக்கும் குருடு, முடம் முதலிய குறைபாடுகள், கவிதையில் குருட்டையும் உண்டாக்கமாட்டாவெனக்காட்டினர்.

400-துறைகளை விளக்கி 400-கட்டளைக்கலித்துறைப் பாடல்கள் பாடுவது யாவர்க்குமியல்பு. ஆனால் ஒரே பொருதுறையை (நாணிக்கண் புதைத்தல்) விளக்கி 400 பாடல்பாடிய புலவருக்கு அமிர்தகவியென்ற பெயர் ஏற்பட்டது பொருத்தமேயாகும். சேதுபதியரசர்கள் தமிழ்வளர்க்கத் தொடங்கிய காலம் இது. பாடல்கள் நயமும் தெளிவும் அழகுமுடையன.

'சங்கிலியாரையுங் கண்டேன் பரவ்வதனையுங் கண்டால்
மங்கல சுந்தரனென்றெனையே தொழுமண்டலமே'

என்ற வரிகளைப் படிக்கவேண்டும்.

சைவத்திற்கு எல்லப்ப நாவலரும், வைணவத்திற் குப் பிள்ளைப்பெருமாளையங்காரும் விளங்கினர். நாவலர் அருணைப்புராணமும் கலம்பகமும் பாடியவர். 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை அதிற்சார் சிவமாம் தெய்வத்தின் மேற்றெய்வமில்லை' என நிறுவ முயன்றவர் அவர்.

அட்டப்பிரபந்தமெழுதிய ஐயங்காரைப்பற்றி யறியாதாரில்லை. மணவாளமாமுனிகளின் மாணவர்க்கு மாணவர் இவர், சித்திரகவி பாடுதலிற் சிறந்தவர். ஐயங்காரும் நாவலரும் தத்தம் சமயத்தை உயர்த்தியும் பிற சமயத்தைத் தாழ்த்தியும் பாடத் தொடங்கியவரெனத் தெரி கின்றது. திருவரங்கத்தில் வாழ்ந்த இவர் திருவரங்கம் திருவேங்கடம் ஆகியவிடங்களிற் கோயிற்கொண்ட பெரு மாளைப்பற்றிப்பாடிப் பெயர் பெற்றார். "இரகு வம்சம்'

என்ற காளிதாசனது நூலை அரசகேசரியென்பார் தமிழில் மொழிபெயர்த்தார். மொழிபெயர்ப்புட் சிறந்தது இந்நூல்.' திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி, திருவேங் கடத்தந்தாதி முதலியன அவரது நூலுட் சிறந்தவை. வைணவப் பிரபந்தங்களுள் இவரது நூல்களுக்குச் சிறந்த இடமுள்ளது.

## குமரகுருபரர்

இமயம்வரைத் தமிழ்க்கொடியேந்திச் சென்றவர் குமரகுருபரர். இவரது ஊர் சீவைகுண்டம். 'முன்நூற் ருண்டில் அதிவீரரார் காசிமகாண்டமெழுதினுர்.' இவர் காசியில் சைவமடம் நிறுவினுர். இளமையிலேயே கந்தர் கலிவெண்பாப்பாடி முருகனருள்பெற்றவர். மதுரையில் நாயக்க மன்னர் முன் (1650 திருமலை நாயக்கர்!) மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழும் மதுரைக் கலம்பகமும் இயற்றினுர். பிள்ளைத்தமிழில் வருகைப்பருவப் பாட லொன்றைப் பாடும்போது மீனுட்சியம்மையே குழந்தை யாக வந்து அதனைப் பராட்டினுள் என்பது வரலாறு.

இவரும் சிவப்பிரகாசரும் முறையே நீதிநெறி விளக் கத்தாலும் நன்னெறியாலும் மாணவர் மனதிற் பதிந்து விட்டவர்கள். பிள்ளைப் பெருமாளையங்காரைச் சமய வாதில் வென்ருரெனக் கூறப்படுகிருர். முத்துக்குமர சாமிப் பிள்ளைத்தமிழ்ப் பாடினுர். தருமபுர மடத்துடன் தொடர்புகொண்டு காசி சென்றனர். அங்கு டில்லி மகம்மதிய அரசர்முன் தமிழின் சிறப்பையுயர்த்திப் பாராட் டப்பெற்ருர். சகலகலாவல்லிமாலை அங்குப் பாடியதே. இவர் கம்பராமாயணம் சொல்லக்கேட்டு †துளசிதாசர்

† கலைக் களஞ்சியம் — 'துளசிதாசர்'

தமது இந்தி ராமாயணத்தை எழுதினர் என அறிஞர் பலர் கூறுகின்றனர். ஆனல் துளசிதாசர் 122 ஆண்டு கட்கு மேலும் வாழ்ந்தவராயும் இவர்க்கு முன்பே இராமா. யணத்தை முடித்துவிட்டதாகவும் தெரிகிறது. தமிழகத் தில் முகம்மதியரது செல்வாக்கு (மலிக்காபூர்) இவரது நூல்களில் குறிக்கப்படுகின்றது. பிள்ளைத்தமிழ்க்கு ஒட்டக்கூத்தர் என்பதுபோய் குமரகுருபரர் எனக்கூற வேண்டி வந்ததெனலாம். இவரது மீனுட்சியம்மை, முத்துக்குமரசாமி பிள்ளைத் தமிழ்கள் பெயர்பொறித்தவை யாயின. மீனுட்சிசுந்தரம்பிள்ளை புராண வேந்தரெனில் இவர் பிரபந்த வேந்தரெனலாம். திருப்பனந்தாள் மடத் துச் சைவத்தையும் தமிழ் மொழியையும் காசி வரையில் வாசஞ்செய்யவைத்தவர் இவரேயாவர். 'தொடுக்குங் கடவுட் பழம்பாடல்' முதலிய பாடல்களால் இவரதிலக்கி யங்கள் நிலைபெற்றுவிட்டன. இவரது பாடல்கள் தெளி வும் அழகுமுடையன. கம்பராமாயணத்துடன் ஒத்த பகுதிகள் பல இந்தி ராமாயணத்திலிருப்பதாகக் கூறப் படுகிறது. இவரது பிரபந்தங்கள் யாவும் தமிழரால் நன்கு படிக்கப்படுபவை. பண்டார மும்மணிக்கோவை முதலியன அவற்றுட்சில. தமிழிலக்கியப் பிரபந்தப்பகுதி யுள் இவரது நூல்கள் ஒரு சிறந்த பகுதியாகும்.

## சிவப்பிரகாசர்:

தோற்றம் 1652. இவரை வளர்த்ததும் ஒரு சைவ மடமேயாகும். இவரதூர் துறைமங்கலம், இவரும் தரும புரத் தொடர்புடையவர். அங்குச் சிறந்த சைவத் தமிழ்ப் புலவராய் விளங்கிய வெள்ளியம்பலத் தம்பிரானிடம் பாடங் கேட்டவர். அதிவீராமர் குடும்பம்போன்று இவரது தம்பியரும் புலமை நலமிக்கவர்கள். இவரும் தம்பி கருணைப்பிரகாசரும் சேர்ந்து சீகாளத்திப் புராணத்தைப்

பாடினர். இவரது 'நன்னெறி' பற்றி முன்பு கூறப்பட்டது. இவரது 'நால்வர் நான்மணி மாலை' மிக்க புகழ் பரவியதாகும். நால்வர் புகழை நானிலத்திற் பரப்ப மிகவும் அது உதவியது. பாக்கள் கற்பனையம் இனிமையு முடையவை. காளமேகத்திற்கடுத்த காலம் இது. சித்திர கவியில் இவரும் சிறந்தார். நீரோட்டகமென்பது வாயிதழிரண்டும் இணையாமலே ஆகும் எழுத்துக்களாற் பாடுவது. அதாவது 'ப, ம' முதலியவெழுத்துக்கள் இல்லாமலே பாடுவது. அவ்வகையில் திருச்செந்தூர் முருகன் மீது 'நீரோட்டகயமக வந்தாதி' பாடி வெற்றியடைந்தவர் பிரகாசர். சோணசைல மாலையும் பிரபுலிங்கலீலையும் இவரது நூல்களுட் சிறந்த வெனலாம். இவர் வீரசைவர் ஆதலின் அப்பிரிவின் கோட்பாடுகளை அழகாகப் பிரபுலிங்க லீலையில் விளக்குகிறுர். இந்நூல் கற்பனையும், தத்துவ நுட்பமும் உடையது. வீரசைவத்திற் கிதனிலும் சிறந்த தமிழ்நூல் வேறில்லை.

கிறித்துவம் இந்தியாவில் பரவத்தொடங்கிய காலம், ஏசுமத நிராகரண மெழுதிக் கிறித்துவத்துக்குத் தடையிட முயன்றுர். அப்போது கிறித்துவ மதத்தைப் பரப்பியவர் வீரமாமுனிவர். குமரகுருபரரும் சிவப்பிரகாசரும் தமிழ்ப் 'பிரபந்த மன்னர்கள்' எனத் தக்கவராவர். முதல்வர் பாண்டியர், பின்னர் சோழர் என்னலாம். இவர்கள் காலமுதல் சைவ மடங்கள் தமிழ்தொண்டு புரியத்தொடங்கின, அவற்றின் பெருமையைப் பரப்பியவர்கள் இவரிருவருமாவர். அடுத்த மூன்று நூற்றுண்டுகளிலும் முறையே சிவஞான முனிவர், மீனுட்சிசுந்தரம்பிள்ளை, சாமிநாதய்யர் முதலியோர் இம்மடங்களின் சார்பில் வளர்ந்தவர்கள். சைவத்திற்கு இவரிருவரும் இக்கால அப்பரும் சம்பந்தருமென்னலாம்.

# 18, 19, 20-நூற்ருண்டுகள்

## 18-ஆம் நூற்ருண்டு

இம்மூன்று நூற்ருண்டுகளையும் சமயப் பொறைக் காலம் அல்லது சமயக்கலப்புக் காலம் என்னலாம். தமிழகத்தில் இஸ்லாமும் கிறித்துவமும் மிகுதியாகப் பரவின; அம்மதங்களைச் சேர்ந்த புலவர் பலர் இலக்கியப் பணி செய்யத்தொடங்கினர். பலசமயக் கலப்பிருந்தமை யால் ஆசிரியரிடையே சமயப் பொறையும் ஏற்பட்டது. தாயுமானவர், இராமலிங்கர், பாரதியார் போன்றவர்கள் பொதுமைச் சமயக்கோட்பாடுகளை வற்புறுத்தினர். இலக்கியப் பொருளும் இப்போக்கைத் தழுவிச்செல்லலாயிற்று. வேதநாயகம் பிள்ளை சர்வசமய சமரசக் கீர்த்தனை எழுதினுர். மேனுட்டாரது ஆட்சி தமிழகத்திலும் பரவியதற்கேற்ப வீரமாமுனிவர், கால்டுவெல், போப் முதலியவர்கள் இங்குத்தங்கித் தமிழ்த்தொண்டாற்றினர். தமிழ் இலக்கியங்களின் புதுமுறை பலவற்றிற்கு வழிகாட்டி நூல்களெழுதினர். பைபிள் மிகவாகக் கற்கப்பட்டு மொழிபெயர்ப்பு வேலையும் தொடங்கியது. ஆங்கிலம் முதலிய பிற மொழி கற்ற புலவர் அம்மொழி நெறிகளை யொட்டி நூல்களியற்றினர். இலக்கிய வரலாறுகள், தமிழக வரலாறுகள், இலக்கிய மதிப்பீடுகள் முதலியவெல்லாம் இத்தகு நெறிப்பட்ட இலக்கியங்கள். பல இனத்தவரது கலப்பினுல் விழிப்பேற்பட்டுத் தத்தம் மொழி, சமயவளர்ச்சிபற்றி உணர்ச்சியும் பெருகியது. சமயக் கிளர்ச்சியினுலும் பூசலும் 19-ஆம் நூற்ருண்டிலேற்பட்டன. அரசியல் கிளர்ச்சியும் அந்நூற்ருண்டின் கடைசி

யிற்ருேன்றி 20-ஆம் நூற்ருண்டில் மேலோங்கிவிட்டது. இவையெல்லாம் இலக்கியப்பொருள்களில் இடம்பெற்று விட்டன.

இதனைத் தாயுமானவர், சிவஞான முனிவர் நூற்ருண்டென்னலாம். வீரமாமுனிவர் காலமும் இதுவாகும். சிவஞான முனிவரது மாணவர் கச்சியப்பமுனிவர் பல நூல்களை யாக்கினுர். அருணுசலக்கவி, திரிகூடராசப்பர் போன்ருேர் பொதுமக்கள் இலக்கியங்களையும், நாடகங்களையும் இயற்றி வரலாற்றில் இடம்பெற்றனர். சிறுவர் மனத்துட்பாடிப் பதிந்த உலகநீதி இந்நூற்ருண்டு நாவிதப் புலவரொருவரால் இயன்றது. அநந்தரங்கம்பிள்ளை புகழ்பரவிய நூற்ருண்டிது. அவரைப்பற்றிப் புலவர்பலர் பாராட்டிப் பாடினர். ஆநந்தரங்கர் பிரஞ்சுக்காரரிடம் அமைச்சராயிருந்தவர்; வீரமாமுனிவர் பிரஞ்சுநாட்டிலிருந்துவந்த பாதிரியார். பிரஞ்சுக்காரரர் செல்வாக்கு இந்நூற்ருண்டில் தமிழகத்தில் பரவத் தொடங்கியது. இஸ்லாமியப் புலவர் பலர் தம் சமயத் தொடர்புற்ற பரப்ந்தங்களியற்றினர், இம்மூன்று நூற்ருண்டுகளையும் வேறு பெயர்களால் குறிப்பதைவிட உரைநடைக் (வசன) காலம் என்பது பொருந்துவதாகும். வீரமாமுனிவர் இப்போதே உரைநடைக்கதை யெழுதத் தொடங்கிவிடுகிருர். பின்னிரு நூற்ருண்டுகளில் உரைநடை மிகுதியும் வளர்ந்துவிடுகின்றது. 19-ஆம் நூற்ருண்டில் ஆறுமுகநாவலர் இவ்வகையில் பெருஞ்செயல் புரிந்தார்., 19-ஆம் நூற்ருண்டில் அரும்பிய உரைநடை நாவல் சிறுகதைகள் 20-ஆம் நூற்ருண்டில் மலர்ச்சியுற்றுப் பரவிவிட்டன. சிவப்பிரகாசத்தைத்தொடர்ந்து வீரசைவ சமயாசாரியராய்ச் சாந்தலிங்க சுவாமிகள் என்பார், நெஞ்சுவிடுதூது, கொலைமறுத்

தல் ஆகிய நூல்களை இயற்றினர். பலபட்டடைச் சொக்க நாதர் அழகர் கிள்ளைவிடு தூதென்ற அழகிய இனிய பிரபந்தத்தை யியற்றினுர். தாசி காளிமுத்து என்பவள் வருணகுலாதித்தன் மடல் பாடினுள். தஞ்சையில் மராட்டியர் ஆதிக்கம் பரவ, ஒப்பிலாமணிப்புலவர் 4000 பாடல்களில் 'சிவரகசியம்' இயற்றினுர். அபிராமிபட்டர் சரபோசி மன்னனவையில் இருந்தவர். அரபத்த நாவலர் பரதசாத்திர இலக்கணம் எழுதினுர். இது நாடகக்கலைக்குச் செய்ததோர் நற்பணியாகும்.

தாண்டவராய சுவாமிகள் 'கைவல்'யம் என்ற உயர்ந்த தமிழ் வேதாந்த நூலை இயற்றியதும் இந்நூற்ருண்டிலாகும். பழைய கல்விமுறையில் நல்ல இடம்பெற்றிருந்த சததங்கள்பல இப்போது தோன்றின. தண்டலையார் சதகம், நாராயண சதகம், எம்பிரான் சதகம் முதலிய குறிக்கத் தக்கன. சதகங்களுக்குத் தூண்டுதலளித்து முதலாக எழுதியவர் படிக்காசுப்புலவர் (கொங்குமண்டல சதகம்). திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் பகழிக்கூத்தரால் இயன்றது. சிவஞான முனிவரது மாணவர் பலர் பிரபந்தங்கள் பாடினர். முகையதீன் புராணமியற்றிய வண்ணக்களஞ்சியப் புலவர் முதலிய முஸ்லீம் புலவர் பலர் இந்நூற்ருண்டில் விளங்கினர்.

திருப்பூவணநாதருலா பாடிய கந்தசாமிப் புலவரும் சிவசிவ வெண்பாபாடிய சென்னிமல்லையரும் இக்காலத்த வரே. இவ்வெண்பா முதுமொழி வெண்பா போன்று குறளுக்கு விளக்கமாயது. கூளப்ப நாயக்கன் காதல், விறலிவிடுதூது முதலிய புகழ் பெற்ற காதலிலக்கியங்கள் தோன்றின. இங்குத் தூதிலக்கியம் பெருகுகின்றது.

## வீரமா முனிவர்

1680—1746 இவரதியற்பெயர் 'பெஸ்சி' என்பது. திருநெல்வேலிப் பகுதியில் தங்கிச் சமயப்பணிபுரிந்த பிரஞ்சுப் பாதிரியார். சுமார் 60-ஆண்டுகள் தங்கித் தமிழர்தம் சமயங்களுடன் ஒன்றுபட்டது போலவே மொழியுடனும் ஒன்றுபட்டார். திருநெல்வேலிக் கிறித்துவத்திற்குப் பெருங்காரணமாயது போலவே இன்றைய புதுமுறை யிலக்கியங்களுக்கும் பெருந் தூண்டுதலாயமைந்தவர். இத்தூண்டுதல் கொண்டு அடுத்த நூற்ருண்டில் வந்த போப்பும் கால்டுவெல்லும் சிறந்த இலக்கணங்களையும் மொழிபெயர்ப்பையும் இயற்றி இலக்கியத்துள் நிலைத்த இடம் பெற்றுவிட்டனர்.

தேம்பாவணியென்ற பெருங்காவியமியற்றிக் 'கிறித்தவக்கம்பன்' எனப் பாராட்டப்பெற்றவர் வீரமாமுனிவர். இவரது சதுரகராதி, அகராதி வளர்ச்சிக்கு வழிகாட்டியது, அதனைத்தொடர்ந்து தமிழில் கிறித்தவராலேயே தொகுக்கப்பட்ட அகராதிகள் பல. இன்றைய பல்கலைக்கழகம் பேரகராதிக்கெல்லாம் (Lexicon) இது தூண்டுதலென்னலாம். தொன்னூல் என்ற இலக்கணமும் அவிவேக பரிபூரண குருகதை என்ற உரைநடையு மெழுதினுர். இக்கதை பிரதாப முதலியார் சரித்திர முதலியவற்றிற்கு வழிகாட்டியெனலாம். கூளப்பநாய்க்கன் காதலியற்றிய சுப்ரதீபக் கவிராயரே முனிவர்க்குப் பெருந்துணையாயிருந்தவர். பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டுமென்ருர் பாரதி. பிறமொழியிலுள்ள சிறந்த நூல்கள், கதைகள் ஆகிய எவற்றையும் நம் மொழியிலாக்கும் எவ்விலக்கியமும்

பாராட்டத்தக்கனவும் படிக்கத்தக்கனவுமாகும். இவ்வகையில் சீவகன், உதயணன், நளன், பாண்டவர், இராமன் ஆகிய எவரது கதைபற்றிய நூல்களேயும் தமிழிலாக்கியவர்களது பணி போற்றத்தக்கதும் தனிச்சிறப்புடையதுமாகும். நபி, கிறித்து ஆகியோரது கதைகளாகிய சீருப் புராணமும் தேம்பாவணி முதலியவும் பாராட்டத் தக்கனவேயாகும். அடுத்த நூற்ருண்டுகளில் வளர்ந்த புதினம், அகராதி, எளிய இலக்கணம் முதலிய ஒவ்வொரு வகைக்கும் ஒரு சிறந்த நூலியற்றித்தமிழுக்கு ஊக்கமளித்தவர் வீரமாமுனிவர். தேம்பாவணியைப் பல்கலேக் கழகங்கள் அடக்கவிலேக்குப் பதிப்பித்துப்பரப்பவேண்டும்.

## தாயுமானவர்

*1706—44.* 18-ஆம் நூற்ருண்டின் சைவ நாயனுர் இவரென்னலாம். நாயன்மாரது வாழ்க்கை, பெருமை ஆகியவற்றுடன் இவரது வாழ்க்கையை ஒப்பிடலாம். இருவரும் சமயச்சமரசம் வகுத்தவர்கள். தாயுமானவரது விருத்தங்களும் கண்ணிகளும் உண்மையான ஒரு கடவுளுணர்ச்சிக்கும் அறிவுக்கும் அமைதிக்கும் உரியவை. தமிழிலக்கியத்தின் கடவுட்பாடற்பகுதியிலும் சிறந்தஇடம் பெற்றவாகும் இவரது பாடல்கள். சமயச்சான்ருேர் பலராலும் படித்தின்புறப்பட்டனவும் பாராட்டப்பட்டனவுமாகும். திருச்சிநாயக்கர் ஆட்சியில் அமைச்சராயிருந்து துறவுபூண்டவர், வாழ்க்கையில்அடிப்பட்டுஅனுபவங்கண்டபின் உலகை வெறுத்துக் கடவுளேயும் கவிதையையும் பற்றியவர்; இரண்டையும் உலகிற்கு நன்கு விளக்கமுறச் செய்தார் எனவே கூறவேண்டும். இவ்வகைகளில் இவரை அருணகிரியுடன் ஒப்பிடலாம். ‘அங்கிங்கெனுத

படி' என்ற விருத்தமும் 'அன்பர் பணிசெய்ய வென்னை' என்ற கண்ணியும் அனைவர் உள்ளத்தும் அவரை உள்ளவராக ஆக்கிவிட்டன. இத்தகைய நூல்களை முழு இலக்கியங்களாகப் படிக்குமாறு தமிழ் மாணவர்க்குப் பாடம் வைக்கவேண்டும்; இராமலிங்க அடிகள் பாடல்களும் அவ்வாறே கற்கத்தக்கன. அவரால் பெரிதும் பாராட்டப் பெற்றவர் தாயுமானவர். இவரிருவரும் சித்த மரபினரென்னலாம். 300 ஆண்டுகளாக இன்றுவரைத் தாயுமானவரது பாடல்கள் தெருவெல்லாம் வீடெல்லாம் தமிழ் முழக்கம் செய்துகொண்டிருந்தன. புதுமைக் கவிஞரது பாடல்கள் இவர்களது பாடல்களை மறக்கடிக்கப் பார்க்கின்றன. ஆனல் இவர்களது பாடல்கள் உயர்ந்த உணர்ச்சியுடையவை. பட்டினத்தார், அருணகிரி முதலிய அடியார்களை இவர் மனமாரப் புகழ்ந்து போற்றுதல் செய்கிருர். இந்நெறிபிறழாத இலக்கியங்களும், விளங்குதற்கும் நிலைத்தற்குமுரியனவாகும். பொருமையால் பிற புலவரைத் தாக்கும்போது இருவரதிலக்கியங்களும் மறைந்துபோகின்றன. பாடப்பாட உள்ளத்தையுருக்குவன தாயுமானவரது பாடல்கள்.

## திரிகூடராசப்பர்

1718 திருநெல்வெலித் தமிழர்க்கெல்லாம் பெருமைக் கிடந்தேடித்தந்தவர் திருகூடராசப்பர். குற்றலக் குறவஞ்சியென்ற நாடகப்பிரபந்தமியற்றி, பிற்காலத்தில் குற்றலமடைந்த பெருமைக்கெல்லாம் காரணமாகி அப் பெருமையைத் தாமும் தேடிக்கொண்டார். குற்றலத் தினிமையும் குளிர்ச்சியும் அவர்தம் நூல்களில் இருப்பதாக அறிஞர் போற்றுவர். 'வானரங்கள் கனிகொடுத்து' என்றதும் படிக்குமனைவரும் துள்ளியாடுவர். அவரது

குற்ருலத்தல புராணமும் பெரும் பாராட்டுதலுக்குரித்தான்து. குறவஞ்சி இலக்கியத்துள், இக்குறவஞ்சி தலேயாய இன்பமுடையது. சிலேடை நயமும், நேர் வருணனேயும் உடையது. இவரது குறவஞ்சியையும் தமிழ்ப்பணியையும் பாராட்டி நாயக்க மன்னர்கள் இவர்க்கு நிலமளித்துள்ளனர். அது இன்னும் குறவஞ்சிமேடென வழங்கி வருகின்றது. இது மகம்மதியர், கிறித்தவர் முதலிய பலவினத்தார் தமிழகத்திற் கலந்த காலம். இத்தகைய கலப்புக்காலங்களில் இயல் இசையைவிட நாடகங்கள் வளர்கின்றன. சிலப்பதிகார காலமும் இவ்வாறே. அயலார்க்கும் புதுவோர்க்கும் நாடகமும் எளியநடையும் நன்கு புரிகின்றன. இயல் இசையும் நாடகத்துட் கலந்துண்மையின் அழிந்துவிடவில்லே. நொண்டி நாடகங்களும் இக்காலத்துப்பெருகின. பலரது கலப்பால் மக்களது மொழியறிவின் தரமும் குறைந்துவிடுகின்றது. எனவே அவர்க்கேற்றது நாடகவிலக்கியங்களே யாகும். பிற்கால நாடக விலக்கியங்களாய விலாசம், மாலே, நாடகம் முதலியவற்றிற்கெல்லாம் வழி காட்டியவர் கவிராயரேயாவர்.

## அருணுசலக்கவி

சோழநாட்டவர், சீகாழிப்பதியினர், வேளாளர். இராமநாடகத்தால் புகழ் பெற்றவரும் புகழ் பரப்பியவருமாவர். இது நாடகப்பாடல்கள் பெருகிய காலமென்னலாம். இசைவாணரெல்லாம் இவரது பாடல் பலவற்றிற்குப் பண்ணமைத்துப் பாடிப் பரவினர். தமிழிசைப் பாடல்களில் இவர் பாடல்கள் சிறந்த இடமுடையவை. சீகாழிப் புராணமும் கோவையும் இயற்றினுர். 'இந்தா வீபீடணுவென்ற' பாடல் வெளிப்பட்டதும் இவர் நினேவு

அனைவர்க்கும் உண்டாகும். தமிழிசையில் புதுப்புது பாடல்களெல்லாம்புறப்பட்டு, பழகிச்சிறந்த இராமநாடகப் பாடல்களும் கோபாலகிருட்டின பாரதிப் பாடல்களும் புறக்கணிக்கப்பட்டு வருகின்றன. பழகிய பாடல்களைக் காத்தலென்பது ஒரு இலக்கிய வளர்ச்சியாகும். திரிகூட ராசப்பர்க்கடுத்து வைணவசமயத்தை நாடகத்தின் மூலம் பரப்பியவர் அருணசலக்கவியாவார். இவர்கள் 'ராயர்' என்ற பட்டத்தைக் கவியுடன் (கவி-ராயர்) சேர்த்துக் கொண்டது இது விசயநகர ராயர்கள் காலமென்பதனைப் புலப்படுத்தும்.

## சிவஞான முனிவர்

18-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இலக்கிய வளர்ச்சி இவர்க்கே உரிமைஎன்னலாம். என்னென்ன வகையானஇலக்கியமுண்டோ அனைத்திற்கும்ஒளிதந்தவர் இவர். உரைநடைக்கும் இலக்கியந்தந்தார். பன்மொழிப் புலமையும் பல்கலைத் திறமையும் போற்றலுமுடையவர்; தன்னம்பிக்கை மிக்கவர்; திருவாவடுதுறை மடத்துத் துணை பெற்றவர். இளம்பூரணர், நச்சினார்க்கினியர் போன்று தமிழுக்கு உழைப்பும் ஆக்கமுந் தந்தவர். ஒரு தனி மனித வாழ்க்கையில் இத்தனை சிறந்த இலக்கியங்களைப் படைத்தலென்பது அருஞ்செயலேயாகும். இலக்கணம், புராணம் பிரபந்தங்கள் சமய நூல்கள், உரைகள், தருக்கங்கள் அனைத்திலும் வல்லவர் இவ்வாசிரியர். இவரது யோகசக்தி முழுவதையும் இலக்கியச் செயலாக மாற்றினுர். சிலந்த பல மாணவர்களைப் படைத்தளித்த பெருமைபெற்றுர். இலக்கண இலக்கியங்களைத் தாம் முதலில் தெளிவாகவும் முழுமையாகவும் கற்றுப் பின் தாம் நூலாசிரியராயவர்.

சிவஞான போதத்திற்கு இவரெழுதிய பேருரை (மாபாயடிம்) பரிமேலழகர் சேனுவரையர் உரைபோன்ற பெருமையும் நிலைமையுமுடையதாய்விட்டது. சங்கரநமச்சி வாயரது நன்னூல் உரையைச் சிறிது திருத்தியும், மாற்றி யும் இவராக்கிய விருத்தியுரையும், தொல்காப்பியப் பாயிரவிருத்தியும் இவரது இலக்கணத் திறமையையுணர்த் துவன. இவ்விருத்தியுரை நன்னூல் அறிவிற்கும் இலக் கண அறிவிற்கும் பெருந்துணையானதாகும். நயமாகப் பாடும் இவரது திறமை காஞ்சி புராணத்தும் (அமு தாம்பிகை) பிள்ளைத்தமிழ்களிலும் தெரியவரும். திருக் குறளுக்கு ஒரு விரிவிலக்கியமாகவும், கதையாகவும் சோமேசர் முதுமொழி வெண்பாப் பாடினுர். வடமொழி வன்மையுடன் சமயவாதம் புரியவும் வல்லவர். 1785-ல் மறைந்தனர். எதிராகத்தோன்றிய இலக்கணங்களையெல் லாம் (பிரயோகவிவேகம், இலக்கண விளக்கம்) செருக் கடக்கித் தொல்காப்பியப் பெருமையை நிலை நாட்டியவர் சுவாமிகளாவார். இவரது முதுமொழி வெண்பா திருக் குறள் பெருமையை வளர்த்தது. சிறந்த நூல்களைப் பாராட்டியமையின் இவர் சிறந்த புலவரானுர். இந்நூற் ருண்டின் தமிழ் ஞானவொளியாகத் திகழ்ந்தவர் இவ ரெனலாம். கிறித்தவ முதலிய பிறசமயங்கள் பரவத் தொடங்கியமையின் இக்காலத்தில் சமயத்தையும் தமிழை யும் காக்கத் தத்துவ அறிவும் தருக்க அறிவும் வேண்டி யிருந்தது. வீரமாமுனிவர் இந்நூற்ருண்டவர். மாபாடி யத்தால் சைவத்தைக் காத்து நன்னூல் விருத்தியால் தொன்னூலைத்தடுத்தார். பிரபந்தங்களை இயற்றுதலிலும் மாணவர்களை வளர்த்தலிலும் இவர் 18-ஆம் நூற்ருண் டின் மீனுட்சிசுந்தரம் பிள்ளை யெனலாம்.

## கச்சியப்ப முனிவர்

சிவஞான முனிவரின் மாணவருட் சிறந்தவர்; ஆசிரியரின் திறமையுள் பகுதிபெற்றவர். இவரது தணிகைப்புராணம் அருமையும் திறமையும் வாய்ந்ததாகப் பாராட்டப்படுவது. பல புராணங்களும் பிரபந்தங்களும் இவரால் இயன்றன. விநாயக புராணத்தாசிரியரும் இவராவர். கச்சியானந்த ருத்ரேசர் வண்டுவிடுதூது என்ற பிரபந்தம் இனிமையும் புகழுமுடையதாகும். தூதிலக்கியத்துள் சிறப்பியல்புடையது. கந்தப்பையர் முதலிய இவரது மாணவர் பலர் தணிகைபற்றிய பிரபந்தங்கள் பல பாடினர். தூதுப்பிரபந்தம் இக்காலத் திற்ருேன்றியதெனலாம். விநாயக வணக்கம் தமிழகத் திற்ருெடங்கி ஆயிரமாண்டுகட்குப் பின் அவர்க்கோர் புராணமியன்றது. பதிஞேராம் திருமுறையாசிரியர்கள் விநாயகர்க்குப் பிரபந்தம் பாடினர்; கந்தபுராணந் தோன்றவே விநாயகபுராணத்திற்கும் தூண்டுதலுண்டா யிற்று.

## நல்லாப்பிள்ளை

கி. பி. 1732. 14000 பாடல்களில் பாரதம் பாடினுர். வில்லிபாரதம் சுருக்கமாகவும் தெளிவாகவுமிருந்தமையின் அதற்கெதிரே இது மிற்கவில்லைபோலும். கம்பரைப்போலப் பதினுயிரத்திற்குமேல் பாடல் பாடியும் இவரது காவியம் ஏனே விளக்கமுறவில்லை. கம்ப காவியம் முதற்காவியம் என்பதொன்று. அதன் இனிமையையும் கற்பனையையும் எவராலும் எட்டமுடிவதில்லை. உமறுப்புலவரும் முதல்நூலாக 12000 பாடலில்புராணம் பாடினுர். தமிழர் சமயத்துடன்சேர்த்து, நூலைஎதிர்த்தனர்.

# பத்தொன்பதாம் நூற்ருண்டு.

இதனை ஆறுமுகநாவலர், இராமலிங்கர், மீனுட்சி சுந்தரம்பிள்ளை, போப் ஆகியோரது நூற்ருண்டென்னலாம். இதுவும் இருபதாம் நூற்ருண்டும் ஆங்கிலச் செல்வாக்கு மிகுந்தவை; உரைநடையும் புதினங்களும் இக்காலத்தில் பெருகின. மொழி பெயர்ப்புக்களும் பின் பற்றிய நூல்களும் இந்நூற்ருண்டில் எழுதத் தொடங்கப் பெற்றன. அயல் நாட்டாதிக்கத்தை யெதிர்த்துத் தமிழ்ச் சமயங்களையும் இலக்கியங்களையுமே வளர்க்கும் தேசியமும் அயலாயவற்றை எதிர்க்கும் உணர்ச்சியும் இலக்கியங்களில் மிகுந்தன. ஆங்கிலம் பயின்ற தமிழறிஞர் பலர் தமிழுக்கு நல்லதொண்டும் உணர்ச்சியும் தந்தனர். தமிழிசைப் பாடல்களுக்கே ஆக்கமாய கோபாலகிருஷ்ண பாரதி, வேதநாயகம் பிள்ளை ஆகியோரது கீர்த்தனைகள் இக் காலத்திலேயே யாக்கப்பெற்றன. வேதநாயகம் பிள்ளை கீர்த்தனைகள் பக்திச்சுவைமிக்கன. பாடுந்திறன் இந்நூற்ருண்டுவரைச் செழித்தேயிருந்தது. திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் அத்திறம் மிக்க வளம் பெற்றது. அடுத்த நூற்ருண்டில் அது குறைந்து தேசியக்கவி பாரதியாரிடம் ஓரளவு புலப்பட்டது.

அச்சுத்தொழில் வளர்ச்சியால் இந்நூற்ருண்டில் ஓலைச்சுவடியிலுள்ள நூல்களை அச்சில் பதிக்கும் முயற்சி தொடங்கி வளர்ந்தது. பாண்டித்துரை முதலிய சேதுபதி யரசர்கள் இன்னும் தமிழைப் புரக்கத்தளராதுதவினர்.

அட்டாவதான முதலிய கல்வித்திறன்கள் இக்காலத்தும் வளர்ந்தன. அட்டாவதானம சரவணப் பெருமாள் கவிராயர் என்பவர் சிவஞான முனிவர் பரம்பரையினர்; வசையிலும் நகைச்சுவையிலும் திறம்படைத்தவர். இத்தகைய பாடல் வகைகளை ஆங்கிலர் பெரிதும் பாராட்டுவர். பணவிடுதூது இவரால் பாடப்பட்டது. இராமாநுசக் கவிராயர் சிறந்த வைணவர், இலக்கண ஆசிரியர்; சிறந்த உரையாசிரியர், நன்னூல் திருக்குறள் முதலியவற்றிற்குக் காண்டிகையுரை யெழுதினர், இராமசந்திர கவிராயர் சென்னையில் வதிந்து எல்லிஸ் துரையால் பாராட்டப் பெற்றவர். சித்திரகவி பாடுவதில் திறம்பெற்றவர். இராம பாரதி ஆத்திச்சூடி வெண்பா வியற்றினர். இது திருக்குறள்பற்றிய குமரேச வெண்பா போன்றது. விவேகசிந்தாமணியென்னும் நீதிநூல் இந் நூற்ருண்டிற்ருன் நிசகுணயோகியா லியன்றது. திருச்சிற்றம்பல தேசிகர் கம்பராமாயண வசனம் இலக்கண உரைநடை முதலியவற்றையாக்கினர். பஞ்சதந்திரத்தைத் தமிழ் உரையில் பெயர்த்த தாண்டவராய முதலியார் காலம். திவாகர முதலிய விலக்கணங்களை அச்சியற்றினர். திருத்தணிகை விசாகப் பெருமாளையரும் சரவணப்பெருமாளையரும் சிறந்த உரையாசிரியர்களும் பதிப்பாசிரியர்களுமாவர். முன்னவர் சென்னை மாகாண அரசினர் கல்லூரித் தமிழாசிரியராய்த் திகழ்ந்தார். நன்னூற் காண்டிகையுரை யியற்றினர்; டாக்டர் வின்ஸ்லோ தமிழகராதிக்குத் துணைபுரிந்தார். பின்னவர் ஆத்திச்சூடி முதலிய நூல்களுக்கு உரை கண்டார். இவரால் உரை நடை நூல்கள் மிகவாக எழுதப்பட்டன. பரிமேலழகர் உரை, திருவாசக முதலியவற்றை அச்சிட்டார்.

முருகதாச அடிகள் என்பவர் சந்தமியற்றும் திற மிக்குப்பல பிரபந்தங்களை யியற்றினர். இவரியற்றிய 'புலவர் புராணம்' தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு முதற் படியாகும்.

திருநெல்வேலி கிருஷ்ணப் பிள்ளை கிறித்து சமயச் சார்பான சிறந்த காவியங்கள் பல இயற்றினர். அவை படிக்கத்தக்கனவும் பாராட்டத்தக்கனவுமாகும். இரட்ச ணியயாத்ரிகம் அவற்றுட் சிறந்தது. இது தேம்பாவணி வழிவந்தது. வடமொழி பெயர்ப்புக்கள் பல (பில்கணீய முதலிய) இக்காலத்து ஆக்கப்பட்டன. கீர்த்தனை நாடகங் கள் பல பெருகின. கதிரைவேற்பிள்ளை இப்போதுதான் தமது அகராதியைத் தொகுத்தார். இது வரலாற்றுச் சிறப்புடையது. வீராசாமிச் செட்டியார் விநோதரசமஞ்சரி எழுதினர்; புலவர்களைப்பற்றி யெழுதிய அவரது உரை நடைகள் அத்துறையில் நல்ல வழிகாட்டிகளாகப் பாராட்டப்படுவன. மஞ்சரி இலக்கிய வரலாற்றிற்குக் கலங்கரை விளக்காகும்.

ஆறுமுக நாவலர் : **1823—79** தமிழுக்கு இந் நூற்றுண்டில் தோன்றிப் பணிசெய்தவருள் தலைமையான வர் நாவலராவர். யாழ்ப்பாணத்தில் தோன்றித் தமிழ கத்தில் சிதம்பரம் வந்து தங்கிய சைவர் இவர். சைவத்தின் வழியே தமிழ்ப்பணி செய்து அழியாப் புகழையுற்றார். வடமொழிப் புலமையும் ஆங்கிலப்புலமையு மிக்கு பைபிளைத் தமிழில் மொழிபெயர்த்தவர். உரை நடைக்கும், பதிப்புக்கும் இவர் செய்த தொண்டு என்று முள்ளதாகும். வசனநடை கைவந்த வள்ளலாரெனச் சூரியநாராயண சாத்திரியால் இவர் பாராட்டப்பெற்றார்.

பெரியபுராணம், கந்தபுராணம். திருவிளையாடற் புராணம் ஆகியவற்றிற்கு வசனங்களெழுதினர். இவரெழுதிய பாலபாடங்கள் நீண்டகாலம் தமிழக மாணவருலகிற்கு வழிகாட்டியாயிருந்தன. திருக்குறள், பரிமேலழகருரை, சேனுவரையம், பாரதம், நன்னூற் காண்டிகை திருக்கோவையுரை முதலிய நூல்களைத் திருத்தமாகப் பிழையின்றி அச்சிட்டுதவினர். பதிப்பாசிரியருள் திரு. உ. வே. சாமிநாதையருக்கு நல்ல வழிகாட்டி நாவலரென்னலாம். சைவ சமயத்திற்கும் பல நூல்களியற்றினர். சைவத்தில் இவர்க்கிருந்த அழுத்தமான பற்றினல் இராமலிங்க சுவாமிகளின் பொதுமை நெறியையும் எதிர்த்து அவரதருட்பாவிற்கு மருட்பா வியற்றினரென்பர். கிறித்துவர்களையும் எதிர்த்துக் கண்டனமியற்றினர்.

இராமலிங்க சுவாமிகள் **1823—74.** வடலூரில் வாழ்ந்து சமரச சன்மார்க்க நெறிகண்டவர். 19-ஆம் நூற்ருண்டில் சிதம்பரத்தைச் சுற்றிச் சமய நெறிகளை வளர்த்தவர்கள் இராமலிங்கரும் நாவலரும். இதற்காக வடலூரில் அருட்சோதி மன்றம் ஒன்றியற்றினர். 'அருட்பா' என்ற பாடல்கள் அடிகளால் இயற்றப்பெற்றன. இவரைச் சித்தர் வழியினர் என்னலாம். அருட்பா மூவரது திருமுறைகளில் ஒன்றெனமதிக்கத்தக்கதாகும். எளிமையும், இனிமையும் உருக்கமும் வாய்ந்த பாடல்கள். மாணிக்கவாசகரது ஞானம் இவரது பாடல்களில் புலப்படும். இவரது மனுமுறைகண்டவாசகம், ஜீவகாருண்யவொழுக்கமுதலியன நல்லஉரைநடைகள். ஆறுமுகநாவலரும் அவரது தொண்டர்களும் அடிகளின் சமய நெறியை மிகவும் எதிர்த்தனர். ஆனல் தமிழகத்தில் எதிர்காலத்திற்குரிய நன்னெறியாக அடிகளாரது நெறியும் பாடல்

களும் அமைந்துவிட்டன. முருகனிடத்திற் பேரன்புடைய வர் தமிழர்வள்ளலார். திருவாவடுதுறையாதீனத் தலைவரா யிருந்த சுப்பிரமணிய தேசிகரென்பவர் சிவஞானசித்தியா ருக்குப் பதவுரை எழுதினர். நல்ல தமிழர். நாவலருக்கு அப்பட்டத்தையளித்தவர் அவரே. தமிழ்ப்புலவர் பலரை யாதரித்ததன் வழியே தமிழைச் செழிக்கச் செய்தவர்.

திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளை (31-1-1876 மறைவு) 19-ஆம் நூற்றுண்டின் பாடல்கள் பெரும் பான்மையும் இவரால் இயற்றப்பெற்றன. பாடல் இயற்றுவதில் பெரியபுராண ஆசிரியரையும் மிஞ்சியவர்; இம்மென்னு முன்னே எழுநூறு மெண்ணூறும் பாடவியலு மென்பதை மெய்ப்பித்தவர். மேற்கூறிய சுப்பிரமணிய தேசிகரால் ஆதரிக்கப்பெற்றவர். தியாகராசச்செட்டியார், உ. வே. சாமிநாதையர் போன்ற மாணவப் பரம்பரை யைத் தோற்றுவித்தவர். இருபதாம் நூற்றுண்டின் தமிழ் வளர்ச்சிக்கு வித்திட்டவரென்னலாம். ஒருவரது வாழ்வில் இத்தனையாயிரப் பாடல்கள் பாடியோர் புலவருள் மிகச் சிலரே. இவரால் பாடப்பெற்ற புராணங்களும் பிரபந்தங் களும் நூறென்னுமளவில் இருக்கக்கூடும். திருநாகை, திருமுல்லைவாயில் முதலிய பதிகளுக்கு இவரியற்றிய புராணங்கள் சிறப்புடையன; சேக்கிழார் பிள்ளைத்தமிழ் தமிழுலகறிந்தது. அதனுள் 'பத்திச்சுவை நனி சொட்டச் சொட்ட' என்ற பாடல் அனைவருள்ளத்திற்கும் விருந்தாகி யது. இவர் தமது பாடல்களைக் கொடிமுந்திரிக்கனிக்கு உவமை கூறியுள்ளார். திருவாரூர்த் தியாகராசலீலை, திருஞான சம்பந்தர் பதிற்றுப்பத்தந்தாதி, தில்லையமக வந்தாதி முதலியன இவரது பிரபந்தங்களுட் சிறந்தன. இவர்காலத்துடன் தமிழில் கவி போய்விட்டதென்னலாம்.

அடுத்து இருபதாம் நூற்றண்டில் பாரதி காலத்திற்றன் ஓரளவு தலைதூக்குகின்றது.

வேதநாயகம் பிள்ளை: இவர் கிறித்தவராயினும் சமரச நோக்குடையவர். அந்நோக்கிற்குத் தூண்டுதலளித்தவர் இராமலிங்கராகவேண்டும். சர்வசமய சமரசக் கீர்த்தனையென்ற இவரது பாடல்கள் நல்ல தமிழிசைப் பாடல்களாகப் பாடப்படுகின்றன. மற்றும் நீதிநூல், பெண்மதிமலை முதலிய பாடல் இலக்கியங்களையும் இயற்றியுள்ளார். மீனுட்சிசுந்தரம்பிள்ளையின் மாணவர். பிரதாப முதலியார் சரிதமெழுதி நாவலுக்கும் உரை நடைக்கும் நல்லகாலத்தைத் தொடங்கிவைத்தவர். இருபதாம் நூற்றுண்டின் உரை நடைக்கு இவர் ஓர் வழிகாட்டியெனலாம்.

அரங்கநாத முதலியார் : *(1844—1893)* இராசதானிக் கல்லூரியில் கணிதப் பேராசிரியராயிருந்த தமிழறிஞர். கச்சிக்கலம்பகம் இயற்றினுர். திருக்குறளுக்கோர் ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். வ. வே. சு. ஐயரது குறள் மொழிபெயர்ப்பும் இதனுடன் எண்ணத்தக்கதாகும். இவரைப்பற்றி உ. வே. சா. தமதுரைநடை நூல்களில் எழுதியுள்ளார்.

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை: *(1855—1897)* திருவனந்தபுரம் கல்லூரியில் தத்துவப் பேராசிரியர். நாடகத்திற்கோர் நல்லிலக்கியமாய மனோன்மணீயம் இயற்றியவர். தமிழின் வரலாற்றையும் தனித்தன்மையையும் விளக்கிப் பல கட்டுரைகளை ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதினுர். இக்கட்டுரைகள் தமிழ் தலைநிமிர்ந்துலவுதற்குதவின. மறைமலையடிகள் போன்றூர்க்கு உணர்ச்சியூட்டியன இக்கட்டுரைகள் என்னலாம். தமிழில்

ஆராய்ச்சியுணர்ச்சியைத் தூண்டிச் சம்பந்தர்கால முதலியவற்றைத் தெளிவுபடுத்தியவர்.

தாமோதரம் பிள்ளை: *(1832—1901)* இவருடன் வரிசைப்பட்ட மூவரும் ஆங்கிலத்தமிழறிஞர்கள். இவர் யாழ்ப்பாணத்தவர். நல்ல பதிப்பாசிரியர். நாவலருடன் வைத்தெண்ணத்தக்க பதிப்புப்பணி செய்தவர். இவர்களெல்லாம் செய்த தொண்டினுற்றான் இன்று தமிழ் விளக்கமுற்றிருக்கிறது. இவர்களெல்லாம் தமிழின் நம்பியாண்டார்கள். உ. வே. சா. வுக்கு உணர்ச்சி தந்தவர்கள் இவரனைய தமிழர்களே. வேதநாயகம் பிள்ளையைப்போல நீதிமன்றத் தலைவராக இருந்தவர். இறையனுரகப்பொருள், வீரசோழியம், தொல்காப்பியப் பொருளதிகாரம், இலக்கண விளக்கம் முதலியவற்றை ஆராய்ச்சியுடன் பதித்து வெளியிட்டார். இவரது பதிப்புத் தொண்டு புலவர் பலராலும் பாராட்டப்பட்டதாகும்.

டாக்டர் கால்டுவெல்: *(1814—1891)* தமிழுக்குத் தனித்தொண்டாற்றிய ஆங்கிலத் தமிழ்ப் புலவர் கால்டுவெல். இவர் திராவிட மொழிகளை யெல்லாம் கற்று 'ஒப்பிலக்கணம்' எழுதியது இன்றும் தமிழறிஞர்க்கு ஓர் வழிகாட்டியாகவும் உணர்ச்சியூற்றாகவும் உள்ளது. நன்கு விரிவடையவேண்டிய ஒரு துறைக்கு அடிப்படையிட்டவர் கால்டுவெல் ஆவார்.

ஜி. யூ. போப்: *(1820—1908)* அவ்வரிசையில் மற்றும் சிறந்தவர் போப். நிலையான நல்ல மொழிபெயர்ப்புக்கள் பல இயற்றியுள்ளார். இவரது திருக்குறள், நாலடியார், திருவாசகம் முதலியவற்றின் மொழி

பெயர்ப்பு மிகவும் பாராட்டுக்குரியனவாகும். தமிழிடத்தும் தமிழரிடத்தும் அளப்பிலா ஆர்வமுடையவர். வள்ளுவரை 'மன்பதைப்பெரும் பாவலர்' எனப் பாராட்டினுர். தன்னைப்பற்றித் தமது கல்லறையில் 'தமிழ் மாணவன்' எனக்குறிக்குமாறு கூறிச்சென்றவர் என்பதனுலேயே இவரது தமிழ்ப்பற்று நன்கு புலப்படும். இவர் தொடங்கிய மொழி பெயர்ப்புப்பணி இன்னும் விளக்கமடையாமலே இருக்கின்றது. தொடர்ந்து செய்பவரனைவரும் அத்திருக்குறள், திருவாசகம் இரண்டையுமே திரும்பத்திரும்ப மொழி பெயர்க்கின்றனரன்றி வேறு நூல்களில் நாட்டஞ்செலுத்துவதைக் காணேம். இதனைக் காணும் பிறமொழியினரும் மேனுட்டாரும் தமிழில் இவையிரண்டுந் தவிர வேறு சிறந்த நூல்கள் இல்லைபோலுமென்றே கருதுவர். கி. பி. 1895-ல் டாக்டர் ஐயரவர் கட்கோர் கடிதம் எழுதியுள்ளார்.

# இருபதாம் நூற்ருண்டு.

உரிமையுணர்ச்சி தலைதூக்கி வெற்றிபெற்றது இந் நூற்ருண்டில். இலக்கியத்திலும் அவ்வுணர்ச்சி எழத் தொடங்கிவிட்டது. பாரதி, திரு. வி. க. முதலியோர் இலக்கியங்களில் உரிமைவேட்கையும், ஆடலும் நிறைய காணப்படுகின்றன். இவ்வுணர்ச்சியால் சிறந்த உரை நடை நூல்களும் ஆராய்ச்சிகளும் தோன்றின. தமிழ் நடையிலும் இலக்கிய இலக்கணங்களிலும் சொந்தமாய வற்றையே போற்றும் ஆர்வம் மிகுந்தது. மறைமலையடி கள், நாட்டார் அனைய புலவர்கள் இவ்வுரிமையைப் பற்றிப் பெரிதும் பேசினர். அஞ்சாமல் உரிமையுடன் எண்ணவும் ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிடவுமாய துணிவு பிறந்தது. தமிழகத்திற்கே பெருந்துணையாய நூல் கள் பல டாக்டர். உ. வே. சா. அவர்களால் ஏடுகளி லிருந்து அச்சியற்றப்பட்டன. இம்முயற்சி சென்ற நூற் ருண்டிலேயே தொடங்கப்பெற்று வளர்ந்திருந்தாலும் இந் நூற்ருண்டில் இவராற்ருன் முழுமையும் பயனுமுற்ற தெனலாம்.

இந் நூற்ருண்டினைப் பத்திரிகைக் காலம், நாவல் காலம் என்னலாம். திரு நாராயணய்யங்கார் போன்றவர் கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து செந்தமிழ்போன்ற பத்திரிகைகளைத் தொடங்கி விளக்கமுற நடத்தினர். தமிழாராய்ச்சிக்கும் அறிவிற்கும் 20—30 ஆண்டுகள் இப்பத்திரிகை கருத்தரங்காகவும் தூண்டுகோலாகவும் இருந்துள்ளது; அடுத்தெண்ணத் தக்கன தமிழ்ப்பொழி

லும் செந்தமிழ்ச் செல்வியுமாகும். கலைமகள், ஞான சாகரம், சித்தாந்தம், ஆனந்தபோதினி முதலியவும் இப்போது சுதேசமித்திரன், தினமணி 'தமிழ்கல்சர் முதலிய இதழ்களின் வாரமலர்களும் தமிழுக்கு நற்ருெண்டு புரிகின்றன. திரு. பவானந்தம் பிள்ளையவர்களும், திரு. எம். பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களும் தமிழ் நூல்களை நல்ல முறையில் ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் வெளியிட்டு அழியாப்பெயரைக் கொண்டுவிட்டவர்கள். மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையினரும் திரு. உமாமகேசுவரம் பிள்ளையவர்களும் தருமை, பனசை, மயிலம் முதலியவற்றின் சைவ மடங்களும் தமிழ்க் கல்லூரிகள் ஏற்படுத்திப் புலவர்களை யுண்டாக்குவது இந்நூற்ருண்டின் பெருந்தொண்டாகும். இந்நிலையங்களிலிருந்து நல்ல தமிழ் நூல்களும் பதிக்கப்பட்டு வருகின்றன.

பண்டைத் தமிழ்ப்புலவர் வரிசையில் அரசஞ்சண்முகனூர் போன்றவர்கள் பாடுவதிலும் ஆராய்ச்சியிலும் பெருமிதமுற்று விளங்கினர். இவரது தொல்காப்பிய, திருக்குறள் ஆராய்ச்சிகள் பாராட்டப்படுகின்றன. சரவணப் பிள்ளை 'மோகனுங்கி' என்ற நாவலையும், இராசமையர் கமலாம்பாள் சரிதத்தையும் எழுதினர்.

யாழ்ப்பாணப் புலவருள் கனகசுந்தரம் பிள்ளையும், சுன்னுகம் குமாரசுவாமிப் பிள்ளையும் குறிக்கத்தக்கவர்கள். முதல்வர் நல்ல பதிப்பாசிரியர். தமிழ் நாவலர் சரிதை இவராலேயே தமிழுலகிற்குக் கிடைத்தது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் அகராதி யாக்கத்தில் சிலகாலம் தலைமைபூண்டிருந்தார். பின்னவர் வடநூலும் நிலைகண்டவர். இவரது 'தமிழ்ப்புலவர் சரித்திரம்' மிக்க பயனுடையது. நல்ல 'இலக்கிய வரலாறு' இதுவென்னலாம்.

இந்நூற்றாண்டில் ஏற்பட்ட உரைகளுள் நாராயண சாமி ஐயரது நற்றிணை யுரையும் நவநீதகிருட்டின பாரதி யின் திருவாசகவுரையும் குறிப்பிடத்தக்கன. நாட்டார் முதலியவர்கள் அகநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, திருவிளையாடற் புராணம் முதலியவற்றிற் கெழுதிய விரிவுரைகள் வெளிவந்துள்ளன. யாவற்றிலும் முடியாய் விளங்குவது சிவக்கவிமணி கோவை சுப்பிரமணிய முதலியாரது பெரியபுராணப் பேருரையாகும். இவரது முயற்சியினை நச்சினார்க்கினியர் போன்றோரது உரை முயற்சிக்கே ஒப்பிடக்கூடும். பாராட்டத்தக்க பெருந்தமிழ்ப்பணி இதுவாகும்.

நா. கதிரைவேற்பிள்ளை தமது 'தமிழ்ப்பேரகராதி'யால் பெயர் பொறித்துக் கொண்டவராவார். பாம்பன் குமர குருதாச அடிகள் 'குமாரசுவாமியம்' என்ற முருகன் வரலாற்றுப் பெருங்காப்பியத்தைப் பாடியவர்.

திருப்பாதிரிப்புலியூர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், திரு. வி. க. போன்றோர் இந் நூற்றாண்டின் ஈடும் எடுப்புமற்ற தமிழ்ச் சொற்பொழி வாளர்கள். இனிய மொழிகளால் உயர்ந்த பொருள்களை மாசுபடாமல் மணிக்கணக்கில் பேசி இன்பத் தேன் சொரியச்செய்துவந்த சொற்பொழிவாளர்கள் இவர்கள்.

திரு. நமச்சிவாய முதலியாரவர்களும், செல்வகேசவ ராய முதலியாரவர்களும் மாகாணக்கல்லூரி முதலியவிடங் களில் நல்ல தமிப்பேராசிரியர்களாக இருந்தவர்கள். புலவர்களைப் புரந்தவர்கள். முன்னவர் மாணவர்க்குத் தமிழ்நூல்கள் எழுதியும், நற்றமிழ் நூல்களைப் பதிப்பித்தும்

பேர் படைத்தவர்; பின்னவர் நல்ல கட்டுரை நூல்களை எழுதியவர். க. ப. சந்தோஷம் என்பாரது நகைச்சுவை நற்றமிழ்க்கட்டுரைகள் நினைக்கத்தக்கவாகும்.

திரு. பூர்ணலிங்கம் பிள்ளையவர்கள் தமிழுணர்ச்சி மிக்கவர். ஆங்கிலப் பேராசிரியர். ஆங்கிலத்தில் இவர் இயற்றிய தமிழ் இலக்கிய வரலாறு அவ்வகை முயற்சியுள் முதலாவதாகும். அந்நூல் இன்றும் பேருதவியாகவும் பாராட்டத்தக்கதாயுமுள்ளது. இவரது தமிழ் இந்தியா என்ற ஆங்கில நூலும் தமிழின் தொன்மையையும் தனித்தன்மையையும் விளக்குவதாகும். சம்பந்த முதலியாரவர்கள் செகசிற்பியரை மனத்துட்கொண்டு தமிழில் ஏராளமான நாடகங்களை (உரைநடை) எழுதினர். தமிழில் நல்ல நாடகநூல் வளர்ச்சிக்கு இவை பெரிதும் வழிகாட்டியாகும். ஆரணி குப்புசாமி முதலியார் வடுவூர் துரைசாமி ஐயங்கார் போன்றவர்கள் நாவல்களை எழுதியுள்ளனர். இன்றைய நாவல் இலக்கிய வளர்ச்சிக்கு இவை பெரிதும் காரணமும் தூண்டுதலுமாகும். கல்கி போன்றவர்கள் நாவலுலகில் தலைசிறந்து நிற்பதற்கு இவை பெரும் வழிகாட்டிகளாய் நின்றன. இது பாரதி, சாமிநாதய்யர், திரு. வி. க. ஆகியோரது நூற்ருண்டெனக் கூறத்தக்கதாகும்.

உ. வே. சாமிநாதய்யர்: (1855 — 1942) 20-ஆம் நூற்ருண்டில் தமிழுக்குத்தலைசிறந்த தொண்டாற்றியவர்; மீனட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவர்; தியாகராச செட்டியாருக்கடுத்து அரசினர் கல்லூரிகளில் ஆசிரியராயிருந்தவர். இசைப்புலவராக விளங்கவேண்டிய இவர் வாழ்க்கை தமிழ்ப் புலமையை நாடியது நாட்டின் நற்பேறேயாகும். பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம்,

மணிமேகலை, சிந்தாமணி, குறுந்தொகை, புறநானூறு முதலிய நூல்களை ஏடுகளிலிருந்து அச்சிட்டுதவியதே இவரது தொண்டாகும்; இவர் செய்த அளவில் இவரது தொண்டு ஒப்பற்றதும் பாராட்டுக்குரியதுமாகும். எனினும் இவரில்லாவிடின் அந்நூல்களெல்லாம் வெளி வந்திரா என்பது பிழையாகும். தாமோதரம்பிள்ளையனைய வர்கள் இவர் பதித்த ஒவ்வொரு நூலையும் பதிப்பிப்ப தற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தனர் என்பதனை ஐயரவர்களே எழுதியுள்ளார்கள். அவர்கள் அனைத்தையும் வெளியிட்டிருக்கக்கூடும். வளையாபதி ஏடு திருவாவடுதுறை மடத்தில் இருந்ததாகவும் பின்னர் பார்த்தபோது கிடைக்கவில்லை யெனவும் எழுதியுள்ளார். அது கிடைக்காமற்போனது ஒரு குறையேயாகும். நல்லுரைக்கோவை, என் சரித்திரம் முதலிய உரைநடை நூல்களை மிகவாக எழுதியுள்ளார். பழைய வரலாறுகளை அரிதாகத்திரட்டிக் கதையாகச் சுவைபடக் கூறுவதில் திறம்படைத்தவர்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை நூல்கள் உட்பட பல பிரபந்தங்களைப் பதிப்பித்துள்ளார். இவருக்கு நல்ல ஆதரவளித்தவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தாராவர். இவர் பதிப்புச் செலவிற்கும் தமிழுலகம் மிக்க பொருளுதவி செய்தது. அரசியலார் இவருக்கு டாக்டர், மஹாமஹோபாத்யாயர் என்ற பட்டங்களையளித்துப் பாராட்டினது பொருத்தமேயாகும். தமிழுக்குத் தொண்டு செய்வதற்காக நீண்டகாலம் 84 ஆண்டுகள் வாழ்ந்தவர் ஐயரவர்கள். பதிப்பீட்டில் பல நல்லமுறைகளைக் காட்டிச் சென்றார்; கதைச்சுருக்கம், பொருளட்டவணை, ஆராய்ச்சிக் குறிப்புக்கள் முதலியவற்றுடன் இவர்களது பதிப்புக்கள் வெளிவருவதுண்டு.

பாரதி : (1882—21—8—1921) சுப்ரமணிய பாரதி தேசீயக்கவியாய் விளங்கியவர். இந்நூற்ருண்டில் சிறந்த பாடல்களையியற்றியவர் இவரே. பாவினங்களை மிகுதியும் பின்பற்றிய இவரது பாடல்கள் ஒரு புதுக் கவிஞரினத்தையே படைத்துவிட்டது, அப்பரம்பரை பாரதிப் பரம்பரை என வழங்கப்படுகிறது. கம்பரைப் போல வாழ்க்கையில் அளப்பிலாத்துன்பங்களை அரசாங்கத் தாரிடமிருந்து ஏற்றுக்கொண்டவர். வடமொழியிலும் ஆங் கிலத்திலும் நற்புலமையுடையவர். உரைநடையும் மிக வாக எழுதியுள்ளார். பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு, கண்ணன் பாட்டு, தேசீயப் பாடல்கள், சமயப்பாடல் கள் என்பன இவரது பாடல்களுள் அழியா நிலையுடை யன. சமயத்திலும் அரசியலிலும் சமரச நோக்குடைய வர். அல்லாவையும் கிறித்துவையும் கண்ணனேடு கலந்து வணங்குவார். சமூகத்திலும் அரசியலிலும் ஒரு புரட்சி கொண்டுவந்தவர். தேசிய விநாயகம்பிள்ளை, நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, சுத்தானந்தபாரதி இவர் வழியில் பேர்பெற்ற கவிஞர்கள். சுத்தானந்தர் 100 நூல்களுக்கு மேல் எழுதித் தமிழுக்குத் தனித்தொண்டு செய்துவருகி ருர் என்னலாம்.

பாரதிதாசன்:. இவரது மாணவர். அரசியற் கோட்பாட்டில் மாறுபடினும் அடிப்படையில் இருவரும் சீர்திருத்தக்காரர்களே. திருத்தமான சமயம் இருக்கலாம் அல்லது சமயமே வேண்டாமென வெறுப்பவர் இவரது காவியங்கள் பல, நிலைத்த காவியத்தன்மையுடையன. அவற்றுள் பாண்டியன் பரிசு, குடும்பவிளக்கு முதலியன குறிக்கத்தக்கவாகும். இவரது பாடல்களில் வசை சிறிது கலந்திருக்கும். தமிழ்ப் புலவருள்ளும், மேனுட்டுப் புலவ

ருள்ளும் அத்தலைகயோர் பலர்இருந்துள்ளனர். அவற்றை நீக்கி இவரது கவிதைகளை நோக்கினல் அவை சீரிய கவித்தன்மையுடையவே யாகும்.

திரு. வி. க. (28-6-83—17-9-53) திரு. வி. கல்யாணசுந்தரனர் உரிமைக்காக வாழ்ந்த தமிழ்த்தலைவர். என்றும் நிலைத்கத்தக்க பொதுமைக் கருத்துக்களையுடைய பாடல்களைப் பாடியுள்ளார். உரிமைவேட்டல், பொதுமை வேட்டல், திருமால் அருள்வேட்டல், கிறித்து அருள் வேட்டல் போன்ற பாடல் இலக்கியங்கள் என்றும் படிக்கத் தக்கனவாகும். இவர் பேச்சுத்திறனும், எழுத்துத்திறனும் உடையவர். இவ்வகையில் ஒரு இனத்தையே இவர் படைத்துவிட்டாரென்னலாம். உணர்ச்சி ததும்ப அழகிய சொற்களைக் கொத்துக் கொத்தாக அமைத்து இனிதாகப் பேசுபவர்; அவ்வாறே எழுதவும் கூடியவர். இவரால் ஊக்கப்பட்டுப் புலவரானவர் பலபேர். முருகன் அல்லது அழகு, பெண்ணின் பெருமை, மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் என்பனபோன்ற இனிய உரை நடை நூல்களை இயற்றியவர். தமிழ்த்தென்றல், தமிழ்ச்சோலை என்ற கட்டுரைத் தொகுதிகள் நல்ல அரசியல் சமூகக் கருத்துக்களுடையவை. திரு. வி. க. வாழ்ந்தவரையில் தமிழுக்கோர் செம்மையும் அழகுமிருந்தது.

மறைமலையடிகள்: (1883—1958) நல்ல தமிழ்ப் பரம்பரையில் வந்தவர்; கிறித்துவக் கல்லூரித் தமிழாசிரியராயிருந்தவர். மும்மொழிப்புலமை நிறைந்தவர். சைவப்பற்று போலத் தமிழ்ப் பற்றும் உடையவர். சைவமும் தமிழும் வாழப் பிற சமயங்களை யும் மொழிகளையும் ஓரளவு வெறுத்தவரெனவும் கூறலாம்.

தனித்தமிழியக்கத்திற்குத் தந்தையென இவரைக் கூற லாம். தனித்தமிழ்ச் சொற்களையிட்டு நல்ல நடையில் உரைநடை யிலக்கியங்களை ஏராளமாகப்படைத்துள்ளார், இவரும் தமது நடைக்கும் நெறிக்கும் ஒரு இனத்தைப் படைத்துவிட்டாரென்னலாம். தமிழ் இந்நூற்றாண்டில் தலை தூக்குவதற்கு இவர்களெல்லாம் ஒரு பெருங் காரண மென்பதில் ஐயமில்லை.

அறிவுக்கடல் என்ற பத்திரிகை நடத்தினர். தனக் கென அச்சகம் ஏற்படுத்திக்கொண்டு நூல்களைப் பதித் தார். உயர்ந்த நல்ல ஆங்கில நடையெழுதக் கூடியவர். ஆங்கிலத்தில் தமிழ்ப் பொருள்களைப்பற்றி நூல்கள் பல எழுதியுள்ளார். தமிழர் மதம், மாணிக்கவாசகர் வரலாறு சைவசித்தாந்தக் கட்டுரைகள் முதலியன இவரது உரை நடைகள். நாவல், கடிதம், மொழி பெயர்ப்பு முதலிய துறைகளுக்கும் இவர் வழிகாட்டி நூல்கள் பல இயற்றி யுள்ளார். இவரது சாகுந்தல மொழிபெயர்ப்பு பலரா லும் பாராட்டப்பெற்றது. இவர் சிறந்த ஆராய்ச்சியாள ரென்பது 'மாணிக்கவாசகர்காலவாராய்ச்சியிற்' புலப்படும்.

பண்டிதமணி கதிரேசன் செட்டியார் (16-9-81 24—10—53) தமிலும் வடமொழியிலும் சிறந்த புலமை யுடையவர். இவரை ஓர் உரையாசிரியரென்னலாம். இவ ரது இலக்கியக் கட்டுரைகள் நல்ல உரைநடையாகும் திருவாசகத்திற்கு இவர் கண்ட உரையே இவர் பெயரை என்றும் நின்று நிலவச்செய்வதாகும். இதுவரை வந்த உரைகளுள்ளேயே இவரெழுதிய பகுதிகளின் உரை மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. இவருக்குப் பண்டித மணி, மஹாமஹோபாத்தியாய என்ற சிறப்புப்பட்டங் கள் அளிக்கப்பட்டன. சாணக்கியரது அர்த்த சாத்தி

ரத்தை இவர் தமிழில் மொழிபெயர்க்க உதவினர். மற்றும் சுக்ரநீதி, மிருச்சகடிகம் ஆகியவற்றின் மொழிபெயர்ப்புக் களும் இவராலியன்றன.

வேங்கடசாமி நாட்டார்: *(12-4-84-28-3-44)* சொற்பொழிவிலும், உரைநடையிலும் சிறப்புப்பெற்றவர். இவரையும் ஒரு உரையாசிரியர் என்று கூறலாம். இவர்க ளெல்லாம் சைவத் தமிழுக்காகப் பெரிதும் வாழ்ந்தவர் கள். திருவிளையாடற் புராணத்திற்கு இவரெழுதிய உரை மிகவும் விரிவானதாகும். உரையெழுதாத அகநானூறு போன்ற இலக்கியங்களுக்கு இவர் உரைகண்டது பாராட்டற்குரியதாகும். சிலப்பதிகாரத்திற்கும் மணிமே கலைக்கும் புதியவுரைகளும் இவரால் எழுதப்பட்டன.

வ. உ. சி: *(1872—1936)* பாரதி, திரு. வி. க. போன்று தேசீய உணர்ச்சியும் தொண்டும் சிறந்த தமிழறிஞர். தமிழுக்கும் தமிழகத்திற்கும் இன்னல் பல வுற்றவர். பதிப்பாசிரியர். தொல்காப்பியத்தை உரைக ளுடன் பதிப்பித்தார். திருக்குறள் மணக்குடவர் உரை யினைப்பதித்து வெளியிட்டார். குறளுக்கு உரையுமெழு தியவர். உயர்ந்த தமிப்புலமையுடையவர். சாந்திக்கு மார்க்கம், வலிமைக்குமார்க்கம் முதலிய அரிய மொழி பெயர்ப்பு நூல்களை யாக்கியவர். பாரதியாரால் பாராட் டப்பெற்றவர்.

கா. சுப்பிரமணிய பிள்ளை: *(5—11—88 — 30—4—45)* அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைப் பேராசிரியராயிருந்தவர். தமிழ் இலக்கிய வரலாறு எழுதித் தமிழுக்குச் சிறந்த பணிசெய்தார். ஆராய்ச்சியிற்

சிறந்த இவரது நூல்கள் இருபதுக்கும் மேற்பட்டன மிக மேம்பாடுடையவாகும். அப்பர், சம்பந்தர் முதலிய நால்வர்க்கும் சேக்கிழார் மெய்கண்டார் முதலியவர்க்கும் 'வரலாறும் நூலாராய்ச்சியும்' என்ற நூல்களை யெழுதியுள்ளார். இவை ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுவனவாகும். மறைமலையடிகளைச் சார்ந்த இவர்களது இனம் ஆராய்ச்சியில் சைவத்திற்கே முதலிடம் தந்து தமிழைக்கூட சிறிது பின்தள்ளிவிடக் கூடியதென்னலாம்.

ரா. இராகவய்யங்கார்: *(1870—1948)* 20-ம் நூற்றுண்டு வைணவத் தமிழ்ப் புலவருட் சிறந்தவர். நுட்பமான கருத்துக்களுடன் சொற்பொழிவாற்றுபவர். ஆராய்ச்சி வல்லுநர். தமிழ் வரலாறு, குறுந்தொகை விளக்கம், பெரும்பாணுற்றுப்படை விளக்கம் முதலிய நூல்கள் இவரது ஆய்வுத் திறனுக்கு நற்சான்ருகும். 'பாரிகாதை' என்ற நற்றமிழ்க்காவியத்தை வெண்பாவில் பாடியுள்ளார்.

மு. ராகவையங்கார்: *(1878—1960)* இவர்களிருவரும் ஒரு குடும்பத்தினர். சான்ற புலமையுடையவர்கள். சென்னைப் பல்கலைக்கழகம் தொகுத்த பேரகராதிப் பணியில் நீண்ட காலம் தொண்டாற்றியவர். ஆராய்ச்சியில் மேம்பட்டவர். சாசனத் தமிழ்க்கவிசரிதம் பெருந்தொகை, ஆழ்வார்கள் காலநிலை என்ற இவரது மூன்று நூல்களும் இலக்கிய வரலாற்றுக்கு எடுத்துக் காட்டுக்கள்.

கோபால கிருஷ்ணமாச்சாரி : இவர்களெல்லாம் வைணவத்திற்காகவும், தமிழுக்காகவும் வாழ்ந்தவர்கள்.

கிருஷ்ணமாச்சாரி, சடகோபராமாநுசாச்சாரி ஆகியவர்க ளுடன் வெளிவந்த கம்பராமாயண உரை இவர்களை என்றுமுள தென்றமிழுடன் இருக்கச் செய்யக்கூடியதும், எக்காலத்தும் தமிழ்ப்புலவர்க்கோர் வழிகாட்டியாயிருக்கக் கூடியதுமாகும்.

சூரியநாராயண சாத்திரியார் : *(1870—1903)* தமிழுக்காக உழைத்த இளைஞர் சாத்திரியார் என இவரைக் கூறலாம். தமிழ் வாழவேண்டும் என இவர்க் கிருந்த உணர்ச்சி எவர்க்கும் இருந்ததில்லை யென்னலாம். பரிதிமாற்கலைஞன் எனத் தம் பெயரைத் தமிழாக்கிக் கொண்டார். உரைநடைக்கும் நாடகத்துக் கும் நற்பணி செய்தார். நல்ல தமிழில் உயர்ந்த உரை நடை நூல்களை யெழுதினர். நாடகவியல் என்ற நாடக இலக்கண நூலைக் கண்டார். இவரெழுதிய தமிழ்வரலாறு அத்துறையில் தமிழ் அறிஞர்க்கோர் வழிகாட்டியாகும். நடுநிலையான ஆராய்ச்சியுடையவர். சங்ககால நடை யைப் பின்பற்றியன இவரது பாடல்களும் உரைநடை யும். மதிவாணன் முதலிய உரைநடைகளும் கலாவதி ரூபவதி முதலிய நாடகங்களும் இவரியற்றிய நூல்களுட் சிறந்தன.

தஞ்சை கே. சீனிவாசப் பிள்ளை: *(1852–1929)* வழக்கறிஞராயிருந்து தமிழ்ப் புலமையும் சான்றவர்களுள் ஒருவர். இவரெழுதிய தமிழ் வரலாறு என்ற இலக்கிய வரலாற்று நூல் அத்துறையில் நடுவுநிலையும் தெளிவு முடையதாய் அனைவர்க்கும் வழிகாட்டியாய் இருந்து வருகின்றது.

நாவலர் சோமசுந்தரபாரதியார்: *(1878—1959)* இவரும் வழக்கறிஞர். இந்நூற்றாண்டில் வழக்கறிஞர் பலர் தம்தொழிலையும் விட்டுத் தமிழுக்குப் பணிசெய்ய வந்தனர். அதனால் தமிழுக்கொரு நற்பேறு வாய்த்தது. இவரிருவரும் தமது வழக்கறிவுத் திறமையையெல்லாம் தமிழ் ஆராய்ச்சியிலும் நுழைத்தவர்கள். அவ்வகையில் இவரது 'திருவள்ளுவர்' என்ற இலக்கிய வரலாற்று நூல் ஓர் எடுத்துக்காட்டாகும். தொல்காப்பியப் பொருளதிகார இயல்கள் பலவற்றிற்கு இவர் உரையொன்றெழுதி யுள்ளார். இவரது உரைநடை ஒருதனித்தன்மையுடை யது. 'மாரிவாயில்' என்ற காவியமும் இவர் எழுதியதே.

வையாபுரிப் பிள்ளை: *(13-10-1888—17-2-56)* இவரும் வழக்கறிஞரே. சிறந்த ஆராய்ச்சித்திறம் படைத்தவர். சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதித் தொகுப்பிலும் தமிழாராய்ச்சிப் பகுதியிலும் தலைவராக இருந்தவர், உயர்ந்த பதிப்பாசிரியர். ஏராளமான நூல் களை ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பித்துள்ளார். தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு இவர் செய்தபணி என்றும் இருப்பதாகும். அவ்வகையில் பலநூல்கள் எழுதியுள்ளார். சொற்களையும் இலக்கணக் குறிப்புக்களையுங் கொண்டு இலக்கிய வரலாற்றினைத் திட்டம் செய்யும் வகையில் இவர் புதுநெறிகண்டார். *20* நூல்களுக்குமேல் எழுதியும் பதுப்பித்துமுள்ளார் 'இலக்கிய தீபம்' 'தமிழ்மொழி இலக்கிய வரலாறு' ஆகியன இவரது நூல்களிற் சிறந்த சிலவாகும்.

ஆபிரகாம் பண்டிதர்: *1859—1919* கலைகளில் ஆராய்ச்சிமிக்கவர். தஞ்சாவூரில் இருந்தவர். 'கருணாமிர்த

சாகரமென்ற' இவரது இசையியல் நூல் மிகவும் பயன் படுவதாகும். விபுலாநந்தரது யாழ்நூலுக்கு முந்தியது.

கோபிநாதராவ்: *1872—1919* அரசாங்கக் கல்வெட்டு, புதைபொருள் ஆராய்ச்சியிற் பணிசெய்தவர். வரலாறும் ஆராய்ச்சியறிவு மிக்கவர். இன்றைய கல்வெட்டு, சோழர், பாண்டியர் வரலாறு ஆகியவற்றிற்கு நல்ல அடிப்படையிட்டவர். இன்றைய இலக்கிய வரலாறு பற்றிய முடிபுகள் பலவற்றிற்கு நல்வழிகாட்டியவர். சோழர், தமிழகக்கோயிலமைப்பு பற்றியெல்லாம் இவரது கட்டுரைகள் நல்ல மதிப்புடையவாகும்

சிங்காரவேலு முதலியார்: *1885—1931*. பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப்பணிபுரிந்தவர். நல்லாசிரியர். இவர் தொகுத்த 'அபிதானசிந்தாமணி' ஒரு சிறு கலைக் களஞ்சியமாகும். மேற்கூறிய கலைக் களஞ்சியத்திற்கெல்லாம் வழிகாட்டி இத்தகைய நூல்களென்னலாம். ஒரு தனி மனிதர் இத்தகைய அரியநூலையாக்கியது போற்றத் தக்கதாகும். இலக்கியங்களைப் புரிந்து கொள்வதற்கு இந் நூல் மிக்க துணைபுரிகின்றது.

டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை: வழக்கறிஞர். இவரது தமிழ்ப் புலமையையும், பணியையும் பாராட்டிச் சென்னைப் பல்கலைக் கழகம் இவர்க்கு டாக்டர் பட்டமளித்தது. சேதுப் பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர். பேச்சிலும் எழுத்திலும் எதுகைமோனையமைந்த நல்ல நடைக்கு வழி காட்டியவர். ''சொல்லின் செல்வர்'' என்ற பட்டம் இதற்காக இவர்க்குக் கிடைத்தது. ''ஊரும் பேரும்'' என்ற

ஆராய்ச்சி நூல் இவரது ஆராய்ச்சித்திறனுக்கு எடுத்துக் காட்டாகும். திருவள்ளுவர் நூல் நயம், தமிழர் வீரம், தமிழின்பம் முதலிய அரிய கட்டுரை நூல்களையாக்கி யுள்ளார்.

தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்: சென்னை வழக் கறிஞர். வடிவேல் செட்டியார் வழிவந்த தமிழ்ப்புலவரென இவரைக்கூறலாம். அரசியல் உணர்ச்சியில் திரு. வி. க. வைப் பின்பற்றியவர். உணர்ச்சியும் உண்மையும் ததும்ப எழுதவும் பேசவும் வல்லவர். பல்கலைப்புலமையும் பன் மொழிப் புலமையும் உடையவர். சமரசமும் விரிந்த மனப்பான்மையும் கொண்டு எண்ணற்ற தமிழ்ப்புலவர் களை உருவாக்கியவர். தேசிய உணர்ச்சியும் தொண்டு மிக்கவர். தமிழைப்பற்றி ஆங்கிலத்தில் எழுதி உலகறியச் செய்யும் ஆற்றல் மிக்க தமிழ்ப் புலவர் ஒரு சிலருள் சிறந்தவர். ஆங்கிலத்தில் நல்ல நடையுடன் எழுதக் கூடியவர். தமிழில் இவரெழுதிய நூல்களுள் 'பிறந்த தெப்படியோ, திருக்குறள் ஆராய்ச்சிகள், முல்லைப் பாட்டு முதலியன ஆழமும் ஆராய்ச்சியு முடையவாகும்.

ஔவை. துரைசாமிப் பிள்ளை: சீரிய ஆராய்ச்சித் திறமுடையவர். உரையாசிரியர் பரம்பரையுள் ஒருவ ராகக் கூறலாம். புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, மணிமேகலை, நற்றிணை, யசோதரகாவியம் முதலியவற்றிற்கு இவரெழுதிய உரைகள் என்றும் விளக்கமுறுத்தற்காவனவும் வழிகாட்டியாவனவுமாகும்.

டாக்டர் சிதம்பரநாதன்: பெருமித நடையுடன் எழுதவும் பேசவும் கூடியவர். செம்மையாக ஆங்கிலத்

தில் பேசவும் எழுதவும் வல்லவர், ஆங்கிலஞ் சிறந்த தமிழ்ப் புலவருள் இவரும் ஒருவர். தமிழ் 'யாப்பியல்' பற்றி ஆங்கிலத்தில் ஆராய்ச்சி யெழுதி டாக்டர் பட்டம் பெற்றவர். பின்வரும் நால்வருங்கூட ஆராய்ச்சியெழுதி இருபல்கலைக் கழகங்களிலும் டாக்டர் பட்டம் பெற்றவர் களே. மொழி பெயர்ப்புக்களும், நல்ல கட்டுரை நூல் களும் பல எழுதியுள்ளார். பெரியார் மன்ரோ, இள வேனிற்காலம் முதலிய அவற்றுட் சிலவாகும். 'தமிழ் கல்சர்' என்ற பத்திரிகையில் இவரது ஆங்கிலக் கட்டுரைகள் பல வெளிவந்துள்ளன.

டாக்டர் இராசமாணிக்கனுர்: உலையா உழைப் பினுல் இலக்கியங்களை அதன்வழித் தமிழையும் உயர்த் துபவர். உயர்நிலைப்பள்ளி மாணவர் முதல் அனைவர்க் கும் அளப்பற்ற தமிழ்நூல்களை எழுதியுள்ளார். தமிழக வரலாறு, கல்வெட்டு, இலக்கிய வரலாறு முதலியவற் றில் நல்ல தேர்ச்சியுடன், பல்லவர் வரலாறு சோழர் வரலாறு, சைவ சமய வரலாறு முதலிய ஆரர்ய்ச்சி நூல்களை எழுதியுள்ளார். ஏராளமான உரை நடை நூல்களையாக்கியுள்ளார்.

டாக்டர் வி. ஐ. சுப்ரமணியம்: திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர். ஒலியியல் (Linguistics) துறையில் தேர்ந்தவர்: இவ்வகையாராய்ச்சி யில் 'தமிழின் ஒலிமுறை' களைப்பற்றியாராய்ந்து அமெரிக்கப் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். மொழி யியலைப்பற்றிய இவரது கட்டுரைகள் நுட்பமுடையன. தொல்காப்பிய ஒலியியலைப்பற்றி ஆங்கிலத்தில் இவர் ஓர் நூல் எழுதினுல் இலக்கியத்திற்கு நன்மையுண்டாகும்.

டாக்டர் மு. வரதராசனுர்: பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர். உலையாவுழைப்பினை ஆக்கமான வழியில் செலுத்தியவர். 'சங்கநூல்களில் இயற்கை' யென்ற ஆராய்ச்சியெழுதி டாக்டர் பட்டம்பெற்றவர். தலைசிறந்த தமிழ் எழுத்தாளர். இவரது எழுத்தினைத் தமிழுலக முழுவதும் பாராட்டுகின்றது; மாணவர்க்கு இவரதெழுத்தில் பெரும் ஈடுபாடுள்ளது. நடுவுநிலையுடன் எளிய நடையில் உண்மைகளை அழகாக எழுதுபவர். இவர் எழுதாத இலக்கியத்துறையே இல்லையெனலாம். தமிழ்ப்புலவர்கள் புதினங்களை எழுதவில்லை, எழுதவறியார் என்ற குறையைப் போக்கிப் பல நாவல்களை எழுதியவர். காண்டேகரைப் போன்று சீர்திருத்த நோக்கத்துடன் எழுதுபவர். இதுவரை 50—60 நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார். நாடகங்கள், இலக்கிய விளக்கங்கள், மொழி வரலாறு, மொழி நூல் முதலிய துறைகளில் பல நூல்களை எழுதியுள்ளார். திருக்குறளுக்கு இவரெழுதிய பொழிப்புரை நாடுமுழுவதும் நன்கு படித்துப் பயன்பெறப் படுவதாகும்.

டாக்டர். வ. சுப. மாணிக்கம். அழகப்பா கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர். "சங்க நூற்களில் காதல்" என்ற பொருள்பற்றி ஆராய்ச்சி யெழுதி டாக்டர் பட்டம் பெற்றவர். "வள்ளுவம்" என்ற அரிய ஆராய்ச்சி நூலெழுதியுள்ளார். நல்ல நடையில் பாடவேண்டுமென்ற முயற்சியுடையவர். கொடை விளக்கு என்ற பாடல்கள் அதற்கெடுத்துக்காட்டாகும். "மனைவியின் உரிமை" முதலியனவும் இவரது நூல்கள் ஆகும்.

டாக்டர் துரையரங்கனுர்: அழுத்தமான படிப்பும் இலக்கணப் புலமையும் நிறைந்தவர். சுந்தரர் தேவாரம்

பற்றிப் பெருநூலொன்றெழுதியதால் இவருக்கு டாக்டர் பட்டம் கிடைத்தது. நல்ல கட்டுரையாளர். இவரது கட்டுரை நூல்கள் கல்லூரி மாணவர்க்குப் பாடமாக்கப் பட்டு அவரால் பெரிதும் பாராட்டப்படுகின்றன.

ஜி. சுப்ரமணிய பிள்ளை: அண்ணுமலையில் ஆராய்ச்சிப் பேராசிரியர். வழக்கறிஞர். பொருட்சிறப்பு குன்றுமல் நகைச்சுவையுடனும் யாவருக்கும் புலப்படு மாறும் எழுதவும் பேசவும் வல்லவர். மொழிபெயர்ப் பாற்றல்மிக்கவர். மொழிபெயர்க்கப்படாத தமிழ் நூல் களை இவர் மொழி பெயர்த்தால் தமிழுக்கு அது ஒரு நற்பேருகும். சைவசித்தாந்த வரலாறு முதலிய ஆராய்ச்சி களை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். 'குறள்விருந்து, வெண்ணிலாவிலே' போன்ற கட்டுரை நூல்கள் படிப் போர்க்குப் பெருமகிழ்ச்சியளிப்பனவாகும்.

லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்: அண்ணு மலையில் தமிழ்ப்பேராசிரியர். பண்டிதபட்டமும் வித்வான் பட்டமும் ஒருங்குடையவர். பாடஞ்சொல்லும் திறமிக்கவர். பொருளாழமும், குறிப்பும் சுருக்கமுங் கொண்ட சொல் லாற்றலுடையவர். ஆராய்ச்சி மிக்கவர். பரிபாடல் ஆராய்ச்சி, சங்ககாலத் தமிழர் வாழ்வு முதலிய நூல் களுக்காசிரியர். இவரது புலமைத் திறத்தைப்பாராட்டி இவர்க்குப் 'பண்டிதமணி' என்ற பட்டம் அளிக்கப்பட்டது.

சதாசிவ பண்டாரத்தார்: இருபதாம் நூற்ருண் டில் இணையற்ற இலக்கிய, தமிழக வரலாற்றுப் பேராசிரி யர். அண்ணுமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சித்துறையில் பணியாற்றியவர். கல்வெட்டுத்துறையில் ஒப்பற்ற புலமை யுடையராய் விளங்கிப் பாண்டியர் வரலாறு, சோழர் வர

லாறு ஆகிய சீரியவரலாற்று நூல்களை எழுதினர். இலக்கிய வரலாறு பற்றிய இவரது நூல்களும் கட்டுரைகளும் தெளிவும் முற்போக்குமுடையவை.

திரு. மு. அருணுசலம் பிள்ளை: அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேருரையாளர்: வரையறுத்த படிப்பும் பாடஞ்சொல்லும் திறமும் படைத்தவர். பல்கலைக் கழகத்தமிழ்ப்பணியில் பெரும்பங்குடையவர். அண்ணுமலையரசர் என்ற தமிழ்க் கட்டுரை நூலை யெழுதியுள்ளார்.

திரு. வெள்ளைவாரணர்: அண்ணுமலை ஆராய்ச்சித் துறையிற் பணி செய்பவர். நுட்பமான தமிழ்கல்வியுடையவர். 'தொல்காப்பியம், திருமுறைகள்' ஆகியவற்றிற்கு விரிவான ஆராய்ச்சி வரலாறுகள் எழுதியுள்ளார்.

திரு. ச. தண்டபாணிதேசிகர்: குறளுரை வளத்தை முதலில் தொகுத்து வெளியிட்டவர். அண்ணுமலையில் தமிழ்ப்பணி புரிபவர். கணபதி, முருகன் என்ற இரண்டு ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டுள்ளார்.

மயிலை சீனி. வேங்கடசாமி: தமிழ்ப்பேரறிஞர். கல்வெட்டிலும் ஆராய்ச்சியிலும் வல்லவர். நரசிம்மன்: மஹேந்திரன், தமிழகக் கலைகள் ஆகியவைபற்றியும், சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும் என்பனபற்றியும் அரிய வரலாற்று நூல்களை எழுதியுள்ளார்.

புருடோத்தம நாயுடு: சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித்துறையில் பேருரையாளர். பரந்த படிப்பும் பாடஞ்சொல்லுந்திறமும் உடையவர். திருவாய்மொழி ஈட்டுரையை நல்ல தமிழில் பெயர்த்து 10-தொகுதி

களாக வெளியிட்டுள்ளார். வைணவத் தமிழிலக்கியங் களில் தேர்ந்தவர்

கா. அப்பாத்துரை :தமிழும் ஆங்கிலமும் வல்லவர். அகராதித் தொகுப்புப் பணியில் தேர்ந்தவர். தமிழுணர்ச்சி மிக்கவர். வரலாற்றுக் கதைகளும் அரசியல் வ ர லா று களும் எழுத்துவதிற் றேர்ந்தவர். 70 நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார்.

கோதண்டபாணிப் பிள்ளை: நல்லதமிழறிஞர். நெடு நல்வாடை யாராய்ச்சியில் இவரது ஆராய்ச்சி பயன்பட் டது. தமிழிசைபற்றிச் சிறந்த ஆராய்ச்சிகளை எழுதிவரு கிருர் 'முதற்குறள் உவமை' ஒரு நல்ல நூல்

தேவநேயப்பாவாணர் : அகராதித் துறையிலும் சொல்லாராய்ச்சியிலும் ஆழ்ந்த ஆராய்ச்சியும் திறமையு முடையவர். வீறுகொண்ட தமிழுணர்ச்சியில் விருப்ப முடையவர். முதல் தாய்மொழி, திராவிடத்தாய், சொல் லாராய்ச்சிக் கட்டுரைகள் முதலிய நூல்களின் ஆசிரியர்.

அ. மு. பரமசிவானந்தம்: பச்சையப்பன் கல்லூரிப் பேருரையாளர். புதினங்களிலும் கட்டுரையிலும் வல்ல வர். சுமார் 15-நூல்களுக்குமேல் எழுதியுள்ளார். 'கவிதை யும் வாழ்க்கையும்' முதலியவை சிறந்தன.

அ. ச. ஞானசம்பந்தம் : தமிழ்ப்புலவர் பரம்பரை யினர். இலக்கிய ஆராய்ச்சித்துறையில் ஈடுபாடுடையவர். அவ்வகையில் இலக்கியக்கலை, இராவணன் வீழ்ச்சியும் மாட்சியும் என்ற நூல்களின் ஆசிரியர்.

பேரகராதி: (Lexicon): இந்நூற்ருண்டுத் தமிழி லக்கியத் தோற்றத்துள் மிக்க ஒளியுடையன இரண்டு, பேரகராதியும், தமிழில் கலைக்களஞ்சியமுமாகும். இவ் வகையில் ஈடுபட்ட புலவர் யாவரும் பெரும் பாராட்டு தலுக்குரியராவர். இலக்கிய விளக்கத்திற்கு இவற்றின் துணை இவ்வளவு அவ்வளவு என்ன முடியாது. போப் முதலிய ஆங்கிலேயரும், மு ரா, வையாபுரிப் பிள்ளை முதலியோரும் இதற்குப் பெருந்துணை புரிந்தவராவர். இலட்சம் சொற்கள் (30-ஆண்டு முயற்சியில்) இதனில் விளக்கம் பெற்றுள்ளன. தமிழ்மொழிக்கு இதுவொரு நற் கருவூலமாகும்

கலைக்களஞ்சியம்: அரசியலார், பல்கலைக்கழகத்தார் ஆகியவர் உதவியுடன் திரு. அவிஞசிலிங்கம் செட்டியார் தம் வாழ்வில் செய்த அருந்தமிழ்ப்பணி இக்கலைக் களஞ்சியமாகும் இலக்கியத்தோற்றத்திற்கு வள்ளல்கள் பலர் காலந்தோறும் தூண்டுதலளித்துள்ளனர். அவிஞ சியார் அப்பரம்பரையினர். 10-தொகுதிகளாக உருவாகிக் கொண்டிருக்கும் இந்நூல் ஒப்பற்றதாகும். தமிழின் எவ்வகைத் துறையறிவுபற்றியும் திறமான தெளிவான விளக்கங்களைத்தருவது இந்நூல். இதன் பதிப்பாசிரிய ராகவிருக்கும் திரு. தூரனவர்கள் நல்ல இலக்கியப் பயிற்சியுடன் பல நூல்களை ஆக்கியுள்ளார்.

கி. வா. ஜகந்நாதன்: டாக்டர் ஐயரின் மாணவர். கலைமகள் இதழின் ஆசிரியர், சிறந்த தமிழ்ப்புலமை யுடையவர். பக்திப் பாடல்களை விளக்கஞ் செய்வதில் தேர்ச்சிமிக்கவர். புலவர்கள், நாவல் சிறுகதை முதலிய வெழுதுவதிலும் திறம்பெற முடியும் எனக்காட்டுபவர். 50-க்குமேலான நூல்களை எழுதியுள்ளார்.

# முடிவுரை.

---

இந்நூலில் புதுக் கோட்பாடுகளாக நான்காம் சங்கத்தைப் பற்றியும் சீவக சிந்தாமணி கி. பி. ஆறும் நூற்றாண்டென்பது பற்றியும் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. நான்காஞ் சங்கத்திற்குப் பேராசிரியர் கி. பி. சீனிவாசய்யங்கார் போன்றவர்களும் சீவக சிந்தாமணி காலத்திற்கு பேராசிரியர் *A. சக்கரவர்த்தி போன்றவர்களும் ஆதரவளித்துள்ளார்கள். மற்றும் சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி, ஆகிய மூன்று நூல்களுக்கும் (கதையமைப்பு) ஒற்றுமை காணப்படுதலால் மூன்றும் ஒருகாலத்து நூல்களாகக் கருதலாம். "வினை, முற்பிறப்பு, மறுபிறப்பறிவு பிறவி நீங்குதல், நிலையாமைகள், சுடுகாட்டுச் சிறப்பு செத்தாரை யெழுப்புதல், வீடுபேற்று விருப்பம், முதுமையில் துறவினை இன்றியமையாததாக் கொள்ளல், பெண்களும் துறவிகளாதல், அறமுரைத்தல், தவப்பள்ளிகள் சமயக்கடவுளரைப் போற்றுதல், சீலம் தானம், மந்திரம், விஞ்சை, விஞ்சையர், நிமித்திகர், கல்வி, கலை, அறிவு மேம்பாடு, பெண்டிரும் உண்டியும் அறமும், வானிற் பறத்தல், பறக்கும் தெய்வங்களின் உதவி, இசைக்கலை மேம்பாடு, போர்த்திறன், யானைகளை யடக்கல், யானைத்தீ மழையை வாழ்த்தல், இயற்கை, பொழில் இளவேனில் ஆகியவற்றில் ஈடுபாடு, நீர் விளையாட்டு, பந்தாடல், சுண்ணம், காமகோட்டம், ஆனிரைச் சிறப்பு, காமம் பற்றிய தூதுகள், பரத்தையர் காமத்தில் உழன்று மீளு

---

* சீவக சிந்தாமணி நினைவு மலர் * R. S. Iyer H. O. I. 271.

தல், பல்லவதேயம், சிறைக்கோட்டம் சீப்பித்தல், நரக விலங்குகதிகள், இந்திர்த்தெய்வம், கலைமகள், குன்றுகளைக் கோயிலிடமாக்குதல் முதலியன இம்மூன்று காவியங் களுக்கும் பெருங்கதைக்குங் கூடப் பொதுவான நூற் பொருளாகும்.

மணிமேகலை சிலப்பதிகார காலத்திற்குச் சூரியனுக்குக் கோயில் (உச்சிக்கிழான் கோட்டம்) அந்நூலுள் குறிக் கப்படுவது ஒரு நற்சான்ருகும். கடைச்சங்கத்துக் கடவு ளருள் கதிரவன் கருதப்படுதலில்லை. ஹர்ஷனது முன் னோர் (பிரபாகரன்) காலத்திலேயே (கி. பி. 500-600) சூரியனுக்குத் தனிக்கோயில் வரலாற்றில் கூறப் படுகின்றது. மற்றும் இந்நூலில் புதியதாக மாணிக்க வாசகர் கி. பி. எட்டாம் நூற்ருண்டிற் குரியவரென கூறப் பட்டுள்ளது.

'எந்த நூலும் தோன்றுவதற்குக் காரண மென்ன, ஒரு நூல் அழிந்ததற்கோ வழக்கிழந்ததற்கோ காரண மென்ன என ஆராயும் நோக்கத்துடன் நூல்முழுவதும் எழுதப்பட்டுள்ளதாகக் கருதலாம். நூலாசிரியர் வாழ்க்கை வரலாறும் நூலின் காலமும் மட்டுமன்றி நூலும் அத னியல்பும் உட்பொருளும் எந்த வரலாற்றடிப்படையில் தோன்றினவென்பதை எடுத்துக்காட்டுதலே இலக்கிய வரலாற்றின் நோக்கமாகவேண்டும். அவ்வகையில் நூல் விரிந்து செல்லும் என்பதுண்மையே. எனினும் அவ் வகையில் தமிழ் இலக்கிய வரலாற்றிற்கோர் முயற்சி காணத்தான் வேண்டும்.

ஆங்கிலத்திற்கு இலக்கிய வரலாறுகள் மிகவிரிந்த அளவில் எழுதப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட நூற்

ருண்டுக்கும், குறித்தவகை இலக்கியத்திற்கும் பன்னூறு பக்கங்கங்கள் எழுதப்படுகின்றன. அத்தகு முயற்சிகள் தமிழுக்கும் வேண்டும். திரு. சோமசுந்தர தேசிகரென் பார் பதினாறும் நூற்றாண்டு பற்றியே இருநூறு பக்கங் களுக்குமேல் ஒரு நூல் எழுதியுள்ளார். அவ்வளவு விரி வாக ஒவ்வொரு நூற்றாண்டிற்கும் ஆசிரியர் வரலாறாக வன்றி நூல் வரலாறாக நூறு நூறு பக்கங்களாக எழுத வேண்டும். அம்முறையில் 20 நூற்றாண்டுக்கு மட்டும் சுமார் 2000 பக்கங்கள் நல்ல இலக்கிய வரலாறாக எழுதவேண்டும். மற்றும் தமிழ் இலக்கியத்துட் காணும் சமயம், கலை, இலக்கணம், யாப்பியல், பண்பு பற்றியெல் லாம் வரலாற்றடிப்படையில் நூல்கள் எழுதப்படவேண் டும். இவையாவுமாகச் சுமார் 5000 பக்கங்களில் அமையுமானால் அஃதொரு இலக்கிய வரலாற்றுக் களஞ் சியமாகப் பயனளிக்கும். இலக்கியப் புலமையும் வர லாற்றறிவும் கலந்தாலன்றி இத்தகு பெருஞ்செயல் இயல்வதரிதாகும்.

இன்றும் தொல்காப்பியம், முச்சங்கம் ஆகியவற் றின் காலம் தெளிவுபடுத்தப்படவில்லை. திருவள்ளுவர் மாணிக்கவாசகர் ஆகியோரின் காலங்கள் வரையறுக்கப் படவேண்டும். முப்பெருங்காவியங்கட்கும் நான்காஞ் சங் கத்திற்குமுள்ள தொடர்பு வலியுறுத்தப் படவேண்டும். சுந்தரர் காலத்தைப் பற்றிய கருத்தும் 11-ஆந்திருமுறை நக்கீரதேவர், கபிலபரணரது பாடல்கள் 12-ஆம் நூற் றாண்டிற்குரியன என்ற கருத்தும் மாறவேண்டும். கம்பர் காலத்தைப்பற்றி உள்ளத்தில் அமைதி வேண்டும். கம்பரை ஆதரித்த பிரதாபருத்திரன் சிறந்த புலவர்ப் புரவலன்; பிரதாபருத்ரீயம் என்ற நூல் அவன்பேரி

லேயே ஏற்பட்டது. அவனே தெலுங்கில் இராமாயணம் எழுதச் செய்திருக்கிருன்.

இக்காலங்களில் இ ர ா ம ா ய ண ம், பாரதம், நளசரிதம், பாகவதம், தலமான்மியம் முதலியன தென்ஞட்டு வாரங்கல், ஆந்திரநாடுகளில் தோன்றியுள்ள மையின் இவற்றுள் ஒன்றுக்கொன்று தூண்டுதலாகுமா வெனவும் ஆராயவேண்டும். குமரகுருபரர்க்கும் துளசி தாசர்க்குமுள்ள தொடர்பு ஆராயப்பட வேண்டும். சமணர் செய்த இலக்கியத் தொண்டு பற்றிய விரிவானதும் தொடர்பாயதுமாகிய வரலாறென்று வேண்டும். உரையாசிரியர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாறு விரிவாகக் கிடைக்கவேண்டும். 15, 16, 17, நூற்ருண்டுகளிலும் பின்புங்கூட வாழ்ந்த பல புலவர்களின் வாழ்நாட்கால வெல்லையைக் காண நம்மாலியலவில்லை; குமரகுருபரர் காலமே இதற்குச் சான்ருகும்.

ஒரு நூற்ருண்டில் நூற்றுக்கணக்கான புலவர் வாழ்ந்திருப்பினும் அவருள் ஒரு சிலரே வரலாற்றில் இடம்பெறக்கூடிய இலக்கியங்களைத் தோற்றுவித்திருப்பர். அத்தகைய நூல் தோற்றங்கட்கு வரலாற்றுக் காரணங்களைக் காணவேண்டும். அவற்றைப் பின்பற்றிப் பின் வருவோர் நூலியற்றுதற்கு அது துணை புரியும். இலக்கிய வரலாற்றிற்காக எழுதப்படும் இத்தகு நூல்கள் ஒருகாலத்தில் தெளிவு படாத தமிழக வரலாற்றினையும் தமிழ் நாகரீக வரலாற்றினையும் எழுதுதற்குப் பேருதவியாகும்.

நாட்டில் இலக்கிய வரலாற்று நூல்கள் மிகுதியாக எழுதப்பட்டுள்ளன. எனினும் அவை கோவையாகவும் முழுமையாகவும் ஒரே மனப் போக்கிலிருந்

தெழுந்தனவாகவும் நூற்றுண்டு வரிசையிலும் இல்லை. சீனிவாசப் பிள்ளையவர்களது தமிழ் வரலாறு முழுமை யாகக் கிடைக்கவில்லை. அவருடைய நூலினும் சுந்தரர், சிந்தாமணி போன்றன பற்றிய பிற்காலத்துக் கருத்து கள் இணைத்தாயப்பட வேண்டும். கா. சு. பிள்ளையவர் களின் இலக்கிய வரலாற்றில் முன்னவர் கருத்துக்கள் பல அப்படியே பின்பற்றப்பட்டுள்ளன. திருவள்ளுவர் மாணிக்கவாசகர் முதலியோர் காலங்கள் இன்றைக்குப் பொருந்தாதவையாயுள்ளன. பூர்ணலிங்கம் பிள்ளை ஆங் கிலத்தில் எழுதியுள்ளார்; அதனில் அவர் காலம் வரை வெளிவந்த பல கருத்துக்களும் அப்படியே கொடுக்கப் பட்டனவன்றி முடிவு காணப் பெறவில்லை. எந்நூலினும் வகையும் வரிசையும் தெளிவாகவின்மையால் சிக்கல்கள் மிகுந்து காணப்படுகின்றன. நூற்றுண்டு வரிசையில் எழுதப் பட்டிருந்தால் அவையும் இன்னும் பெரிதளவு பயன்படக் கூடியதாகலாம். இன்னும் பல நூல்களில் வெறும் வாழ்க்கை வரலாறுகளே கொடுக்கப்பட்டுள்ளன. இன்னும் பலவற்றில் அளவு (Proportion) கருதப்பட வில்லை. ஒருகாலத்தைப் பற்றி 50 பக்கமும் அதே வரிசையில் மற்றொரு காலத்தைப்பற்றி 5 பக்கமும் எழுதப்பட்டுள்ளன.

## தமிழ் நூல் - ஆசிரியர் வரிசையும் பொருட்குறிப்பகராதியும்.

---

**குறிப்பு:-** ரோமன் எண்கள் நூலின் நூற்றாண்டைக் குறிப்பன; நாலடியார், சிவஞானபோதம், உலா முதலியவற்றிற்கு முறையே கீழ்க்கணக்கு, தத்துவ நூல்கள், பிரபந்தங்கள் போன்ற பெருந்தலைப்புக்களைப் பார்க்க.

## பிழை திருத்தம்.

பக்கம். 4. 15: பிழை: அண்டு-ஆண்டு: திருத்தம்; 21. 3: தொண்த்-தொண்டத்; 31. 1: மாபரதம்-மாபாரதம்; 36. 13: பதினோராம்; 58-12: பாடல்கல்-பாடல்கள்; 77. 20: ஆவயினுதித்தனன் - ஆவயிற்றுதித்தனன்; 83. 24: குச்சக்ர — குச்சரக்; 138. 23: லணக்கம் — வணக்கம்; 186 18: மாதகர்—மாகதர்; 195. 5: ஈராண்டுகள் — 200 ஆண்டுகள்; 204. 21: மொழிப் பெயர்ப்பு — மொழி பெயர்ப்பு; 205. 18: உயிர்த்துக்கொண்டனர் — உயிர்த்துக்கொண்டிருந்தனர்; 238. 8: பெண்மதிமலை — பெண்மதிமாலை; 255. 12; இலக்கியங்களை — இலக்கியங்களையும்; 257. 7: நகைச்சவை—நகைச்சுவை; 261. 4: கி. பி. — பி. டி.

